கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க!



# கம்பன் மலர்

## 2002








## அயோத்தியா காண்டம் - பாத்திரங்கள்

கம்பன் கழகம்

மணி மேல்நிலைப் பள்ளி வளாகம் * கோவை-641 037



## கடவுள் வாழ்த்து

வான்நின்று இழிந்து வரம்பு இகந்த

மா பூதத்தின் வைப்பு எங்கும்,

ஊனும் உயிரும் உணர்வும்போல்,

உள்ளும் புறத்தும் உளன் என்ப -

கூனும் சிறிய கோத்தாயும்

கொடுமை இழைப்ப, கோல் துறந்து

கானும் கடலும் கடந்து, இமையோர்

இடுக்கண் தீர்த்த கழல் வேந்தே.

* * *

# கம்பன் கழகம்

கோவை - 37.

*நிர்வாகக்குழு :*

தலைவர் : 'கம்பன் அறநெறிச்செல்வர்'

## திரு. ஜி. கே. சுந்தரம்

துணைத்தலைவர்கள் : திரு. சி. சௌந்திரராஜ்
திரு. வி. செல்வபதி

செயலாளர் : திரு. க. மீ. வேங்கடேசன்

இணைச்செயலாளர் : திரு. நா. நஞ்சுண்டன்

பொருளாளர் : திரு. இரா. கோபாலன்

*செயற்குழு உறுப்பினர்கள் :*

திரு. பி. வி. பத்மநாபன்
,, வி. சிவராஜ்
,, மு. மாணிக்கம்
,, கே. வைத்தியலிங்கம்
,, பி. ஆர். ராஜகோபால்
,, பி. லோகசுந்தரம்
,, எஸ். முரளி
திருமதி. மோகனா ரங்கநாதன்
செல்வி. பொன்னம்மாள்

*மலர் பதிப்பாசிரியர் :*

திரு. நா. நஞ்சுண்டன்

# பொருளடக்கம்



# தோரணவாயில்

இருபத்தியோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாம் இப்பொழுது வாழ்ந்து கொண்டிருக்கிறோம். கம்பனின் கனியமுதைப் பருகிக் கொண்டிருக்கிறோம். கால வெள்ளத்தால் அழியாத காப்பியமாகக் கம்ப இராமாயணம் திகழ்கிறது. இன்றைக்குச் சரியாக 1116 ஆண்டுகளுக்கு முன் எண்ணிய சகாப்தம் எண்ணூற்று ஏழின்மேல், பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில் (கி. பி. 886, பிப்ருவரி 23) கண்ணிய அரங்கர் முன்னே தனது இராமாவதாரத்தைக் கம்பன் அரங்கேற்றி, கவிச்சக்ரவர்த்தி என்னும் பெயர் பெற்றான்.





காசுஇல் கொற்றத்து இராமன் கதையினை ஆசைபற்றி அரையலுற்றவன் கம்பன். இராம காதையே தர்மத்தை — அறத்தை வையத்துள் மனிதன் வாழ்வாங்கு வாழ்ந்து காட்டும் நெறியினை, மனிதப் பண்புகளை விளக்கும் மாபெரும் காவியமாகும். இன்றைய சமுதாயச் சிக்கல்களுக்கு விடைகளைத் தேடவேண்டுமானால், கம்பனைப் படித்தால் போதும், எளிதில் கிடைத்து விடும்.

கடந்த 23 ஆண்டுகளாக, கம்பன் கழகம் மலரினை வெளியிட்டுக் கொண்டு வருகிறது. தொடக்க காலத்திலே இதுவரையில் புத்தக வடிவிலே வந்திராத பல அரிய கட்டுரைக் கருவூலங்களைத் தொகுத்தும், பல அறிஞர்களைக் கொண்டு எழுதுவித்தும் மலருக்குப் பெருமை சேர்த்ததோடு, கம்பனை இன்றைய தலைமுறையினர் அறிந்து கொள்ளும் வகையிலும் கட்டுரைகள் அமைக்கப் பெற்றன. பின்னர் 1990 முதல் காண்டம் வாரியாக, கம்பனை நுணுகி ஆராய்ந்து கட்டுரைகள் வெளியிடப்பட்டது. 1998-ல் வெள்ளி விழா ஆண்டின் போது மலர் முழுவதும், பிறமொழியினர் அறியும் வண்ணம், கம்பனின் கவிதா விலாசத்தை, ஆங்கிலக் கட்டுரைகள் மூலம் கொடுத்தோம். பின்னர் வந்த இரண்டு ஆண்டுகளில் பன்மொழி விற்பன்னர் அமரர். என். வி. நாயுடு அவர்களின்

ஆராய்ச்சித் தொகுப்புகள் வெளியிடப்பட்டது. 2001ம் ஆண்டில் காண்டம் வாரியாக பாத்திரப் படைப்புகளைப் பற்றி கட்டுரைகளை வெளியிடுவது என முடிவு செய்து, கடந்த ஆண்டில் பால காண்டப் பாத்திரங்களைப் பற்றிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

இவ்வாண்டு அயோத்தியா காண்டப் பாத்திரங்கள் பற்றிய கட்டுரைகள் வெளியாகின்றன. தயரதன், கைகேயி, கூனி, கோசலை, சுமித்திரை, இராமன், இலக்குவன், பரதன், குகன், சுமந்திரன், வசிட்டன். பரத்துவாசர், மற்றும் மன்னர்கள், அமைச்சர்கள், மாந்தர்கள் பற்றிய, ஆழ்ந்து, அகன்ற நுண்ணிய கருத்துக்கள் கொண்ட கட்டுரைகளை, பாத்திரப் படைப்பை — அவற்றின் குணாதிசயங்களை, பாத்திரத்தின் உயிர் நாடியான சுவையை கோவை வட்டத்திலுள்ள கல்லூரிப் பேராசிரியர்கள் 13 பேரைக் கொண்டு எழுதவைத்த மலர் உங்கள் கையில் மிளிர்கிறது. உரிய காலத்திலே இவற்றை எழுதிக் கொடுத்த பேராசிரியர்கள், புலவர்கள் அனைவருக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இவைதவிர அமரர் வ. வே. சு. அய்யர் அவர்களின் ''கம்ப ராமாயண ரசனை'' என்ற நூலிலிருந்து எடுத்த கட்டுரை ''அயோத்தியா காண்டம்'' பற்றியது வெளியிடப் படுகிறது. கோவை கம்பன் கழகத் தலைவர் திருமிகு. ஜி. கே. எஸ். அவர்களின் பொதுத் தலைப்பிலான ''அயோத்தியா காண்டம் ஒரு சிறப்புப் பார்வை'' கட்டுரை வருகிறது. 35 ஆண்டுகளாகக் கம்பனைக் கேட்டும், பேசியும், ரசித்த பெருமகனார் அவர். பல்வேறு வேலைகளுக்கிடையிலேயும், தனது தள்ளாத 89-ம் வயதிலேயும் கம்பனைப் பார்த்த பார்வை சுவைத்து மகிழத்தக்கது.

ஏறத்தாழ 120 பக்கங்களுக்குக் கட்டுரைத் தொகுப்புகள் வந்திருக்கின்றன. ரசித்து, படித்து மகிழ்ந்து கம்பனைப் போற்றுங்கள். இன்னும் எத்தனை நூற்றாண்டுகள் வந்தாலும் கம்பன் காவியம், நிலவுலகில் நிலைத்து நின்று, கம்பன் பெருமையை — புகழை பறைசாற்றிக் கொண்டே இருக்கும் என்பதில் ஐயமில்லை.

மலரில் தங்கள் நிறுவனங்களின் விளம்பரங்களைக் கொடுத்துதவிய பெருமக்களுக்கும், விளம்பரங்களைப் பெறுவதில் உறுதுணையாக இலட்சுமி ஆலை ஊழியர்கள், துறை மேலாளர்கள் ஆகியோருக்கும், மலரை அழகுற அச்சிட்ட கீதாஞ்சலி அச்சகத்தாருக்கும், குறிப்பாக திரு. கோபிநாத்துக்கும் எங்கள் கனிவான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மலர் வேலைகளில் உடனிருந்து ஒத்துழைப்புக் கொடுத்த செயலர் திரு. க. மீ. வேங்கடேசன் அவர்களுக்கும் எனது நன்றி.

கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வளர்ப்போம்!

மிக்க அன்புடன்

9—2—2002
கோவை

**நா. நஞ்சுண்டன்**
(இணைச்செயலர்)
மலர்ப் பதிப்பாசிரியர்

## கம்பன் கழகம் - கோவை

## 30 - ஆம் ஆண்டு

# கம்பன் விழா



" கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம் "

இடம் : மணி மேல்நிலைப்பள்ளி-நானி கலையரங்கம்
பாப்பநாயக்கன்பாளையம்
கோயமுத்தூர் - 641 037

நாள் : 9, 10 பிப்ரவரி 2002

9-2-02 சனிக்கிழமை மாலை 5-30 மணி

## விழா மங்கலம்

தலைவர் : திரு. ந. கோவிந்தசாமி

இறைவணக்கம்
மலர்வணக்கம் } செல்வியர் ஹரிணி, உமா

வரவேற்புரை : திரு. ஜி. கே. சுந்தரம்

மலர் வெளியீடு : திரு. தி. முருகேசன்

மலர் பெறுதல் : திருமதி என். யசோதாதேவி

பேச்சுப்போட்டி
பரிசுகள் வழங்கல் :

தலைவர் உரை : திரு. ந. கோவிந்தசாமி

---

9-2-02 சனிக்கிழமை மாலை 7-00 மணி

## வழக்காடு மன்றம்

நடுவர் : திரு. அ. அறிவொளி

வழக்கு : " மூல நூலில் பல இடங்களில் மாற்றம்
செய்த கம்பன் குற்றவாளியே"

வழக்குத் தொடுப்பவர் :
பேராசிரியர் ஜோதி இராமகிருஷ்ணன்

வழக்கை மறுப்பவர் : பேராசிரியர் த. கு. சுப்ரமணியம்

10-2-02 ஞாயிறு காலை 10-00 மணி

## எழில் உரை

பேசுபவர் : திருமதி இளம்பிறை மணிமாறன்

பொருள் : "கம்பன் பன்முக மேதை"

---

காலை 11-00 மணி

## சுழலும் சொல்லரங்கம்

நடுவர் : முனைவர் : திரு. கி. சேகர்

பொருள் : "எண்ணிய எண்ணியாங்கு
எய்திய பாத்திரம்"

சொல்லாடுவோர் :

செல்வியர்கள் : ஸ்ரீவித்யா - ரேணுகா - ஸ்ரீதேவி

செல்வர்கள் : பாரதி பிரகாஷ், யுவராசு
ம வினோத்பிரகதீஷ்

---

மாலை 5-00 மணி

## இசையரங்கம்

கம்பன் அருட்கவி ஐந்து

(அவினாசிலிங்கம் மனையியல் நிகர்நிலைப்
பல்கலைக்கழக இசைக்குழு.)

பங்கேற்போர்

செல்வியர் : ஆர். வித்யா - சி. எம். சிவசக்தி

டி. சசிகலா - டி. மஞ்சுளா - சி. அனுராதா

நெறிப்படுத்துபவர் : பேராசிரியர் டாக்டர் ஆர். கலைவாணி

10-2-02
ஞாயிறு

மாலை
6-00 மணி

## பட்டி மண்டபம்

நடுவர் :

பேராசிரியை திருமதி இளம்பிறை மணிமாறன்

பொருள் : "இராமனை மானுடனாகப் பெரிதும்
வெளிப்படுத்திய காண்டம்"

| அயோத்தியா காண்டமே | ஆரண்ய காண்டமே |
|---|---|
| திரு. கி. சேகர் | திரு. நாஞ்சில் நெடுமாறன் |
| திருமதி செல்லாத்தாள் | திருமதி அருணா சந்திரசேக |
| திரு. சொ. சேதுபதி | திரு. க. முருகேசன் |

யுத்தகாண்டமே

திரு. த. கு. சுப்ரமணியன்

செல்வி மலர்விழி

திரு. மா. நடராஜன்

# அயோத்தியா காண்டம்

# சிறப்புப் பார்வை

*

கம்பன் அறநெறிச்செல்வர்
**திரு. ஜி. கே. சுந்தரம்**

ராஜாஜி அவர்கள் சக்கரவர்த்தித் திருமகன் என்ற தொடரில் இராமாயணத்தைக் கல்கி வார இதழில் எழுதி வந்தார்கள். இதனையே இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் திரு. கோயங்கா அவர்கள் ஆங்கிலத்தில் வெளியிட்டார்கள். இதனால் தமிழ் அறியாத மக்களிடமும் இராமாயணத்தின்மீது ஆர்வம் ஏற்பட்டது. அதுமட்டும் அல்லாமல் இந்திய நாட்டில் அன்றி வெளிநாடுகளிலும் இந்த ஆங்கில இராமாயணத்திற்கு நல்ல வரவேற்பு ஏற்பட்டது. உலக அரங்கில் நமது இதிகாசங்களாகிய மகாபாரதமும், இராமாயணமும் பிரசித்தமாகி உலக மகாகாவியங்களின் பட்டியலிலும் இடம் பெற்றது.

கம்பன் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவனானாலும் தீர்க்கதரிசி ஆதலால் அந்தக் கவிஞரின் மனம், அவன் காலத்தில் இந்திய நாட்டில் எவ்வளவோ காவியங்களிருந்தும் அவற்றில் ஈடுபடாமல் இராமாயணத்தைத் தேர்ந்தெடுத்ததன் காரணத்தை இப்பொழுது நம்மால் ஊகிக்கமுடிகின்றது. வான்மீகிராமாயணம் வேத மொழியாகிய சமஸ்கிருதத்தில் இருந்தமையால் நீண்ட காலம் மக்கள் புழக்கத்தில் இருந்தது. ஆனால் ஆங்கிலேய ஆட்சி முடிவிற்கு வந்தபின்புதான் தமிழ் முக்கியத்துவம் அடைந்தது.

நம்காலத்தில் சா. கணேசன் நீதிபதி இஸ்மாயில் போன்றவர்கள் கம்பன் விழாவின் மூலமாக இராமகாதையை மிகவும் வெளிப்படுத்தியுள்ளனர்.

மேலும் பெருமை என்னவென்றால் ராஜாஜி எழுதிய பாரதமும், இராமாயணமும் சென்ற 50 ஆண்டுகளில் லட்சம் பிரதிகள் விற்பனை ஆகியுள்ளன. இதனை முன்னிட்டு முன்னாள் ஜனாதிபதி ஆர். வெங்கட்டராமன் அவர்கள் மும்பை பாரதீய வித்யாபவன் மூலமாக விழா எடுத்திருக்கின்றார்.

இந்த முன்னுரையுடன் இந்த ஆண்டு மலரில் அயோத்தியா காண்டத்தின் சிறப்பைக் காண்போமாக.

அயோத்தியா காண்டத்தில் 12 படலங்கள் உள்ளன. அவற்றில் மந்திரப் படலம் கங்கைப் படலம், குகப்படலம், வனம் புகுப்படலம், சித்திர கூடப்படலம், போன்றவை மகிழ்ச்சியான சூழ்நிலைகளைக் கொண்டவை. மந்தரை சூழ்ச்சிப்படலம், ராமனது

முடிசூட்டு விழாவைக் கேட்ட நகர மாந்தர் மகிழ்ந்து நகரத்தை அலங்காரம் செய்வது வரை மகிழ்வையும், கூனியின் கோபம் தொடங்கிப் பின்வருபவை சூழ்ச்சியையும், பழிவாங்கும் தன்மையையும் கொண்டவை.

இதன் பின்பு வரும் கைகேயி சூழ்வினைப் படலம், நகர் நீங்கு படலம் தொடங்கி 13ஆவது திருவடி சூட்டுப்படலம் அனைத்திலும் வரும் செய்திகள் கதையில் உள்ள பாத்திரங்களுக்கும் இராமாயணத்தைப் படிப்போர்க்கும் எதிர்பாராத சோகத்தையும், இரக்க உணர்வையும் பெரிதும் உண்டாக்குவன.

அயோத்தி மன்னன் தசரதன் ஏகச்சக்கராதிபதியாக இருந்தார். தனக்குப்பின் கோசல நாட்டைப் பாதுகாப்பதற்கும் ஆட்சி செய்வதற்கும் உரிய திட்டத்தை அதாவது இராமனுர்குப் பட்டம் சூட்டவேண்டும் என்ற மனக் கருத்தோடு மந்திராலோசனை மண்டபத்திற்கு வந்து மந்திரக் கிழவர், வசிட்டன், அமைச்சர்கள் அனைவரையும் கூட்டி தன் கருத்தைத் தெரிவித்தான். இந்த சந்தர்ப்பத்தில் நாம் ஒன்றை நுணுக்கமாக காண முடிகிறது. அதாவது தசரதன் இராமனுக்கு முடிசூட்டுகின்ற திட்டத்தைக் கூறி பிறரது கருத்துக்களைப் பற்றிக் கவலைப்படாமல் முடிபுனைவதற்குரிய விழா ஏற்பாடுகளை செய்யும்படி சர்வாதிகாரி போல் கட்டளையே இட்டு இருக்கலாம். ஆனால் அவன் அப்படி செய்யாமல் முடி ஆட்சி செய்த அவனே ஜனநாயகப் பண்போடு அரசு அங்கத்தினர்களையும் கேட்டு முடிவெடுக்கக் கூடிய தன்மையில் பேரரசனாகிய தசரதன் நடந்து கொண்டது அவன் மக்களுக்கும் அரசாங்க அலுவலர்களுக்கும் கொடுத்த உயர்ந்த மதிப்பைக் காட்டுகின்றது.

இதன் பின்பு இராமனை அழைத்து செய்தி சொல்லுவதும் மற்ற அரசர்களுக்கு ஓலை போக்கி, அவர்கள் வந்த பின்பு தன் விருப்பத்தை எடுத்துக் கூறிய போது அவர்களை நோக்கி நீங்கள் என் கருத்துக்கு இசைந்தது எதனால் என்று கேட்பதும் அவனது பரந்த ஜனநாயகப் பண்பைக் காட்டுகின்றது.

இதன் பின்பு இராமனுக்கு வசிட்டன் மூலம் அரசியல் அறங்களை எடுத்துக் கூறச் செய்த தன்மையும் புதிதாகப் பொறுப்பு ஏற்றுக் கொள்பவர்களுக்கு அனுபவப்பட்டவர்கள் அரசியல் தர்மங்களை எடுத்துக் கூறச் செய்ததும் சிறந்த மரபைக் காட்டுகின்றது.

இராமன் முடிசூட்டிக் கொள்வதற்கு முன்பு அவனுக்குச் செய்கின்ற சடங்குகள், எல்லாம் முடிந்தன. ஆனால் நாமொன்று நினைத்தால் தெய்வம் ஒன்று நினைக்கும் என்ற கருத்திற்கேற்ப கூனியின் செயலால் குழப்பம் தொடங்கி பட்டாபிஷேகமே நடைபெறாத சூழ்நிலைக்குப் போய்விட்டது.

வள்ளுவன் முரசு அறைந்து இராமன் முடிசூட்டு விழாவைப் பறைசாற்றுவதையும் நகரமாந்தர் நகரை அழகு செய்வதையும் கண்ட கூனி கைகேயியின் அரண்மனைக்குச் சென்றாள்.

கூனியைச் சந்திக்கின்ற வரை கைகேயியின் உள்ளம் தெளிந்த நீர் நிலை போல, கறைபடியாத நிலவைப் போலத் தூய நிலையில் இருந்தது. கூனி உறங்கிக் கொண்டிருந்த கைகேயியினது காலைத் தீண்டியதுமே கைகேயியின் பரிசுத்தமான பால் போன்ற உள்ளம் கூனியின் உரையாலும் விஷமாக மாறியது. அதுவரை கைகேயி தானே

வளர்த்த, தன்னுடனேயே இருந்த, தன்னைத் தெய்வமாக மதித்த இராமன் மீது இரு ந்த ஆழங்காண முடியாதிருந்த அன்பும் பாசமும் மறைந்து போய் அத்தனையும் பரதன் மீது சாய்ந்து விட்டது. இதற்குக் காரணம் அவதார நோக்கம் நிறைவேறுவதற்குத்தான் எனச் சொல்லுவார்கள். ஆனால் கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்ற மொழிக்கு ஏற்ப கைகேயினுடைய மனம் கோசலைக்கு வரும் நல்ல வாய்ப்பையும், சீதைக்கு ஏற்படப்போகும் பெருமையை ஏற்றுக் கொள்ள முடியாமலும், அவர்களுக்கு வரும் உயர்வால் தனக்கு அது நாள் வரை தசதரன் காட்டிய அன்பும், பெருமையும் எங்கு குறைந்து விடுமோ என்ற பயமும் அவளைக் கவ்விக் கொண்டிருக்க வேண்டும். இது சாதாரண மான மானிடர்களுக்கு ஏற்படும் அச்சம் தான். இந்த நிலையை இப்பொழுதும் கூட பலரது குடும்பங்களில் ஏற்படுவதும், அதனால் குடும்பத்தில் பிரிவும் குழப்பங்களும் விளைவதை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். சாதாரண குடும்பங்களுக்கு இந்த நிலை என்றால் அ'சாட்சி, அதிகாரம், அந்தஸ்த்து, போன்றவற்றில் உயர் ந்து விளங்கும் கைகேயிக்கு ம., மாற்றம் ஏற்பட்டதில் எந்த குறையும் காணுவதற்கில்லை.

இது இப்படி இருக்க தசரதன் தன்னை காண வரும்போது அவள் அலங்கோல நிலையில் கிடந்தாள். நகரத்திலும் நாட்டிலும் ராமனது பட்டாபிஷேகம் சுருதி எல்லாம் குதூகலமாக இருக்க கைகேயியினது அலங்கோலத்திற்குக் காரணத்தை அறியமுடியாத வனாகிய தசரதன் அவளை மகிழ்விக்க முயல்கிறான். என்ன வேண்டுமென்றும் கேட்கிறான். அவள் தனக்கு வரம் வேண்டுமென்று கேட்கிறாள். இந்த நிலையிலும் தசரதனுக்கு சம்பராசுரப் போரில் அவள் உதவியமைக்காகக் கேட்டிருந்த வரங்களைப் பற்றி அவன் நினைக்கவுமில்லை, ஏறத்தாழ மறந்தே இருந்தான் என்று தோன்றுகிறது. ஆனால் கைகேயி தனக்கு ஒரு வரம் வேண்டுமென்று கேட்ட போது அவள், தான் விரும்பிய ஏதோ ஒரு பொருளைக் கேட்கப் போகிறாள் என்பதை ''கள் அவிள் கோதை கருத்து உணராத மன்னன்'' மின்னலைப் போல நகைத்து ''உள்ளம் உவந்து செய் வேன் ஒன்றும் உலோவேன் வள்ளல் ராமன் உன் மைந்தன் ஆணை'' என்றும் என்பால் இறங்கிட வேண்டுவதில்லை ஈவேன் இப்பொழுதே பகர் ந்திடு என்று அவளது உறம் கொள் மனத்தின் வஞ்சம் நினைக்காமல் வாக்குக் கொடுத்து விட்டான். பின்பு அவள் பரதன் நாடாள வேண்டும் இராமன் காடேக வேண்டும் என்று கேட்ட பொழுதுதான் அவனுக்கு சம்பராசுரப் போர் நிகழ்ச்சியில் வாக்குக் கொடுத்தது நினைவுக்கு வந்திருக்க வேண்டும். இதே சூழ்நிலையில் கூனி தன் மனதைக் கலைக்கும் வரை கைகேயியும் அந்தப் பழைய வரம் பெற்ற நிகழ்ச்சிகளை அறவே மறந்திருந்தது தெரிகிறது.

கூனி காலைத் தீண்டியதனாலும், அவளது துர்போதனை யாலும்தான் கைகேயியின் தூய மனம் மாறியது என்று சொல்வதற்கு மேலாக இங்கு உலகியல் அளவில் ஒன்றை எண்ணிப் பார்க்க வேண்டும்.

கைகேயியின் மனதில் ஏற்கெனவே தன் மகன் பரதன் மன்னன் ஆகவேண்டும் என்ற எண்ணத்தின் பொறி இருந்திருக்க வேண்டும். அது அந்த நாள் வரை வெளிப்படாமல் இருந்தது. கூனியின் போதனை கிடைத்தபோது வெளிப் பட்டுவிட்டது என்று கூறலாம்.

ஏனெனில் இந்த அடிப்படையில் பார்க்கும் போது வான்மீகி கம்பன் இருவருக்கும் பின்பு பல ஆண்டுகள் தோன்றிய உலக இலக்கியங்களில் பெரும்பாலானவற்றில் கூட இந்தக் கருத்துக்களே வந்திருப்பதை அறியலாம்.

பெண்ணின் மனதில் எந்த ஆசை எப்படி இருந்தது அது எப்பொழுது வெளிப் படும் என்பதை எவரும் அறியமுடியாது என்பதற்கு இவை எடுத்துக் காட்டுக்களாகும்.

விளையாட்டு வினையாகும் என்ற ஒரு பழமொழி உண்டு. யாரிடத்தில் எப்படிப் பழக வேண்டும், எப்படி விளையாட வேண்டும், நமது செயல்களை அடுத்தவர் எப்படி எடுத்துக் கொள்ளப் போகிறார் என்ற செய்திகளைக் கவனக் குறைவால் செய்து விட்டால் அதன் விளைவு பின்பு விஸ்வரூபம் எடுத்து பூதாகாரமாகத் தோன்றி பெரிய கெடுதல் களை ஏற்படுத்திவிடும் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டிய நிலையில், ராமன் சிறுவனாக இருக்கும் போது கூனியின் வளைந்த முதுகினில் விளையாட்டாக அம்பின் நுனியில் மண்உருண்டைகளைக் கட்டி அவள் முதுகு காயப்படாத வகையில் இராமன் எய்து விளையாடியதை கொடுமனக் கூனி, குழந்தை விளையாட்டாகக் கொள்ளாமல் தன் பழியைத் தீர்த்துக் கொள்வதற்குத் தக்க சமயத்தில் கைகேயியைத் தூண்டி விட்டு எந்த மண்ணால் தன்னை அவமானப்படுத்தினானோ அந்த மன்னனுக்கு மண் ஆட்சி இல்லாமல் செய்து விட்டாள்.

இது போன்ற நிகழ்ச்சி இப்பொழுதும் அரசியலில் அவ்வப்போது நடப்பதைப் பார்த்து வருகிறோம்

தற்காலத்தில் வீட்டின் தலைவர் ஒரு காரியத்தில் முடிவெடுத்திருந்தாலும், அந்த வீட்டின் பெண்டிர்களால் அறவே முறியடிக்கப்படுவதும் வழக்கத்தில் இருக்கிறது. இதை ஆங்கிலத்தில் (KITCHEN POLITICS) என்று கூறுவார்கள். அதுபோலவே இராமனது முடிசூட்டு விழாவும் தசரதனால் முடிவு செய்யப்பட்டு கைகேயியால் முறியடிக்கப் பட்டது.

இந்த சூழ்நிலைக்குக் காரணம் தசரதனிடம் இருந்த சில குறைபாடுகள் எனக் கருதலாம். பட்டத்தரசியர் மூவர் இருக்க தசரதன் கோசலையோடும், சுமித்திரை யோடும் பழகிய செய்திகளே இராமாயணத்தில் எங்கும் பேசப்படவில்லை. உயிர் விடும் தருணத்தில்தான் கோசலையிடம் சிரவணகுமாரன் கதையையும் அவன் தந்தையிட்ட சாப வரலாற்றையும் கூறி அமைதி பெறுகிறான். இந்த சந்தர்ப்பத்தில் கூட சுமித்திரை யோடு அவன் பேசியதாக செய்திகளில்லை. கைகேயியின் மீது வைத்த அபரிமிதமான காமம் அல்லது அன்பின் பலவீனத்தால் ஏற்பட்ட பின்விளைவே இது; அவள் சொல்லைத் தட்டவும் முடியாமல் ஏற்கவும் முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பானான். இதைத் தான் திருவள்ளுவர் பெண் வழிச் சேரல் என்ற அதிகாரத்தில் அரசனுக்குக் கூடாத இயல்பைக் குறிப்பிட்டுள்ளான்.

கைகேயி சூழ்வினைப் படலத்தில் வரும் செய்தியில் அரச குடும்பப் பெண் களுக்கும் அரசியலில் தலையிடுகின்ற தன்மை இருந்திருப்பதை அறிய முடிகின்றது. இந்த நிகழ்ச்சிக்குப்பிறகு அறவுரை சொல்லுவதோ தசரதன் செயலையும் கைகேயி யினுடைய செயலையும் குரல் கொடுத்து பேசுவதில் அரச குடும்பத்தினர் மட்டுமே வெறுப்பையும், சினத்தையும் காட்டியுள்ளார்கள். முன்பு மந்திராலோசனையின் போது தசரதனுக்கு கருத்தைத் தெரிவித்த வசிட்டனைத் தவிர யாரும் பேசவில்லை என்பதை அறிகிறோம். ஆனால் இராமனுக்கு நாட்டு ஆட்சி இல்லை வனந்தான் புக வேண்டும் என்ற செய்தியைக் கேட்டு மக்களும் மற்றவர்களும் வருத்தப்பட்டார்களேயல்லாமல் தம் கருத்தைச் சொல்லுவதற்கு வாய்ப்பு இருக்கவில்லை என்பதை அறியலாம். லக்ஷ்மணன்

கோபித்துக் கொள்வது, .கோசலை வருந்துவது, சுமித்திரை வருந்துவதெல்லாம் வருத்தப் படுகின்ற அளவிலேயே நின்று விடுகிறது. லக்ஷ்மணனை மட்டும் இராமன் அடக்குகின்ற தன்மைக் காணப்படுகின்றது.

தன்னுடன் பின்தொடர்ந்த மக்களை இராமன் அவர்கள் உறங்கும் போது அவர்களும் அறியாதவாறு சுமந்திரனை நகரத்துக்கு அனுப்பி விட்டு. இராமன், சீதை இலக்குவன் மூவரும் தனியே வனத்துக்குள் சென்ற நிகழ்ச்சியால் தனக்கு நேர்ந்த துன்பம் தன்னோடு போகட்டும் மக்களும் துன்பப்படக் கூடாது என்று மக்களை அன்பினால் ஏமாற்றிய செயல், மக்கள்பால் இராமன் கொண்ட பெரிய கருணையைக் காட்டுவதாகும்.

குகனது வருகையும் அவன் இராமனை தரிசித்ததும் அவனுக்கு எதையும் எதிர்பாராத பக்தியின் சிறப்பை உணர்த்தும். குகனுடைய சந்திப்புத்தான் இராமனுக்கு ஜாதி, மத உயர்வு, தாழ்வு போன்ற எந்த வேறுபாடு உணர்வுகளும் இருக்கவில்லை என்பதை உணர்த்தும் முதல் நிகழ்ச்சியாகும். அவன் கொடுத்த தேனையும், மீனையும் ஏற்றுக்கொண்ட அழகும் ஆச்சாரமுடைய முனிவர்களுடைய முன்னிலையில் குகனுக்கு இராமன் அளித்த சிறப்பும் இவ்வுலகிற்க்கு நமது புராணங்கள் பறைசாற்றுகின்ற மனித நேயப் பண்பாட்டின் முதல்படியாகும்.

முதல் காட்சியிலேயே இராமனுக்காக கண்ணைத் தோண்டிக் கொள்ளுகின்ற அளவிற்கும் உயிரைவிடச் சித்தமாக இருந்தமையும் நட்பின் உச்ச நிலைக்கு உதாரணங்கள்.

அடுத்து பரதன் நகருக்குத் திரும்பி வந்த போது இருந்த அவலச் சூழ்நிலை தன் தாயாரால் ஏற்பட்டது என்பதை அறிந்து அவன் பட்ட துன்பங்கள் எல்லாம் கைகேயிக்குப் பெருத்த ஏமாற்றத்தை அளித்திருக்கும். தனது அரிய செயலால் பரதன் பட்டம் ஏற்பான் என்ற எண்ணம் கைக் கூடாதபோது தான், அவளுக்கு தான் நினைத்ததை அடையமுடியாத ஏமாற்றமும், அதனால் ஏற்பட்ட பழியும், அவளை இறுதிவரை பேசா மடந்தையாக்கிவிட்டது.

தசரதன் எப்படி அன்பிற்குரிய மனைவி கைகேயினிடத்தில் ஏமாந்து போனானோ அதைப்போல கைகேயி தான் பெற்றெடுத்த அன்பிற்குரிய பரதனால் ஏமாற்றத்தை அடைந்தாள். யாருக்கு நன்மை செய்ய வேண்டுமென்று கருதினாளோ அது கைகூடாமற் போயிற்று. எனவே எல்லாக் கோணங்களிலிருந்தும் அவள் மீது கோபமும், வெறுப்பும் வந்து தாக்கியதனால் அவள் யாரிடமும் பேசமுடியாதவளாகிவிட்டாள்.

இந்த மாதிரியான சூழ்நிலை நம் வாழ்க்கையில் கூட பலருக்கு ஏற்பட்டிருக்கும். இதுபோன்ற சூழ்நிலைகளைப் படித்தவர்கள் இக்கட்டானச் சந்தர்ப்பங்களில் என்ன செய்ய வேண்டும் என்பதை ஆழமாகச் சிந்திக்க வேண்டும் என்ற நீதியையும் நமக்குப் புகட்டுகின்றது.

பரதன் கோசலையைச் சந்திக்கின்றான்; அங்கு ஒரு இக்கட்டானக் கட்டம். அதாவது கோசலை பரதனிடம் கைகேயியின் வஞ்சனையை நீ அறியாயோ என்று ஒரு வார்த்தையைக் கேட்டு விடுகிறாள். அச்சொல் பரதனின் உள்ளத்தை சுறுக்கென்று குத்திவிட்டது. ஏனென்றால் பரதனுக்கும் தெரிந்ததுதான் கைகேயியின் செயல் நடந்திருக்க வேண்டுமென்று பரதன் நினைத்ததன் விளைவாக அவன் கோசலையிடம், கைகேயி

செய்தது தனக்கும் தெரிந்திருந்து அதனைத் தான் மறைத்திருந்தால் என்னென்ன பாவங்களுக்கு ஆளாக வேண்டுமென்று ஒரு 56 பாவங்களை அடுக்கிச் சொல்லுகின்றான். அவற்றைக் கேட்டதும் கோசலை பரதன் உள்ளம் தூயவன் எனப் புரிந்து கொண்டு பரதனைத் தேற்றும்போது ''மன்னர் மன்னவா'' எனவும் கூறி அவனைப் போல் சூரிய குலத்தில் தோன்றியதுமில்லை; இனித் தோன்றப் போவதுமில்லை என்று வாழ்த்தினாள்.

அதுமட்டுமல்ல கைகேயி தன் மகனை மன்னன் ஆக்குவதற்காகத்தான் தகுதியற்ற காரியங்களைச் செய்தாள். ஆனால் கைகேயி முதல் பட்டத்தரசியுமல்ல. ஒருவனை அரசனாக்குவதற்கு அரசிகளுக்குள் முதல் மரியாதையுடையவள், மன்னனின் முதல் மனைவியாகிய கோசலைக்கே அத்தகுதி உண்டு. எனவே பரதனை மன்னன் என்று மட்டும் சொல்லாமல் ''மன்னர் மன்னவ'' என்று அழைத்ததனால் தன் உரிமையையும் நிலைநாட்டிக் கொண்டதோடு கைகேயியினுடைய எண்ணத்தையும் ஒருவிதமாக நிறைவேற்றியவளானாள்.

திருவடி சூட்டுப் படலத்தில் பரதன் இராமனை நாட்டுக்கு அழைத்தது அரசாட்சியை ஏற்றுக் கொள்ளும்படி சொன்னது எல்லாம் சோகத்தோடும் பரிதாபததோடும் நிகழ்கின்றது. இக்கட்டத்தில் பரதன் இராமனை ஆட்சியை ஏற்றுக் கொள்ளும்படி சொல்லுவதும் இராமன் அதனை மறுத்ததும் தந்தையின் சொல்லைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்லுவதும் மிகச் சுவையான ஒரு கட்டம். இறுதியில் தந்தை தனக்குத் தந்த ஆட்சியை தன் உரிமையால் இராமனுக்குத் தந்து ஏற்றுக் கொள்ளும்படி வேண்டும் போது இராமனும் மறுக்கிறான். வசிட்டருடைய அறிவுரையின் பேரில் பரதன் ஒரு நிலைமைக்கு வருகின்றபோது இராமன் பரதனால் தனக்கு அளிக்கப்பட்ட ஆட்சி உரிமையை மானசீகமாக ஏற்றுக்கொண்டதைப் போலவும் அவ்வாறு தனக்கு வந்த கோசலை நாட்டு ஆட்சியை தன் கட்டளைப்படி பரதனை ஏற்றுக்கொள்ளச் செய்ததும் இக்கால அரசியல்வாதியின் பார்வையில் ஒரு ஏமாந்த சோணகிரித்தனமாகத் தான் தோன்றும். ஏனென்றால் இப்போது இந்திய நாட்டு அரசியலில யாரை எப்படிக் கவிழ்ப்பது, நாற்காலியைப் பிடிக்கலாமென்ற சூழ்ச்சியிலேயே இயங்குபவர்கள், அப்படியே ஒருவரைக் கவிழ்த்து மற்றவர்கள் ஆட்சி பீடம் ஏறினாலும், இராமன் அனுமதியோடு பெற்றுவந்து நந்திக் கிராமத்தில் அரியணையில் பேசாமலும், இயங்காமலும் வீற்றிருந்த இராமபாதுகையின் ஆட்சியை அவர்கள் கனவிலும் நினைக்க முடியாது. தற்கால அரசியல் மனிதர்கள் செய்யமுடியாத நல்லாட்சியை பாதுகைகளே செய்தன என்பதை காந்தியடிகள் கற்பனை செய்த இராம இராஜ்ஜியத்தைப் பற்றி சொற்பொழிவுகளில் வானளாவப் பேசுகின்ற தற்கால அரசியல்வாதிகள் அயோத்தியா காண்டத்தின் திருவடி சூட்டுப் படலத்தை இனிமேலாவது படித்து நல்லாட்சி புரிவார்களாக.

இந்தக் கருத்துக்களோடுப் பார்க்கும்போது அயோத்தியா காண்டம் இராமாவதார கதைப்போக்கிற்கு உதவுவதோடு நாம் வாழ்க்கையில் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகளையும் தரும் ஒரு சிறந்த காண்டமாகும்.



# கம்ப இராமாயண ரசனை

## அயோத்தியா காண்டம்

*

அமரர். வ. வே. சு. ஐயர்

ராவண வதத்தையே ராமாயணத்தின் வஸ்துவாக வால்மீகி பகவான் அமைத்தது போலவே கம்பனும் அமைத்திருக்கிறான். இவ்வஸ்துவின் ஒருமையைக் கம்பன் மறப்பதே இல்லை. முக்கியமான கட்டங்களிலெல்லாம் அவன் தனக்கும் படிப்போருக்கும் அதை நினைவுறுத்திக் கொண்டே செல்லுகிறான். பாலகாண்டத்தில் ராமனால் அடிப்பட்டுத் தாடகை விழும்போது அவள்,

"...................... தலைகள் தோறும்
முடியுடை அரக்கற்கு அந்நாள் முந்திஉற் பாத மாகப்
பிடியிடை அற்று வீழ்ந்த வெற்றிஅம் பதாகை ஒத்தாள்".

என்று வஸ்துவை உபமானத்தின் வாயிலாகக் காட்டுகிறான். அவ்விதமே மந்தரையின் சூழ்ச்சியினால் கைகேயியின் மனம் கலைந்து மாறியபோது,

"... ... ... ... ... ... ... ... ... ... ... இமையோர்
மாயை யும், அவர் பெற்றநல் வரம் உண்மையாலும்,
ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத் தாலும்,"

"... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்"

துரக்கவேதான் நல் அருள் துறந்தனள் அத் 'தூய்மொழி'. கடைசியாக ராவணன் போர்க் களத்தே பட்டு வீழ்ந்து கிடக்கையில் மண்டோதரி வந்து புலம்பும்போது, கம்பன் அவள் வாயில் இம் முத்தாய்ப்பை வைத்து விடுகிறான். அஃதாவது :

"காந்தையருக்கு அணி அனைய சானகியார்
பேர்அழகும் அவர்தம் கற்பும்,
ஏந்துபுயத்து இராவணனார் காதலும், அச்
சூர்ப்பநகை இழந்த மூக்கும்,
வேந்தர்பிரான் தயரதனார் பணியினால்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார்
பெருந்தவமாய்ப் போயிற்று, அம்மா !"

அச்சம்பவங்கள் அனைத்தும் பளிங்குக் கற்கள் போல நின்று ராவண வதமாகிய மண்டபத்தைக் கட்டவே கருவியாக நிற்கின்றன என்பது கவியின் அபிப்பிராயம். ஏனெனில், ராவண வதம் இன்றி இந்திரன் சுயராஜ்ஜியத்தை அடைவது எங்ஙனம்?

இந்த வஸ்து ஒருமை உணர்ச்சி அயோத்தியா காண்டத்திலிருந்துதான் உண்டாகிறது என்று ரசனை என்ற பகுதியில் கூறினோம்.

அயோத்தியா காண்டத்தினின்று கதையானது மத்தகஜத்தின் நடையோடு, கங்காப் பிரவாகத்தின் கமனத்தோடு ராவண வதம் வரை செல்லுகிறது. உபாக்கியானங்களுக்காக வேனும், மந்திராலோசனைக் காகவேனும் கதை நிற்கிறதே என்றால், அது இயற்கையை யொட்டியே அவ்வாறு நிற்கின்றது. வனராஜனான கஜேந்திரனும் அங்கங்கே ஆகாரத்துக்காக நிற்கிறான்; அங்கங்கே இளைப்பாறுகிறான். கங்கா நதியும் சம தடத்தில் வேகம் குறைகிறது. யமுனை முதலிய உப நதிகளின் நீரை ஏற்றுக் கொள்ளுகையில் வேகத்தைத் திரும்பப் பெற்றுக் கண்டோர் வியக்கச் செல்லுகிறது. கிளை நதிகளையும் கால்வாய்களையும் நிரப்பிக் கொண்டு சற்று ஆலசியமாக நடக்கிறது. ஆனால், ஆலசியமெல்லாம் அடுத்த கட்டத்தில் இரண்டு பங்கு வேகமாகச் செல்லுவதற்காகத்தான். கடைசியில் சமுத்திர ராஜனோடு கலப்பதற்கு முன் கங்காதேவியின் அழகையும் காம்பீர்யத்தையும் வாயால் வர்ணித்துச் சொல்ல ஒண்ணுமோ? தேவர்களும் கண்டானந்திக்கத் தகும் காட்சியன்றோ கங்காதேவியின் சமுத்திர சங்கமம்! இத்தகைய வேகமும், ஓட்டமும், பொலிவும் இருக்கிறது கம்ப ராமாயணத்தில்.

அயோத்தியா காண்ட ஆரம்பத்தில் சக்ரவர்த்தி ராமனுக்குத் தன் கையாலேயே முடி சூட்டவேண்டும் என்ற கருத்துடன் மந்திரக் கிழவரை அழைத்து அனுமதி கேட்கிறான்.

'ஊருணி நிறையவும் உதவு மாடுஉயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்,
கார்மழை பொழியவும், கழனி வாய்நதி
வார்புனல் பெருகவும், மறுக்கின் றார்கள்யார்?'

ஆகையால் மந்திரக் கிழவர்களின் பிரதிநிதிகளாக நின்று வசிஷ்டனும் சுமந்திரனும் ராமனுக்கு முடிசூட்ட அரசனுக்கு அனுமதி கொடுக்கிறார்கள். எல்லாம் செவ்வனே நடந்தேறிப் பட்டாபிஷேகமும் அழகு பெற நிறைவேறும் என்று படிப்போருக்குத் தோன்றுகிறது. ஆனால், இல்லை.

''இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை போல்
துன் அருங் கொடு மனக் கூனி''

தோன்றி விட்டாள். ராமனிடம் பரமபிரேமை செலுத்துவதாக நினைத்துவந்த கைகேயியின் மனத்தையும் கலைத்து விட்டாள். ஆகவே,

''தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி
தூய சிந்தையும் திரிந்தது சூழ்ச்சியின்!''

ராவண வதத்தின் பீஜம் விதைத்தாகிவிட்டது.

விதை விழுந்ததும் என்ன வேகமாக வளரத் துவங்குகிறது! தசரதன் உயிருக்கே ஹானி வந்துவிடும் என்பதை அறிந்தும் கைகேயி அவனுடைய மனத்தை உடைத்து

விட்டு, தான் சொல்லி அனுப்பியதற்கு வந்த தாயென நினைவானான ராமன் முன்னே கூற்றெனத் தமியளாய்த் தோன்றி,

> 'ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள' நீபோய்த்
> தாழ்இருஞ் சடைகள் தாங்கித் தாங்குஅருந் தவம்மேற்கொண்டு
> பூழிவெங் கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி,
> ஏழ்இரண்டு ஆண்டின் வாஎன்று இயம்பினன் அரசன்'

என்றாள். திரோதாத்தனான ராமனும் அப்பணியைத் தலைமேற்கொண்டு அப்பொழுதே அரணியம் போகத் தீர்மானித்து விட்டான்.

ஆனால், ராமன் மாத்திரம் காட்டுக்குத் தனியே சென்றால் ராவணவதம் எவ்வாறு நடக்கும்? ஆகையால் வால்மீகி சீதையையும் ராமனோடுகூடக் காட்டுக்கு அனுப்புகிறான். வில்லாள ரானார்க்கெல்லாம் மேலவனான இந்திரசித்தனைக் கொல்லு வதற்கும் வேறொரு வீரன் இருந்தால்தான் ரசனை சோபிக்கும். ஆகவே, லட்சுமணனும் ராமனோடுகூடக் காட்டுக்கு ஏகுகிறான். ஆனால், வால்மீகி கைகேயினிடத்தில் ராம னுடன் லட்சுமணனையும் சேர்த்து அனுப்பி அவளுடைய கொடுஞ் சொற்களை அவன் உடனிருந்து கேட்கும்படிச் செய்கிறான். ரசனா தந்திர பாரங்கதனான கம்பன் அத்தகைய உடன்போக்கின் இழுக்கை உன்னி ராமனைக் கைகேயியின் முன்னே தனியே நிறுத்துகிறான். ஆகையினால் ராமனுடைய மகுடாபிஷேகம் நடக்கவில்லை என்ற செய்தி அவனுக்கு வெகு நேரம் கழித்தேதான் தெரிகிறது. ஆக, நம்கவி லட்சுமணனை,

> "கேட்டான் இளையோன், கிளர்ஞாலம் வரத்தி னாலே
> மீட்டாள் அளித்தாள் வனம்தம்முனின், வெம்மை முற்றித்
> தீட்டாத வேற்கண் சிறுதாய்என, யாவ ராலும்
> மூட்டாத காலக் கடைத்தீ யெனமூண்டு எழுந்தான்."

என்று நாடகத்தில் தோற்றுவிப்பது போலத் தோற்றுவித்தல் சாத்தியமாகிவிடுகிறது.

இங்கு வால்மீகியின் ரசனைக்கும் கம்பனுடைய ரசனைக்கும் பேதத்தைச் சற்று ஆழ மாகக் கவனித்தல் பயனுடையதாகும். வால்மீகியில் ராமன் தசரதனுடைய சன்னிதிக்கு வந்த பிறகு 18சுலோகங்களால் என்ன நேர்ந்திருக்கலாம் என்று தனக்குத் தானே ஆலோசித்துக் கொண்டு கைகேயியைக் கேட்கிறான். என்ன என்று கேட்ட பிறகு கைகேயி பழங் கதை யெல்லாம் சொல்லிவிட்டு எட்டு சுலோகங்களால், 'நீ அரசன் வார்த்தையை நிறைவேற்று வாயா?' என்று கேட்கிறாள். பிறகு, தான் வரங்களைப் பெற்ற வரலாற்றைச் சொல்லிக் 'காட்டுக்குப் போ !' என்று ஆஞ்ஞாபிக்கிறாள். ராமனுடைய பதிலும் வளவள என்றே யிருக்கிறது. இத்தகைய நீட்சியினால் கதை தொய்ந்து போய்விடுகிறது. கம்பனிலோ ராமன் வருவதும், கைகேயி ஆணையிடுவதும், ராமன் ஒரு வார்த்தையில் மறுமொழி கூறி விட்டு விடைபெற்றுக் கோசலை கோயில் போவதும் அதிவேகமாக, மிகக்கெடுபிடியாக நடப்பதால் கதை நாணேற்றின வில்லைப் போல் வன்மையுடைத்தாய் நடக்கிறது. இன்னும் வால்மீகியில் சீதையையும் லக்ஷ்மணனையும் அழைத்துக் கொண்டு ராமன் மூர்ச்சித்துப் போயிருந்த தசரதனிடம் மறுபடியும் விடைபெற்றுக் கொள்ள வருகிறான். இங்கேயும் அசுவபதி மகாராஜாவின் உபாக்கியானம் பிரவேசித்துக் கதையின் ஓட்டத்தைக் காலமில்லாத காலத்தில் தடுக்கிறது. தவிர, கைகேயியே மரவுரியை ராமனிடம் தருகிறாள். ராமன் சீதைக்கு அதை அணிவிப்பதைக் கண்டு வசிஷ்டர் தாங்கமட்டாமல், 'நானும் மற்ற

மந்திரிகள் முதலாயினோரும் சீதா ராமர்களோடு காட்டுக்குச் செல்லுகிறோம்' என்று சொல்லிவிட்டு, பிறகு 'சீதை ஆபரணங்கள் அணிந்து கொண்டாகிலும் போகட்டும்' என்று சொல்லி முடிக்கிறான். இந்த அற்ப விஷயம் பிரவேசிப்பதால், கதை மகா காவிய லட்சணத்தை இழந்துவிடுகிறது. தவிர, ராமன் தசரதனிடம் கோசலையை ஒப்பிப்பது ஸ்வபாவிகமாக இருந்தாலும் இந்தப் பாகமே வால்மீகியில் சம்பந்தா சம்பந்தமின்றி ஊழற்று இருக்கிறது. கம்பனோ சுமித்திரையின் அரண்மனையில் ராமலக்ஷ்மணர் இருக்கையில் கைகேயி அனுப்பிய சீரை வரும்படி செய்து, அதினின்றும் பரிபூரண ரஸத்தைப் பிழிந்தெடுத்துத் தருகிறான். அனுப்பிய மரவுரியைக் கண்டு வெதும்பி,

'யாணர்த் திருநாடு இழப்பித்தவர் ஈந்த எல்லாம்
பூணப் பிறந்தானும் நின்றான், அவை போர்விலோடும்
காணப் பிறந்தேனும் நின்றேன்அவை காட்டுமின் !'

என்று லக்ஷ்மணன் கூறும் வாக்கியத்தின் இருதய பேதன துக்கம் படிப்போர் மனத்தில் சுரீர் என்று தைக்கிறது. சீதா ராம சம்வாதத்தைக் கம்பன் ஒழுங்குபடுத்தி நன்கு அமைத்திருக்கிறான். தவிர,

''காரை ஒத்தவன் போம்படி கண்டஅவ்
ஊரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ?''

என்று சொல்லிவிட்டு, தசரதனுடைய அரண்மனை வாயிற்படியைச் சார்ந்து அங்கு கூடியிருந்த தசரதனுடைய பத்தினிகளினிடத்தில் ராமன் விடை கேட்ட காலத்தில்,

''ஏத்தி னார்தம் மகனை; மருகியை
வாழ்த்தி னார்; இளை யோனை வழுத்தினார்;
'காத்து நல்குமின்' தெய்வதங் காள்!' என்றார்;
நாத்த ழும்ப அரற்றி நடுங்குவார் !''

என்று சொல்லி ராமன் அயோத்தி நகர் நீங்கும் தன்மையை வர்ணிக்கும் தோரணை மிகவும் ரஸமாக இருக்கிறது என்று காவிய இலக்கண அறிஞர் கூறத்தக்கதாக இருக்கிறது.

ராமன் காட்டுக்குச் செல்லுகையில் யாத்திராதானம் செய்கிறதை வால்மீகி வெகு விஸ்தாரமாக வர்ணிக்கிறான். இந்த இடத்தில் கதையின் வேகத்தைக் குறைப்பது சரியாக இல்லை. ஆதலால் கம்பன் கதையை இத்தகைய வர்ணனையினால் நிற்கச் செய்யாமல் உரிய வேகத்துடன் செல்லச் செய்கிறான். இங்கே கம்பனுடைய கதை அசுவ கதியில் செல்லுகிறது. அதாவது கம்பீரமாயும் வேகமாயும் ஒரே மூச்சில் வெகு தூரம் செல்லுகிறது. பிறகு சிறிது நேரம் ஆசுவாசம் செய்து கொள்ளுகிறதற்காகக் குதிரை நிற்குமே அதுபோலச் சற்று விளம்பனமான வர்ணனைகளுடன் தேங்குகிறது. ஆனால், உடனே பழைய வேகத்துடனும் உக்ரத்துடனும் கிளம்பி வெகுதூரம் கட்டுக்கு அடங்காது போலச் செல்லுகிறது. இவ்வாறு,

''விசையால் அனுங்க வடமேரு, வையம்
ஒளியால் விளங்க, இமையாத்
திசையானை கண்கள் முகிழா ஒடுங்க
நிறைகால் வழங்கு சிறையா''

னான பெரிய திருவடியின் கம்பீரமான கமனத்தையும், ஐராவதத்தின் தாட்டியையுமே

தனக்கு உவகையாகக் கொண்டு கம்பனுடைய அயோத்தியா காண்டமானது ராமனைத் தண்டகாரணியத்தின் எல்லைவரையில் கொணர்ந்து சேர்த்துவிடுகிறது.

பரதனுடைய சம்பந்தம் கதைக்கு—ராமாயண கதை அனைத்துக்குமே என்று பொதுவாகவே சொல்ல வேண்டியது—உபாக்கியான சம்பந்தமாகத்தான் இருக்கிறது. ஆனால், உபாக்கியான சம்பந்தமாக இருந்தாலும். சம்பந்தம் எத்தனை நெருக்கியதாக இருக்கிறது! எவ்வளவு அழகாக இருக்கிறது! ராமனுடைய அரணியப் பிரவேசம் அயோத்தியா காண்டத்துக்கு ஓர் முத்தாய்ப்பைக் கொடுத்துவிட்டது என்று சொல்லலாம். ஆனால். வால்மீகி பகவான் அம் முத்தாய்ப்புக்கும் ஓர் முத்தாய்ப்பு வைக்க வேண்டும் என்று விரும்பி மகாகாந்தனும். மகாசுத்தனும், பின்பிறந்தோர்களுக் கெல்லாம் பெரிதும் உத்த மனான, ஆதர்ச சகோதரனான, பரதனை அரங்கத்தில் பிரவேசிக்க விட்டிருக்கிறான். கம்பன் கதையையும் போக்கையும் அவனிடம் நின்று வாங்கிக் கொண்டிருக்கிறான் என்பது உண்மையே. ஆனால், அவன் இந்தப் பரத பிரவேசத்தை வால்மீகியையும்விட மிகமிக அழகாக அமைத்திருக்கிறான். இந்த உபாக்கியானத்தை விஷய ஆராய்ச்சியில் விஸ்தாரமாக ஆராய்ந்தெழுதுவோம். இங்கு இதன் ரசனை அழகைப் பற்றி மாத்திரம்தான் குறிப்பிட வேண்டியது அவசியம்.

அயோத்தியா காண்டத்தில் 67-வது சர்க்கத்தில் தசரதன் இறந்துவிட்டான் என்று கண்டதும் பிரஜைகளெல்லாம் வசிஷ்டனிடத்தில் அரசனில்லாமல் தாங்கள் க்ஷேமமாயிருத்தல் சாத்தியமில்லை என்று முறையிடுகிறார்கள். ஆனால், அம் முறையீடு தர்மசாஸ்திரத்தில் சொல்லியது போலச் சொல்லப்பட்டிருக்கிறதே ஒழியக் காவியத்தில் சொல்லப்பட வேண்டிய ரீதியில் சொல்லப்படவில்லை. அதே மாதிரி 100-வது சர்க்கத்தில் ராமன் பரதனை 77 - சுலோகங்களால் ராஜ்ஜியம் சரிவர நடக்கிறதா என்று விசாரிக் கிறான். இவைகளும் 108, 109-வது சர்க்கங்களில் வரும் ஜாபாலி ராம சம்வாதமும் சம்ஹிதைக்குரிய வர்ணனைகளாகுமேயன்றி காவிய அமைப்புக்கேற்ற வர்ணனைகளாகா. இதையெல்லாம் பார்க்கும்போது,

> நைவ வ்யாகரணஜ்ஞ மேதி பிதரம்.
> ந ப்ஹ்ராதரம் தார்கிகம்,
> தூராத் ஸங்குசிதேவ கச்சஹதி புநச்
> சாண்டாலவத் ச்ஹாந்தஸாத்;
> மீமாம்ஸா நிபுணம் நபும்ஸக மிதி
> ஜ்ஞாத்வா நிரஸ்தாதரா
> காவ்யாலங்கரணஜ்ஞ மேத்ய கவிதா
> காந்தா வ்ரிணீதே ஸ்வயம்! *

என்ற சுலோகம் நமது ஞாபகத்திற்கு வருகிறது. ஆனால், கம்பன் தன் கதையைக்

*(இ-ள்.) கவிதை என்னும் அணங்கு, இலக்கண வித்துவானைத் தந்தையென மதித்து அவனை அணுகாள்; தார்க்கிகளைச் சகோதரன் என்று பாவித்து அவனை நெருங் காள், வேதாத்தியயனம் செய்தவனை (யும், சந்தத்தையே கவனிப்பவனையும்) விட்டுச் சண்டாளர்களிடம் நின்று ஓடுகிறவர்கள் போல ஓடியே போய்விடுகிறாள்; மீமாம்சையை ஆராய்பவனை நபும்ஸகன் என்று நினைத்து அவமதித்து விடுகிறாள்; காவியாலங்கார சாஸ்திர மறிந்தவனைக் கண்டதும் அவனையே தன் கொழுநனாகப் பாவித்து அவனைச் சேருகிறாள்... வால்மீகியைச் சாமானிய கவியாக, நாம் பாவிக்கவில்லை. உலகத்திலுள்ள முதல் ஏழெட்டு மகாகவிகள் என்று கணக்கிட்டு எந்த ஜாதி அறிஞர் எண்ணினாலும் அந்தக் கணக்கில் வால்மீகியின் பெயரைச் சேர்க்காதிருக்க முடியாது. எமது சொந்த அபிப்பிராயத்தில் உலகத்தின் ஒரு தனிக் காவியம் என்று சொல்லத் தகுந்தது கம்பராமா யணம்தான் என்றும், வால்மீகி ராமாயணம் அதற்கு அடுத்த ஸ்தானத்தை வகிக்கும் என்றும் சொல்லுவோம். ஆனால் இங்கே வால்மீகி காவிய ரீதியை மறந்து சம்ஹிதை ரீதியில் இறங்குகிறான் என்பது எமது அபிப்பிராயம்.

காவியமாகவே கருதி, சம்ஹிதைக்காரர்கள் சொல்லுவது போலச் சொல்லாமல், சுவைபட வகுத்தலையே தன் தர்மமாகக் கொண்டு தன் காவிய மாளிகையைக் கட்டியுள்ளான். வால்மீகியில் அயோத்தியா காண்டத்தில் 82-வது சர்க்கத்தில் பரதன் சித்திரக்கூடத்தை நோக்கிப் போவதற்கு வழியெல்லாம் சீர்திருத்தி அமைக்க உத்தரவு செய்த பிறகு, வசிஷ்டன், 'நீ பட்டாபிஷேகம் செய்து கொள்ள வேண்டும்' என்று வற்புறுத்துகிறான். இது சம்பாவிதமாக இல்லை. இதிலெல்லாம் கம்பன் மிக மிக ஜாக்கிரதையாக இருந்து கதையைக் கொண்டு போகிறான். தசரதனுக்காக வேண்டிய கருமங்களெல்லாம் செய்து முடித்தானதும் கம்பன் ஓர் மந்திர சபை கூட்டுவிக்கிறான். அதில் வசிஷ்டன் பரதனைப் பார்த்து, 'நீ ராஜ்ஜிய பாரத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று வேண்டுகிறான். பரதன் அரணியம் சென்று ராமனை அழைத்து வரவேண்டும் என்கிற தன்னுடைய நிர்ணயத்தை அந்தக் கூட்டத்தில்தான் முதல் முதல் தெரிவிக்கிறான். அங்கே வசிஷ்ட னுடைய வாதத்திற்கெல்லாம் சமாதானம் சொல்லித் தன் நிச்சயத்துக்கு அவனையும் உட்படச் செய்த பிறகே வழிகளைத் திருத்த ஆக்ஞாபிக்கிறான். பரதனுடைய ராம பக்தியைப் பார்த்துக் கோசலை வருந்துவதாக எழுதுவது வால்மீகியின் கற்பனைத் திறத்தைக் காட்டுகிறது. ஆனால் கம்பன் அங்கு அதைக் காட்டாமல், யுத்த காண்ட முடிவில் மீட்சிப் படலத்தில் காட்டுவதற்காக நிறுத்திக்கொண்டு, தன் ரசனைத் திறமையை விளக்குகிறான். இன்னும், ராமனுடைய பர்ணசாலையைக் கண்டு பரதன் வேகமாகச் செல்லுகிறான் என்கிற வர்ணனைக்குப் பிறகு சீதையிடம் ராமன் சித்திரகூட பர்வதத்தை வர்ணித்துப் பேசிக்கொண்டிருப்பதாகக் கதையை வால்மீகி கொண்டு போகும் போக்கு சம்பாவித விரோதமாக இருக்கிறது. கதையின் வேகத்தையும் குறைக்கத் தகாத இடத்தில் அவ் வர்ணனை குறைக்கிறது.

இம்மாதிரி கட்டங்களில் கம்பன் அசுவ தாட்டியில் செல்வது வழக்கம். பரதனது சைனியம் வருவதைக் கண்ட லக்ஷ்மணன் ஆவேசத்துடன் ராமனிடம் சென்று பரதனைத் தூஷிக்கிறான். ஆனால், கால் தாக்க நிமிர்ந்து, புகைந்து கனன்று, பொங்கும் ஆறாக் கனல் ஆற்றும் ஓர் அஞ்சன மேகம் என்ன ராமன்,

'எனைத்துஉள மறை, அவை இயம்பற் பாலன,
பனைத்திரள் கரகரிப் பரதன் செய்கையே!
அனைத்திறம் அல்லன அல்ல; அன்னது
நினைத்திலை, என்வயின் தேய நெஞ்சினால்!'

என்று முதலாய்ச் சொல்லிவிட்டுப் பரதன் ஜடாவல்கலதாரியாய்த் தானே நெருங்கியதும் லட்சுமணனுக்கு,

'தேர்ப்பெருந் தானையால் பரதன் சீறிய
போர்ப்பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கு!'

என்று குத்திக்காட்டிச் சொல்லுகிறான். அதற்குள்ளும் பரதன் வந்து ராமன் பாதத்தில் வீழ்கிறான். சீதைக்கு வனத்தின் அழகுகளைக் காட்டுவது போன்ற அகால விளம்பனங்

களின்றிக் கதை ஸ்தாயிக்கு மேல் ஸ்தாயியாக ஆரோகணக் கிரமத்திலேயே செல்லுகிறது. தசரதன் சௌக்கியமா என்று ராமன் கேட்பதும் பரதனுடைய வார்த்தையைக் கேட்டதும் ராமனுடைய பிரலாபமும் மூர்ச்சையும் சக்கரவர்த்தியின் சரமக் கிரியைகள் ஆனதும் ராஜ்ஜியபாரத்தை ஏற்றுக் கொள்ளும்படி, பரத ராமர்கள் பரஸ்பரம் வேண்டிக் கொள்வதும், வசிஷ்டன் ராமனை வற்புறுத்துவதும், ராமன் யாதொன்றுக்கும் இணங்காது நிற்பதும், வீண் விவாதங்களின்றி மிகக் கெடுபிடியாக நடைபெறுகின்றன. ஜாபாலியின் அசந்தர்ப்பான சம்வாதத்தில் கதையின் போக்குத் தேக்கெறிந்து போய்ச் சுவை கெட்டுப் போய்விடுகிறது என்று கண்டு, கம்பன் அவ் உபாக்கியானத்தை அறவே ஒழித்துவிட்டான்.



## கம்பர் கவிப் பெருமை

சொல்லும் கதைகளின் போக்கானது எளிமையின் பெருமையும், தெளிந்த சொல் ஒட்டமும் தூய்மையும் கொண்டு பொலிகின்றது. அவர் எடுத்துக் காட்டும் உபாக்கியானங்களி லெல்லாம் நிறைந்த உபதேசங்களும் ஆறுதல்களும் ஜெருஸலத்தில் டாஸோ சொல்லியிருக்குமவற்றைக் காட்டிலும் அதிகப்பட்டிருக்கின்றன. அவரது சம்பாஷணைப் பாகங்களிற் காட்டப் பெற்றிருக்கும் விரிவுரைகளும் இயற்கை வருணனை விஸ்தரிப்புக் களும் அவரது உயர்ந்த கவிசாதுரியத்தால் பிரகாசித்து, வர்ஜிலைவிடப் பூர்ண பக்குவத் தைக் காட்டி நிர்க்கின்றன. நாயகர், நாயகி, உப நாயகர், உப நாயகி முதலான பாத்திரங்களின் குணங்களை எடுத்துச்சொல்லும் பாகங்கள், ஷேக்ஸ்பியர் அல்லாத மற்றைப் புலவர்களது கவனத்தைக் காட்டிலும் அதிகமான கவனத்துடன் உண்மைக் குறிப்பாக எடுத்துக் காட்டப்பெற்றிருக்கின்றன. நகர சம்பந்தமான வர்ணனைகளில் கம்பர், 'ஒதீஸிய' த்தில் ஹோமர் சொல்லியிருப்பதைக் காட்டிலும் அழகாகவும் சுலப நடையாகவும் சொல்லிப் போகிறார்; அன்றியும், வீரத்தைக் குறித்து நிற்கும் இடங்களில் ஹோமரைத் தூரத்தில் நிறுத்திச் செல்கிறார். கம்பரது காவிய நடையிலாவது எடுத்துக் காட்டுகளிலாவது பாரஸீகப் புலவராகிய பெர்டுஸீயின் காவிய கதி முதலியவற்றை எடுத்துக் காட்டுவது சிறிதும் தகுதியாகாது. எல்லா விஷயங்களையம் நன்கு அறிந்து தேர்ச்சிபெற்ற கற்பனா சக்தியுடைய எந்தப் புலவராலும், எந்த விவேகியாலும், எந்த ஞானியாலும் செல்ல முடியாத பிரதேசங்களிற் சென்று, ஆராய முடியாதவற்றை யாராய்ந்து, எடுக்க முடியாத புதையல்களையெடுத்து உலகோர்க்குத் தந்து, பலவேறு பட்ட பக்குவமுடைய எல்லாருடைய இதயங்களையும் விரிவுறச் செய்து, அவர்க்கு முன்னேற்றத்தை யளிப்பதற்காகச் சிறந்ததொரு வரத்துடன் தோன்றினவராகவே கம்பர் காணப்படுகிறார்.

— வித்துவான் சு. கிருஷ்ணஸ்வாமி முதலியார்
(1861-ல் எழுதியது)

# "மெய்யின் மெய்"

*

"கம்பன் கலைச் செம்மல்"
நா. நஞ்சுண்டன்

கம்ப இராமாயணத்திலே அயோத்தியா காண்டம் மிகவும் முக்கியமானது; இராமாவதார நோக்கிற்குக் காரணமாக இருப்பது. இதில் வரும் பாத்திரங்களான தயரதன், கூனி, கைகேயி, இராமன், பரதன், இலக்குவன், குகன் ஆகியோர் ஏதோ ஒரு வகையில் காண்டத்தின் விறு விறுப்பிற்குத் துணை செய்கிறார்கள். பாத்திரங்களின் தன்மை, குணங்கள், விருப்பு-வெறுப்புக்கள், கோப-தாபங்கள் எல்லாம் குறைவற நிறை வுடன் விளங்குவதாக அமையப்பெற்றிருக்கிறது. அனைத்துக்கும் மேலாக கதைப் போக்கின் திருப்புமுனையாக இக்காண்டம் அமைந்திருப்பதும் ஒரு தனிச்சிறப்பாகும். பல இடங் களிலே கம்பன் வால்மீகியோடு பெரும்பாலும் ஒட்டியே செல்வதைக் காண முடிகிறது. காளிதாசனின் "இரகு வம்சத்தையும்" நன்கு கற்றுத் தெளிந்தவனாகையால் பல பாடல்கள் அதன் பிரதிபலிப்பாகவே காணமுடிகிறது.

காண்டத்தின் தொடக்கமே மந்திரப் படலத்திலிருந்து ஆரம்பமாகிறது. பரதன் மாமனுடன் கேகய நாட்டிற்குச் சென்றவுடன் வயது முதிர்ந்த தயரதன் எதிர்காலத்தைப் பற்றி நினைக்க ஆரம்பிக்கிறான். இராமனுக்கு முடிசூட்டிமகிழ எண்ணுகிறான். அதனை என்று காண்பேனோ என்று ஏங்குகிறான். இதனை வால்மீகி வெகு அழகாக

"கதா நாம ஸுதம் த்ரக்ஷ்யாமி அபிஷிக்தம் அஹம் ப்ரியம்"

என்றும், குணத்தில் சிறந்தவன் இராமன். அவனை யுவராஜாவாக நியமிக்கப் போகிறேன் அப்பொழுதுதான் என் மனக்கவலை தீரும் என்கிறான்.

"கதக்லேசோ பவிஷ்யாமி ஸுதே தஸ்மின் நிவேச்ய வை"

என வான்மீகம் பேசுகிறது.

காளிதாசன் இரகுவம்சம் சர்க்கம் பன்னிரண்டிலே தயரதன் முதுமைப் பருவம், கைகேயிடத்துள்ள அச்சத்தினால் நரைமயிர் மேலிட்டு காதருகே வந்து "மன்னனே! ஆட்சியை இராமபிரானுக்கு அளிப்பாயாக என்று கூறவே வந்தது போல்காணப்பட்டது" என்கிறார். அதன் தமிழாக்கம் வருமாறு :-

"மன்னனே ஆட்சியை மகனுக்கீகெனக்
கன்னமூ லத்தினில் நரையின் மேலிட்டுத்
துன்பளி கைகயிக் கஞ்சி மூப்பது
பன்னிடை வந்தெனக்காட்சி யளித்தது"

(இரகுவம்சம் மொழிபெயர்ப்பு-க. ரா.ஜமதக்னி)

இதனையொட்டி கம்ப இராமாயணத்தின் சில பதிப்புக்களிலே, குறிப்பாக வை. மு. கோ பதிப்பில் இரண்டு பாடல்கள் படலத்தின் ஆரம்பத்திலே முதல் இரண்டு பாடல்களாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பல பதிப்புக்களில் இப்பாடல்கள் மிகைப் பாடல்கள் வரிசையில் வருகிறது.

தயரதன் கண்ணாடியின் முன் நின்று கொண்டு தன் உருவத்தைப் பார்க்கிறான். கன்னத்தின் ஒரு மூலையில் நரை வெளுக்க மயிர் ஒன்று காணப்பட்டதைக் காண்கிறான். இராவணன் செய்த தீங்குதான் இங்கு வந்து நரைமயிராகத் தோற்றம் கொண்டதாக கம்பன் வர்ணனை செய்வதாகப் பாடல் அமைந்திருக்கிறது.

''மன்னனே அவனியை மகனுக்கு ஈந்து நீ
பன்னரு தவம்புரி பருவம் ஈதென
கன்ன மூலத்தினில் கழற வந்ததென
மின்னென கருமை போய் வெளுத்தது ஓர்மயிர்''

''தீங்கிழை இராவணன் செய்த தீமைதான்
ஆங்குஓர் நரையதாய் அணுகிற்றாம் என
பாங்கில் வந்திடு நரை படிமக்கண்ணாடி
ஆங்கு அதில் கண்டனன்—அவனிக்காவலன்''

இந்த இரண்டு பாடல்களைப் படிக்கும்போது காளிதாசனின் கவிதையிலே தோய்ந்து, அவனது கருத்துக்களை அழுத்தமாக எடுத்தாண்டு இருப்பது காணக்கிடக்கிறது. மிகைப் பாடல்கள் வரிசையில் வந்தாலும் தயரதனின் எண்ண ஓட்டத்திற்கு இவை மெருகூட்டுவதாகக் கொள்வது மிகவும் பொருத்தமென கம்பன் எண்ணிப் பாடியதாகவே கொள்ளலாம் எனத் தோன்றுகிறது.

அவனி காவலனான தயரதன் ஆலோசனை மண்டபத்திற்கு வந்து, மந்திரக் கிழவர்களை வருவிக்கிறான். தேவர்களும், முனிவர்களும் மதிக்கும், மும்மூர்த்திகளுடன் நான்காமவர் எனத்தக்க வசிட்டமாமுனி வந்தார். பின்னர் மாட்சிமை மிக்க, எண்ணத்தில் ஒன்றியவர்களான அமைச்சர்கள் வந்தனர். இவர்கள் நடந்ததைக் கொண்டு, நடக்கப் போவதைக் கண்டறியும் நுண்ணறிவாளர்கள்; விதியையும் மாற்ற வல்லவர்கள்; நடுநிலை நோக்கோடு நல்லறம் பேணுபவர்கள்.

வந்து முறைப்படி வணங்கி, தத்தம் ஆசனங்களில் அமர்ந்த மந்திரக்கிழவர்கள், அமைச்சர்களை நோக்கி தயரதன் ''நான்பெற விரும்பும் அரிய பேறு ஒன்று உள்ளது. என் உணர்வோடு ஒன்றிய நீங்கள் அன்புடன் கேட்பீர்களாக'' என ஆரம்பிக்கிறான்.

''என்னுடைய சூரிய குலத்து முன்னோர்கள் போலவே, முறை தவறாது இது நாள் வரை இந்த அரசுப் பொறுப்பைச் சுமந்து கொண்டு வந்தேன். கன்னியர்கள் தங்கள் கற்பைக் காப்பது போல், தருமம் கைதர, மன்னுயிர்களுக்கு நல்லதே செய்து வந்திருக்கிறேன். இப்பொழுது என் உயிருக்கு உறுவதாக ஆன்மநலம் பெற விரும்பு கிறேன். மூப்பு என்னை வந்தடைந்து விட்டது. இனியும் என்னால் இராஜ்ய பாரத்தைக் காக்க இயலாது. ஏன் கூடாதுதான்! உள்ளத்திலே உறங்கிக் கிடக்கும் காமம் முதலானவை கள்வர்போல் மறைந்து உறையும் வாழ்க்கை இனி எனக்கு அடுக்காது.''

"கள்ளரின் கரைந்து உறைகாமம் ஆதிஆம்
உள்-உறை பகைகளுக்கு ஒதுங்கி வாழ்வெனோ?"

"இப்பிறப்பிலே பிறந்தவர்கள் எல்லோரும் இறப்பது திண்ணம் என்ற பேருண்மையை மறப்பதைவிட வேறு கேடுகள் உண்டோ? துறப்பு எனும் தெப்பம் துணை இல்லாவிட்டால், பிறப்பு எனும் பெருங்கடலை யார் கடக்க முடியும்?" என்று பேசுகிறான் தயரதன். இங்கு திருவள்ளுவரின் "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்-நீந்தார் இறைவன் அடி சேராதார்" என்ற குறளை மனத்திலே கொண்டு தக்க இடத்தில் தயரதன் வாயிலாகக் கம்பன் இதைக் குறிப்பிடுகிறான்.

"பிறவி என்னும் இவ் இருச்சிறை கடத்தலின் இனியது யாவதோ" என்றும், "குழைத்தது ஓர் அமுதினைக் கோடல் நீக்கி, வேறு அழைத்த தீவிடத்தினை அருந்துதல் ஆகுமோ என்றும், நெடிது நாள் உண்ட எச்சிலை நுகர்வது இன்பம் ஆகுமோ? எனவும் பலப்பல காரண காரியங்களைக் காட்டி, இறுதியில் "இராமன் தந்தை செருக்களத்தில் உயிர் துறந்தானில்லை; மூப்பு அடைந்த பின்பும் ஆட்சியைத்தர முனைந்தானில்லை என்ற அவச்சொல் பிறந்துவிட்டால் "பிறந்திலன் என்பதின் பிறிது உண்டாகுமோ" என்கிறான்

"பெருமகனாகிய இராமன் எனக்குப் பிறக்க, திருமகளாகிய சீதையை அவன் மணம் முடிக்கக் கண்ட நான், இராமன் நிறை குணத்து அவனிமாது எனும் ஒரு மகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்". ஆதலால் "இராமனுக்கு அரசை நல்கி இப்பேதமைத்தாய் வரும் பிறப்பை நீக்குறும் மாதவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன்" இது குறித்து உங்கள் கருத்து என்ன என விளம்புகிறான்.

இவ்வாறு தயரதன் சொன்னதும், ஒரு பக்கம் தயரதனைப் பிரிவதனாலாகிய வருத்தம், மறு பக்கம் இராமன் முடிசூட்டுவதில் மகிழ்ச்சி இவ்வாறு அவர்கள் — அமைச்சர் குழாத்தினர் "இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார்" என கம்பன் குறிப்பிடுகிறான். தயரதன் கருத்திற்கு வசிட்டன் உட்பட அனைவருமே உடன்பட்டுப் பேசுகிறார்கள்.

"உன் குலத்தில் உள்ளவர்கள் யாவர் இராமனைப் பெற்றார்கள். இது நீ செய்ய வேண்டிய கருமமும் கூட. எல்லாவற்றையும் கற்றுத் தெளிந்த உனக்கு இனி கடைப் பிடிக்க வேண்டிய தருமமும் இதுதான். பெரும்புகழ்ச் சானகியோ, பூமிதேவியைவிட, மலைமகளைவிட, துர்க்கை தேவியைவிடச் சிறந்தவள். கண்ணைக் காட்டிலும், உண்ணும் நீரைக் காட்டிலும், உயிரைக் காட்டிலும் இராமனே மிகச் சிறந்தவன். அனைவரும் அவனையே உவப்பார்கள். என வசிட்ட முனி கூறுகிறார்.

இவ்வாசகங்களைக் கேட்ட தயரதன் மிகுந்த மகிழ்ச்சிக் குள்ளாகி, கண்களில் நீர் அரும்ப, முனிவரின் மலர்ப் பாதங்களை வணங்கி

"இனிய சொல்லினை; எம்பெருமான் அருள் வழியின்
தனியன் நானிலம் தாங்கியது; அவற்கு இது தகாதோ?"

என்றும், என் குலத்து அரசர்கள், இப்புவியில் பெரும் புகழ் பெற்றார்கள். வேள்விகள் பலவும் செய்து இரு வினைகளையும் முடித்தார்கள். இப்பொழுது அந்த அருள் எனக்குக் கிடைத்திருக்கிறது என உள்ளம் மகிழ்ந்து பேசுகிறான் தயரதன்.

பின்னர் சுமந்திரன், மந்திரக் கிழவர்களின் ஒருமித்த கருத்தின்படி நின் முதல் மணிப் புதல்வனை முறையால் அரசு ஆக்கி பின்னர் வானப்பிரஸ்தத்தைக் கடைப் பிடிப்பீராக எனச் சொல்லுகிறான். தயரதன் சுமந்திரனைப் பார்த்து நீயே திருமகள் கொழுநனாகிய இராமனை உடன் அழைத்துவா எனக் கட்டளை இடுகிறான். சுமந்திரன் இராமனிடத்தில் செய்திகளைச் சொல்லி அவனை அழைத்து வருகிறான். வந்த இராமன் தயரதனை வரன்முறை வணங்கினான். வணங்கிய இராமனைத் தன் மார்புறச் சேர்த்துத் தழுவிக் கொண்டான் தயரன். எதற்காகத் தழுவிப் பார்த்தான்?

நீர் சூழ்ந்த இந்தப் பரந்த உலகைக் காக்கக் கூடிய வலிமை இராமனிடத்தில் உள்ளதா எனப் பார்க்கத் தானாம்! அதுமட்டுமல்ல தன்னுடைய தோள்கொண்டு, மார்பாலும் இராமனுடைய மார்பையும் — அது திருமகள் உறையும் மார்பு அல்லவா— எனவே அதனையும் குன்று போன்ற திரண்ட வலிமையுடைய தோளையும் — அளந்தான் என கம்பன் குறிப்பிடும்பொழுது

''நலங்கொள் மைந்தனைத் தழுவினன் என்பது என்? நனிநீர்
நிலங்கள் தாங்குறு நிலையினை நிலையிட நினைத்தான்,
விலங்கல் அன்ன திண் தோளையும், மெய்த்திரு இருக்கும்
அலங்கல் மார்பையும், தன்தோள் மார்பு கொண்டு அளந்தான்''.

என மிகவும் நயமாக அந்தக் காட்சியை நமக்குப் படம் பிடித்துக் காண்பிக்கிறார்.

இராமனை அருகில் அமரச் செய்து, அகம் மகிழ்ந்து அன்புடன் பார்த்து, ''மழுக் கொண்ட பெரும்புகழ் உடைய பரசுராமனையே வென்ற தோள் உடையவனே! உன்னிடம் வேண்டிப் பெறுவதற்கு ஒன்று உள்ளது. மூப்பின் காரணமாக என் உடல் தளர்ந்து விட்டது. இந்த ஆட்சிப் பொறுப்பு என்ற பெரும் சிறையிலிருந்து விடுபட்டு, இனி கடைத்தேறும் வழியில் செல்ல நீ உதவிட வேண்டும். உரிமைக்கு உரிய மைந்தரப் பெற்று, இகபரசுகம் பெறுவது என்பதே பெரியவர்கள் இயற்கையாகக் கொண்டக் குணம். உன்னைப் பெற்ற நான் கவலைப்பட வேண்டியதில்லை. எனவே நான் சொல்வதைக் கேட்பாயாக'' என்று தயரதன் இராமனிடத்தில் சொல்ல ஆரம்பிக்கிறான்.

''மைந்தா! நம் குல மரபினில் மணிமுடி வேந்தர், தம் தம் மக்களே கடன்முறை நெடுநிலம் தாங்க, ஐம்புலன்களால் விளையும் மூன்று வகைகளான காமம், குரோதம், மயக்கம் ஆகியவைகளை ஒடுக்கி உய்ந்தார்கள். முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயன் களாலும், இந்தப் பிறவியில் செய்த வேள்விகளின் பயனாகவும் உன்னை நான் அருமையாகப் பெற்றேன். இனியும் நான் இந்த அரசியல் தொல்லையில் இருந்தால் உன்னைப் பெற்றதால் கிடைத்த பலன் நிறைவது எப்போது? யார் துயரம் இல்லாதவர்கள் என்று உனக்கு தெரியுமா? புவி ஆளும் மன்னர்கள் இல்லை; இந்திரனைப் போல் வீரக்கழல் அணிந்தவர்கள் அல்லர்; தவங்கள், விரதங்கள் இவற்றைச் செய்தோரும் அல்லர்; தந்தை சொல் தட்டாத மகனுக்காக மக்களைப் பெற்றவர்களே துயரம் இல்லாதவர்கள்'' என்ற பலத்த பீடிகையுடன் மேலும் பேசுகிறான். ''அரசு பாரத்தை உன் மீது சுமத்துவதாக நீ எண்ணாதே. மன்னர் சூடும் மணி மகுடம் அணிந்து, நல்லாட்சி நிலைத்திட, தர்மங்கள் தழைத்தோங்கச் செய்ய வேண்டும். இதுவே நான் விரும்புவது.''

"மன்னவர் வானவர் அல்லர்; மேல் வானவர்க்கு அரசு ஆம்
பொன்னின் வார் கழல் புரந்தரன் போலியர் அல்லர்;
பின்னும் மாதவம் தொடங்கி, நோன்பு இழைத்தவர் அல்லர்;
சொல் மறா மகப்பெற்றவரே துயர் துறந்தார்."

என தயரதன் சொல்வதை கம்பன் அழகுறச் சுட்டுகிறான்.

இதைக் கேட்ட இராமன் மகிழவும் இல்லை; வெறுக்கவும் இல்லை. மன்னன் கட்டளை எதுவோ அதைச் செய்வதே தனக்குத் தர்மம் என நினைத்தான். அப்பணியை தலைமேற்கொள்ள முன் வந்தான்.

இங்கு வான்மீகத்திலிருந்து சிறு மாறுதலை கம்பன் செய்திருக்கிறான். சபையிலே தயரதன் கருத்தை அனைவரும் ஒருமனதாக ஆதரிக்கிறார்கள். உடனேயே தயரதன், இது புனிதமான சித்திரை மாதம்; யுவராஜ்யப் பட்டாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள் சீக்கிரம் நடக்கட்டும் என்று பேசுகிறான்.

"சைத்ர: ச்ரீமானயம் மாஸ: புண்ய: புஷ்பிதகானன:
யௌவராஜ்யாய ராமஸ்ய ஸர்வமேவோப கல்ப்யதாம்"

வசிட்டனும் நாளை சூரியோதயத்திற்குள் எல்லா ஏற்பாடுகளும் நடக்கட்டும் என அறிவிக்கிறார். ஜோதிடர்களும் நாளை நல்லநாள் என்று சொல்லுகிறார்கள். பிறகு தான் சுமந்திரனைவிட்டு இராமனை அழைத்து வரச் சொல்லுகிறான் தயரதன்.

ஆனால் கம்பனோ, அமைச்சர்கள், முனிவர்கள், மந்திரக் கிழவர்கள் அடங்கிய கூட்டத்தில்—சபையில், தனது கருத்தைச் சொல்ல அவர்களும் அதனை ஏற்கிறார்கள் எவ்வித மறுப்புமில்லாமல்—ஆனால் மிகவும் மகிழ்ச்சியுடன். பிறகுதான் சுமந்திரனை விட்டு இராமனை அழைத்துவரச் சொல்லுகிறான். இராமன் வந்த பிறகு அவனிடம், முடிசூட்ட இருப்பதாகச் சொல்லி, அவனது கருத்தையும் கேட்டு ஒப்புதல் பெற்று, பின்னர்தான் முடிசூட்டுதலுக்கு நாள் குறிக்கச் சொல்லுகிறான். வான்மீகி, இராமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட தயரதன் விரும்புவதாகக் குறிப்பிடுகிறார். ஆனால் கம்பனோ ராஜ்யப் பட்டாபிஷேகமே செய்ய இருப்பதாகக் கூறுகிறான்.

"நன்று சித்திரை நளிர்முடி கவித்தற்கு, நல்லோய்!
சென்று வேண்டுவ வரன்முறை அமைக்க"ச் சொல்கிறான்.

தயரதன்.

பின்னர் மன்னர்களுக்கு ஓலைபோக்குகிறான். வந்து சேர்ந்த மன்னர்களிடம், இராமனுக்கு முடி சூட இருக்கும் செய்தியைத் தெரிவிக்கின்றான். அனைவரும் தயரதனுடைய கருத்தை மகிழ்வுடன் வரவேற்கிறார்கள்.

இந்த இடத்திலே கம்பனிலும் சரி, வான்மீகத்திலும் சரி படிப்பவர்களிடையே ஒரு நெருடல் ஏற்படத்தான் செய்கிறது. அமைச்சர்களுடனும், வசிட்டன் போன்ற முனிவர்களிடமும் தன் கருத்தைச் சொல்லி, பின்னர் பல தேச மன்னர்களுக்கு ஓலை அனுப்பி வரவழைத்து, அவர்களிடமும் தன் எண்ணங்களைக் கூறுவதாக கம்பன், வான்மீகி இருவருமே கூறுகிறார்கள். இந்த மன்னர்கள் வரிசையில் கேகய நாட்டு மன்னனையும், பரதனின் தாய்மாமனான யுதாஜித்தையும், மிதிலை மன்னனும் சீதையின் கேள்வனாகிய

இராமனின் மாமனாராகிய ஜனகனையும் அழைக்காமல் ஏன் விடுத்தான் என்பதில் தான் நெருடல்!

திருமணம் முடிந்தகையோடு அயோத்தி வந்தடைந்த தயரதன், சிலகாலம் கழித்து பரதனை அழைத்து, உன் தாய்மாமனான யுதாஜித் உன்னைத் தன் நாட்டிற்கு அழைத்துச் செல்ல வேண்டி விரும்புவதால்தான், இதுவரை இங்கு தங்கியிருந்தான். அவனுடன் நீ செல்வாயாக எனப் பணிக்கிறான். பரதனும் இணைபிரியாத் தம்பி சத்ருக்கனனுடன் கேகயநாடு செல்வதாக வான்மீகம் குறிப்பிடுகிறது. கம்பனும் அப்படியே குறிப்பிடுகிறான்.

''ஆணையின் நின்மூதாதை, ஐய! நிற்
காணிய விழைவது ஓர் கருத்தன் ஆதலால்
கேணியில் வளைமுரல் கேகயம் புக
பூண் இயல் மொய்ம்பினாய் போதி என்றனன்''

இங்குதான் ஐயமே ஏற்படுகிறது. அனைத்து மன்னர்களுக்கும் ஓலை அனுப்பிய தயரதன், கேகய மன்னனுக்கும், மிதிலை மன்னனுக்கும் மட்டும் ஓலை அனுப்பாதது ஏன்? கம்பரும், வான்மீகியும் இதற்குத்தக்க காரண காரியங்களை ஏன் கூறாமல் விடுத்தார்கள் என்பதுதான். காவியத்தின் கதைப்போக்கிலே, இராமாவதாரத்தின் நோக்கம் அசுரர்களை அழிப்பதுதான். மேலும் தயரதன் கைகேயியைத் திருமணம் செய்து கொள்ளும் பொழுது கேகய நாட்டு மன்னனுக்குக் கொடுத்த ஒரு வாக்குறுதி, கைகேயியின் மூலம் பிறக்கும் மகனுக்குத்தான் ஆட்சியும், பட்டமும் என்பது. இது வான்மீகத்தில் சர்க்கம் 107ல் கன்யா சுல்கம் என விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இது தயரதனுடைய உள் மனத்தை உறுத்திக் கொண்டே இருந்திருக்க வேண்டும். புத்திரர்கள் இல்லாதிருந்த நிலையில், கைகேயியின் அழகில் மயங்கி, அவளைத் திருமணம் செய்து கொண்டு, பின்னர் வேள்வி மூலம் நான்கு புதல்வர்களைப்பெற்று, மூத்தவனாக இராமன் இருக்கும் பொழுது எவ்வாறு பரதனுக்கு பட்டம் கட்ட இயலும் என்ற வினா அவனது உள்ளத்தில் எழுந்திருக்க வேண்டும்.

இராமனுக்குப் பட்டம் சூட்டுவது என்று முடிவு செய்து, அமைச்சர்களிடமும் தன் கருத்தைச் சொல்லி ஒப்புதல் பெற்ற பின்புதான் மன்னர்களுக்கு அழைப்பு விடுக்கிறான். கேகய நாட்டு மன்னனுக்கும் அழைப்பு விடுத்து அவனும் அரசவைக்கு வரும் பட்சத்தில், தயரதன், முன்பு அவனுக்குக் கொடுத்திருந்த வாக்குறுதியை சபையோர் முன் கூறி, பரதனுக்கே ஆட்சியுரிமை கொடுக்கவேண்டும் என்பதை வலியுறுத்தக் கூடும். ஜனகன் மூத்தமகனுக்குத்தான் பட்டம் சூட்டும் முறைமை இருக்கிறது எனவே இராமன் தான் பட்டத்திற்குரியவன் எனக் கூறியிருக்கக் கூடும். எனவேதான் இவர்கள் இருவருக்கும் அழைப்பு விடுக்காமல் போனானோ என்றும் எண்ணவேண்டியிருக்கிறது.

வான்மீகத்தில் இராமனிடம் தயரதன் பேசும் பொழுது, நாளைய தினம் நன்னாள்; உனக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய இருக்கிறேன். என் மனம் விரைவினில் காரியத்தை முடிக்கத் தோன்றுகிறது. இத்தகைய காரியங்களுக்கு இடையூறுகள் பல ஏற்படலாம். பரதனும் வெளியூர் போயிருக்கிறான். இதுவே உன் மகுடாபிஷேகத்திற்குத் தக்க சமயமாகும். பரதன் மிகவும் நல்லவன்; உன்மேல் அபிமானம் நிறைந்தவன். ஆயினும் மனித புத்தி ஸ்திர மில்லாதது

"கிம் து ஸித்தம் மனுஷ்யானாம் அநித்ய மிதி மே மதி''

என்று பலவாறாக உள்ளத்தில் புதைந்து கிடக்கும் குமுறல்களையும், பீதியையும் வெளியிடும் வகையில் கூறுகிறான். இது வான்மீகத்தில் இருக்கிறது. கம்பன் இவற்றை இந்த இடத்தில் குறிப்பிடவில்லை என்பதையும் நாம் உணரவேண்டும்.

பின்னர் கணிதர்கள் முடிசூட்டு நாள் கூறுலும், தயரதன் வசிட்ட முனியை அழைத்து "வேண்டுவன ஒல்லையின் இயற்றி, நல்லுறுதி வாய்மையும் சொல்லுதி பெரிது'' எனச் சொல்லுகிறான். வசிட்டன் இராமனுக்கு முடிசூட்டுதல் பற்றியும், அரசு ஆட்சியின் தன்மைகள் பற்றியும், நீதிநெறிகளையும் பலப்பலச் சொல்லுகிறான். வான்மீகத்திலே தயரதனே இவ்வறிவுரைகளைச் சொல்லுவதாக அமைந்திருக்கிறது.

வள்ளுவன் பறையறிந்து இராமன் முடிசூட்டலைப் பற்றி மக்களுக்குத் தெரிவிக்கிறான். மாந்தர்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி, நகரை அலங்கரிக்கிறார்கள்.

இச்செய்தியைக் கேட்ட கூனி, கைகேயியின் அரண்மனைக்குச் சென்று, அவள் மனத்தை மாற்றி—தயரதனிடம் முன்பு சம்பராசுர யுத்தத்தின் போது அவள்பெற்ற இரு வரங்களில் ஒன்றினால் பரதனுக்கு அரசும், மற்றொன்றினால் இராமன் பதினான்கு ஆண்டுகள் காடேகவும் கேட்க உபாயம் சொல்ல, கைகேயி அரண்மனையில் தனிமையில் வளைதுறந்து அளகவான்நுதல் அரும் பெறல் திலகமும் அழித்தாள்; தலைவிரி கோலமாகக் கிடந்தாள்.

இராமனுக்கு முடிசூட்டும் நற்செய்தியைச் சொல்லுவதற்காக தயரதன் ராஜ பட்ட மகிஷியான கோசலையின் அரண்மனைக்குத்தான் சென்றிருக்க வேண்டும். ஆனால் அவனோ கைகேயியின் அரண்மனைக்குத்தான் செல்லுகிறான். பெற்றவள் கோசலை யானாலும், வளர்த்தவள் கைகேயிதானே எனப் பலரும் எண்ணலாம். இங்கேயும் ஒரு நெருடல்.

கைகேயின் அரண்மனையில் நுழைந்த தயரதன் அவள் இருக்கும் அலங் கோலமான நிலையைக்கண்டு அதிர்ச்சியுறுகிறான்; கவலை கொள்கிறான். கீழே வீழ்ந்து கிடக்கும் மானை எடுக்கும் யானை போல அவளை வாரி எடுத்தான். ஆனால் அவளோ மீண்டும் தரையில் வீழ்ந்தாள். "உனக்கு என்ன நேர்ந்தது; யார் இகழ்ந்-தார்கள்? அவர்கள் மடிவார்கள். உற்றது எல்லாம் சொன்ன பின் என் செயல்கள் காண்டி'' என்றான்.

வான்மீகத்தில் "தூக்கு தண்டனைக்கு உள்ளாகியவனை விடுவிக்க வேண்டுமா அல்லது நிரபராதியைக் கொல்ல வேண்டுமா? ஏழையைக் குபேரனாக்கவா அல்லது தனவானை ஆண்டியாக்கவா'' என்று கைகேயியின் முகவாய்க்கட்டையை பிடித்துக் கொண்டு தகாதனவற்றை எல்லாம் செய்யத் தயாராக இருப்பதாகக் குறிப்பிடப்படுகிறது.

"அவத்யோ வத்யதாம் கோ வா வத்ய : கோ வா விமுச்யதாம்
தரித்ர : கோ பவத் வாட்யோ த்ரவ்யவான் வாப்ய கிம்சன:''

கைகேயி தயரதனிடம் வரங்கள் என்று சொல்லாமல் "பண்டைய இன்று பரிந்து அளித்தி'' என்று கேட்கிறாள். தயரதனோ "உள்ளம் உள்ளம் உவந்து செய்வேன்; ஒன்று உலோவேன். வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை என்கிறான். அவளோ,

இராமன் மீது ஆணை என்ற வார்த்தைகளைப் பெற்ற பின்னர், சம்பராசுர யுத்தத்தின் போது முன்பு நீ அளித்த இரண்டு வரங்களை இப்பொழுது தந்திடுக என்கிறாள். வரங்கள் பெறுவதற்காக இத்துணை துயரம் நீ அடைய வேண்டுவதில்லை. இப்பொழுதே கொடுக்கிறேன் என்றான் ''உரங்கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதவனாகிய'' தயரதன்.

பரதன் நாடாளவும், இராமன் பதினான்கு ஆண்டுகள் காடேகவும் ஆக இரு வரங்களைக் கேட்டாள். இதைக் கேட்ட உடனேயே தயரதனுடைய உள்ளம் துயரத்தால் தவித்தது. ''நாகம் எனும் கொடியாள், தன் நாவின் வந்த சோகவிடம் தொடர'' துணுக்குற்றான் என கம்பன் எழுதுகிறான்.

''வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான்''
''ஊதுஉலையில் கனல் என்ன, வெய்து உயிர்த்தான்''
''உலர்ந்தது நா: உயிர் ஓடலுற்றது; உள்ளம் புலர்ந்தது''
''ஓவியம் ஒப்ப உயிர்ப்பு அடங்கி ஓயும்''
''வன்கைவேல் வெம்புண் நுழைகிற்க உழைக்கும் ஆனை போல்வான்''

என தயரனது துயரத்தை, சோகத்தை மிகவும் அற்புதமாக ஐந்து பாடல்களிலே கம்பன் வர்ணனை செய்கிறான். இராமன்பால் தயரதன் கொண்டுள்ள பாசம் இங்கு அபரிமிதமாய் வெளிப்படுகிறது.

கைகேயியைப் பார்த்து நீ புத்தி தடுமாறியது உண்டோ? நயவஞ்சகர் வந்து போதித்த வஞ்சகம் உண்டோ? உன் நிலை என்னவென்று சொல்லுவாயாக; என்மீது ஆணை எனச் சொல்லுகிறான். என்னிடம் யாரும் வந்து சோதிக்கவில்லை; புத்தி பேதலிக்கவும் இல்லை. இப்பொழுது நீ இவ்வரங்கள் தந்தால் ஏற்றுக் கொள்வேன் இல்லையெனில் பழி உனக்கு வர, நான் இப்பொழுதே மாண்டுவிடுவேன் என பதிலிறுக்கிறாள்.

''மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னனாகிய'' தயரதன் சோர்ந்து விழுந்தான் கைகேயியின் சொற்கேட்டு. அறமே கொடியது; சத்தியம் சாகட்டும் எனப் பலவாறாகச் சொல்லியழுது, பெண்களே இவ்வுலகில் இல்லை எனும்படி கூர்வாள் கொண்டு அழித்து நானும் கொடியவர்களுள் ஒருவனாக வீழ்வேன் என்று புலம்புகிறான்.

கைகேயியை இரந்தாவது இவள் மனத்தை மாற்றுவோம் என நினைக்கிறான். அவளது காலிலே விழுகிறான் - யார் தெரியுமா?

''கந்து கொல்யானைக் கழல் மன்னர் மேல் மேல் வந்து முந்தி வணங்கி
மிடைத் தாளானாகிய'' தயரதன்,

இராமன் பொருட்டு எதையும் செய்யத் தயாராகிவிட்ட நிலையைக் குறிக்கிறது.

''இந்த அரசாட்சியை உனது மகன் ஏற்றுக் கொள்ள மாட்டான். அவ்வாறு அவன் ஏற்றுக் கொண்டாலும் இந்த நானிலம் ஏற்காது. எல்லோரும் எள்ளி நகையாட வன்பழி கொள்வதால் என் பயன். உன் கூற்றை தேவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். மண்ணுல மாந்தர்கள் உயிர் வாழ விரும்ப மாட்டார்கள். பின் யாரோடு இருந்து அவன் ஆட்சி புரிவான்'' என்று தயரதன் கேட்கிறான். இங்கு ''கொள்ளான் நின்

சேய் இவ்வரசு'' என்று தயரதன் வாயிலாகக் கம்பன் குறிப்பிடுவதை ஊன்றி கவனித்தால் நிச்சயமாகப் பரதன் அரசுரிமையை ஏற்க விரும்ப மாட்டான் என்ற செய்தி நமக்குக் கிடைக்கிறது.

''யானே சொல்ல கொள்ள இசைந்தான் முறையாலே
தானே நல்கும் உன் மகனுக்குத் தரை''

என்றும் தயரதன் கூறுவதைப் பார்க்கும் பொழுது, என்னால் இராமனுக்குக் கொடுக்கப் பட்ட அரசை, முறையின் காரணமாக அவன் பரதனுக்கே கொடுத்து விடுவான் என்று சொல்லியதின் நோக்கம் கன்யாசுல்கத்தை நினைவூட்டுவதாக அமைகிறது எனவும் கொள்ளலாம். மேலும் கானகத்தில் இராமன் பரதன் சந்திப்பின்போது

''வரன்நில் உந்தை சொல்மரபினால்
தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்
உரனின் நீ பிறந்து உரிமை ஆதலால்
அரசு நின்னதே ஆள்க என்னவே''.

என்று இராமன் சொல்வது முன்னர் குறிப்பிட்ட முறையாலே என்ற சொல்லிற்கு இலக்கணமாகவும், ''உரனின் நீ பிறந்தது உரிமை'' என்பதாலே கன்யாசுல்கத்தை இராமன் தெரிந்திருந்தான் என்பதும் புலனாகிறது.

தயரதன் மீண்டும் வேண்டுகிறான். என் கண்ணை வேண்டுமானாலும் எடுத்துக்கொள். அதனினும் மேலான உயிரை வேண்டுமானாலும் எடுத்துக்கொள். வள்ளன்மைக்குப் பெயர் பெற்ற கேகயநாட்டு மன்னன் மகளே ''மண்ணே சொள் நீ; மற்றையது ஒன்றும் மற'' என்கிறான். இதன்மூலம் தயரதன் இராமனிடத்தில் கொண்டிருந்த அளப்பறிய அன்பு, பாசம், அதே நேரத்தில் சத்தியத்தின் மீது கொண்டிருக்கும் அசையாத நம்பிக்கை. கொடுத்த வரத்தை இல்லை என்று சொல்ல முடியாது. ஆனால் வரம் கேட்டவளிடமே மன்றாடி ஒரு வரத்தைத் திரும்பப் பெறுவது சத்தியத்தின்பாற்பட்டதுதானே!

மேலும் ''பேயினிடத்தில் இரந்து கேட்டால் அதுவும் தாய்போலக் கேட்டதைக் கொடுத்துவிடும். நீ இது தந்தால் பிழையாகுமோ'' என பலப்பலவாறு கூறிக் கெஞ்சுகிறான்.

ஆனால் கைகேயியோ, முன்பு கொடுத்த வரங்களை தரத் தயங்கி கோபித்தால், இனி சத்தியத்தை யார் காப்பாற்றுவார்கள் எனக் கேட்கிறாள் கடைசியாக மீண்டும் ஒன்றை தயரதன் கேட்கிறான்.

''நின் மகன் ஆள்வான்; நீ இனிது ஆள்வாய் நிலம் எல்லாம்
உன்வயம் ஆமே ஆளுதி தந்தேன்; உரைக்குன்றேன்
என் மகன், என்கண், என் உயிர், எல்லா உயிர்கட்கும்
நன்மகன் இந்த நாடு இறவாமை நய! என்கிறான்''.

''இராமன் என்னை விட்டு நீங்கி விட்டால் நான் பிழைத்திருக்க மாட்டேன். என் உயிர் இப்பொழுது உன் அடைக்கலமாக இருக்கிறது'' என மீண்டும் கேட்கிறான்.

''தந்த வரத்தைத் தவிர்க்க என்றால், உரன்தான் அல்லால் நல் அறமாகுமோ'' என கைகேயி பதில் இறுக்கிறாள், சத்தியத்தைச் சுட்டிக்காட்டி. இதனைக் கேட்ட மன்னன் ''இடி ஏறுண்ட மால்வரைபோல் மண்ணிடை வீழ்ந்தான்''.

''இது காறும் எல்வளையார் தம் இறையோரைக்
கொன்றார் இல்லை, கொல்லுதி நீயோ, கொடியாளே''

என்றும்

''நா அம்பால் என் ஆர் உயிர் கொண்டாய், இனி ஞாலம்
பாவம் பாராது இன்னுயிர் கொள்ள ஆசைப்படுகின்றாய்''

எனவும்

''.........என் மனை வாழும்
பெண்ணால் வந்தது அந்தரம் என்னப் பெறுவேனோ''

என்றும் பலப்பலச் சொல்லி அவளை நிந்திக்கிறான்; வருந்துகிறான்; துயரக் கடலிலே ஆழ்ந்துவிடுகிறான் தயரதன்.

நெஞ்சில் சிறிதும் ஈரமில்லாதவளாகிய கைகேயி, நீ கொடுத்த வாக்குப்படி—வரங்களின்படி—அவற்றை நிறைவேற்றாவிடில் நான் உயிர் துறப்பேன் எனச் சொல்லுகிறாள். இதனைக் கேட்ட தயரதன் இந்த இரண்டு வரங்களைத் தந்தேன். வசை வெள்ளத்திலே நீ உன் மகனோடும் நீந்துவாயாக எனக் கூறுகிறான்.

''ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம் என் சேய் வனம் ஆள
மாய்ந்தே நான்போய் வான்உலகு ஆள்வென் வசைவெள்ளம்
நீந்தாய், நீந்தாய் நின் மகனோடு நெடிந்து என்றான்''

கம்பன் இங்கு பயன்படுத்தும் சொற்கள், தயரதனின் மீளாச் சோகத்தையும், கைகேயியின் பேரில் இருக்கும் மாறாத கோபத்தையும், இராமனில்லாமல் நானில்லை என்பதையும் சுட்டிக் காண்பிக்கும் வகையில் கடும் சொற்களாலேயே அமைந்திருப்பதைக் காணலாம்.

வான்மீகத்திலே, ''கணவனுடைய துன்பத்தை பெற்றுக் கொள்பவள்தான் மனைவி. யாரும் செய்யத் துணியாத கொடிய துன்பத்தைச் செய்யத்துணிந்த நீ என் மனைவி இல்லை. கொடியவளாகிய உன் வயிற்றில் பிறந்த பரதனும் என் மகன் இல்லை'' என்று தயரதன் சொல்லுவதாக அமைக்கப்பட்டிருக்கிறது. இதைக் கேட்ட கைகேயி வெகுண்டு, ரோஷத்துடன் ''இது என்ன உளறல். என் மகனை அரசனாக்கி, இராமனை காட்டிற்கு அனுப்பி, என் சக்களத்தியின் தொல்லையை நீக்கினால்தான், நீ சொன்ன சொல் தவறாதவறாக ஆவீர். எனச் சொல்லுகிறாள்.

''ஸ்தாப்ய ராஜ்ய மம ஸுதம் க்ருத்வா ராமம் வனேசரம்
நிஸ்ஸ பத்னாம் ச மாம் க்ருத்வா க்ருதக்ருத்யோ பவிஷ்யஸி''

என்பது வான்மீகியின் ஸ்லோகம்.

இங்கு ஒரு குறிப்பை கம்பன் வான்மீகி இரண்டிலும் காண முடிகிறது. கூனியின் பேச்சில் கோசலை ராஜமாதாவாக வந்தால் கைகேயிக்கு எந்த வகையிலும் ஏற்றம் இருக்காது, எதற்கும் அவள் தயவில்தான் வாழ வேண்டிவரும் என்ற விதையை ஊன்றியது இங்கே வெளிப்படுகிறது. ''என் சக்களத்தியின் தொல்லை நீங்கினால்தான்'' என்ற சொல் இதனை உறுதிப் படுத்துவதாக அமைகிறது.

தயரதன் கைகேயியின் அரண்மனையில் மூர்ச்சித்துக் கீழே கிடக்கிறான். வெளியிலே நகர மாந்தர்கள் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருக்கிறார்கள். மன்னனை அழைத்துவர சுமந்திரனை வசிட்டன் ஏவுகிறான். அழைக்க வந்த சுமந்திரனிடம் கைகேயி இராமனை உடன் இங்கு அழைத்துவா என்கிறாள். அங்கு வந்த இராமனிடம் உன் தந்தை உனக்கு உரைப்பது ஒன்று உண்டு எனச் சொல்லி, ''ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய், தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்கரும் தவம் மேற்கொண்டு, பூழி வெங்கானம் நண்ணி, புண்ணியப் புனல்கள் சூடி, ஏழ் இரண்டு ஆண்டின் வா என்று, இயம்பினன் அரசன்'' என்று சொல்லுகிறாள். ''அரசன்'' என்று குறிப்பிடுவதற்குக் காரணம் இராமன் மறுப்பு ஏதும் சொல்லாமல், ஏற்றுக் கொள்ளவேண்டும் என்பதற்காகவே. இராமன் இச்சொல்லை—கட்டளையை ஏற்று கானகம் செல்கிறான் என்று கதை நகர்கிறது.

தயரதனைக் காண வந்த வசிட்டன் அவன் நிலைகண்டு திடுக்கிடுகிறான். கைகேயியைப் பார்த்து ''அரசன் அயர்வான் நிலை என்ன'' என்று கேட்க, ''தன்னால் நிகழ்ந்த எல்லாம் தானே தெரியச் சொன்னாள்'' கைகேயி. செய்திகளை உணர்ந்த வசிட்டன் மன்னனைத் தேற்றுகிறான். அவளைக் கடிந்துரைக்கிறான்.

இந்திலையில் மன்னன் தயரதன் கைகேயியை நிந்திக்கத் தொடங்கினான்; உணர்ச்சி மேலீட்டால்,

''கண்டேன்; நெஞ்சம் கனிவாய்; கனிவாய் விடம் நான் நெடுநாள்
உண்டேன்; அதனால், நீ என் உயிரை முதலோடு உண்டாய்;
பண்டே, எரிமுன், உன்னை, பாவி! தேவி ஆகக்
கொண்டேன் அல்லேன்; வேறு ஓர் கூற்றம் தேடிக் கொண்டேன்''

என்றும், எதற்கும் நீ அஞ்சாத பாவி; பழி பாவத்திற்குக் கூட பயப்படமாட்டாய். இனி என் சொல்வது; நான் இறக்கப் போவது உறுதி. அப்பொழுது உன் கழுத்தின் நாண்—தாலி, இறங்குவதும் உறுதி. அதைக்கொண்டு உன் மகனுக்குப் பட்டாபிஷேகத்திற்கு கட்டும் காப்புக்கயிராகக் கொள் எனச் சொன்னதோடு நில்லாமல்

''சொன்னேன் இன்றே; இவள் என் தாரம் அல்லள்; துறந்தேன்;
மன்னே ஆவான் வரும் அப் பரதன்தனையும் மகன் என்று
உன்னேன்; முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு என்றான்''

பரதனையும், கைகேயியையும் முறையே மகன், மனைவி என்ற நிலையிலிருந்து—உரிமையிலிருந்து தள்ளிவைத்து விடுகிறான். இக்குறிப்பு வான்மீகத்தின் அடிப்படையில் அமைகிறது.

இராமன் பிரிவு குறித்துத் தயரதன் சோகத்தை — புலம்பலை பதினொரு பாடல்களில் கம்பன் விவரிக்கிறான்.

''உடை மா மகுடம் புனை என்று உரையா, உடனே கொடியேன்
சடை மா மகுடம் புனையத் தந்தேன்! அந்தோ!''

''பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே, புகழின் புகழே''

''மெய்யின் மெய்யே''

''தமியேன் புகழே—உயிரே—உன்னைப் பெற்றேன்
அருமை அறிவேன்—பிழையேன் பிழையேன்''

''கள்ளக் கைகேசிக்கே உதவி, புகழ்க் கை கொண்ட
வள்ளல்தனம் என் உயிரை மாய்க்கும்! மாய்க்கும்''

இச்சோகமயமான சூழ்நிலையை மேலும் காண விரும்பாத வசிட்டன் அவ்விடம் விட்டு அகலுகிறான். கணவனின் நிலைகண்டு கோசலை வருந்துகிறாள்.

அவளிடம் தான் சாபம் பெற்ற வரலாற்றைச் சொல்லுகிறான். கானகத்திற்கு வேட்டையாட செல்லுகையில், சுனையொன்றில் யானை தண்ணீர் குடிக்கும் ஓசை வரவே, தான் ''சப்த வேதி'' என்ற பாணத்தைப் பிரயோகம் செய்ததையும், உண்மையில் அங்கு ஒரு அந்தணச் சிறுவன், தண்ணீர் எடுத்துக்கொண்டிருந்த பொழுது, அந்த அம்பு அவன் மேல் பாய்ந்து உயிர் மாள்கிறான். சிறுவன் இறந்துபட்ட செய்தியை கண்ணிழந்த அவன் பெற்றோர்களிடம் சொல்லி, வருந்துவதாகவும், அதன் பொருட்டு எந்த தண்டனையும் ஏற்றுக்கொள்வதாகவும், இனி அவர்களை தன் பராமரிப்பில் பார்த்துக் கொள்வதாகவும் சொல்கிறான். ஆனால் அவர்களோ மிகவும் மனம் வருந்தி, எங்களுக்கு இனி யாருமில்லை, உயிர்வாழவும் பிடிக்கவில்லை. நீயும் எங்களைப்போலவே புத்திர சோகத்தினால் உயிர் இழப்பாய் என்ற சாபத்தைக் கொடுத்து, உயிர் நீத்தார்கள் என்ற நிகழ்ச்சியைச் சொல்லி, அச்சாபத்தின் விளைவுதான் இராமன் பிரிவும், என் உயிர் நீங்குவதும்,

''அந்த முனி சொற்றமையன், அண்ணல் வனம் ஏகுதலும்
எம்தம் உயிர் வீகுதலும், இறையும் தவறா''

என்கிறான்.

இராமனைக் காட்டிலே கொண்டுபோய் விட்டுவந்த சுமந்திரன் தயரதனைக் காணச் செல்கிறான். தயரதன் அங்கு இருந்த வசிட்டனைப் பார்த்து ''வீரன் வந்தனனோ'' எனக்கேட்கிறான். அவனது துயரத்தைக் காணச் சகியாது வசிட்டன் அவ்விடம் விட்டு அகலுகிறான். அப்பொழுது சுமந்திரன் வர, தயரதன் ''நம்பி சேயனோ அணியனோ'' எனக் கேட்க,

''வேய்உயர் கானம் தன்னில் தானும் தம்பியும் மிதிலைப்பொன்னும்
போயினன் என்ன போழ்தத்தே ஆவி போயினன்''

என கம்பன் தயரதன் இறப்பை முடிக்கிறான். மண்ணுலக மாந்தர்கள் வருந்த, தேவர்களோ ''வந்த னென் எந்தை தந்தை'' என்று மகிழ்ந்தார்கள்.

இராமனது பிரிவை ஆற்றாத தயரதன் அவனை ''மெய்யின் மெய்யே'' என்று சொல்லி வருந்துகிறான். கோசலையோ தயரதனை ''மெய்யின் மெய்யே! உலகின் வேந்தர்க்கெல்லாம் வேந்தே'' என விளித்து வருந்துகிறாள். தயரதன், இராமன் இருவருமே அறத்தை—சத்தியத்தை—தவறாமல் காப்பவர்கள். அதன் காரணமாக சொன்ன சொல்லை — வரம் கொடுத்ததைக் — காப்பாற்றிய தயரதனை மெய்யின் மெய்யாகவும், தந்தை கட்டளை மேற்கொண்டு கானகம் சென்ற இராமனையும் மெய்யின் மெய் எனவும் கம்பர் அடைமொழி குறித்து குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது. தந்தையின் மரணம் கேட்ட இராமனது புலம்பல் இந்த வாய்மையை உறுதி செய்கிறது.

''நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனி அறத்தின் தாயே! தயா நிலையே
எந்தாய் இகழ்வேந்தர் ஏறே. இறந்தனையே
அந்தோ இனி வாய்மைக்கு ஆர் உளரே மற்று''

இந்த நிகழ்ச்சியோடு தயரதன் பற்றிய செய்திகள் அயோத்தியா காண்டத்தில் நிறைவு பெறுகிறது. தயரதன் இராமன் பேரில் கொண்டிருந்த அளப்பரிய பாசமும், அன்பும், கன்யா சுல்கத்தின் காரணமாக, அவசரகதியில் அமைச்சரவையைக் கூட்டி, ஜனநாயகரீதியில் அவர்களிடம் இராமனுக்குப் பட்டாபிஷேகம் நடத்த ஒப்புதல் வாங்கியதும், மணவினை முடிந்தவுடன் பரதனை அவன் மாமனோடு கேகய நாட்டிற்கு அனுப்பி இப்பிரச்சனைக்குத் தீர்வு காண முடிவு செய்ததும் சற்று நெருடலாக இருந்தாலும், கம்பன் கன்யா சுல்கத்தை வெளிப்படையாகச் சொல்லாமல், கோசலை, இராமன், பரதன் ஆகியோர் இவற்றை அறிந்திருந்ததாகத் தக்க இடங்களிலே சொல்லுவது கம்பனுடைய கைவண்ணத்தைக் காட்டுகிறது.

மெய் என்ற சொல்லுக்கு உண்மை—சத்தியம் என்றும், உடல் என்றும் பொருள் உண்டு. சத்தியம் என்ற உயிருக்குத் தயரதன் உடலாக இருந்தான் என்பதை கோசலையின் வாயிலாகக் கூறுவ'தும், அறத்தின் நாயகனாகிய இராமன் என்ற உயிருக்கு தயரதன் உடலாகவும் இருந்தான் என்பதை ''மெய்யின் மெய்'' எனவும் சொல்லி, உயிர் பிரிந்தவுடன் உடல் செயலற்று விடுகிறதல்லவா? அதுபோல் இராமன் என்ற உயிர் பிரிந்தவுடன் தயரதன் வெறும் மெய்யாகத்தான் விளங்குகிறான். இதனை ''மெய்யே நெடியான் நீங்க, நீங்கும் என் ஆவி இனி'' எனக் கூறுவதிலிருந்து புலனாகிறது.

தயரதன் மூலமாகப் பல பாத்திரங்களின் தனித் தன்மையை, உள்ளுணர்வுகளை வெளிப்படுத்துவதும் நம்மைத் தொடுவதாக இருக்கிறது. ஜனநாயக ரீதியில் அரசியல் நிகழ்வுகளைத் தீர்க்கும் வல்லமை படைத்தவனாகவும் காட்சியளிக்கிறான். கைகேயியின் மீது கொண்ட தனிப்பாசத்தால்—காமத்தால்—அவளுக்குக் கட்டுப்பட வேண்டிய சூழ்நிலை அவனுக்கு ஏற்படுகிறது. அதே நேரத்தில் சத்தியத்தினின்று பிழறாதவனாகக் காட்டியிருப்பதும், ''நல் அறத்தின் மூர்த்தி'' என்றும், ''தனியறத்தின் தாய்'' என்றும், ''அறத்திற்கு ஆர் உளார்'' எனவும் கம்பன் தனிச் சிறப்பு செய்து தயரதனை உயர்த்திக் காண்பிப்பது சாலவும் சிறப்புடையது எனக் கூறி இதனை நிறைவு செய்கிறோம். ●



''கங்கை பெருகி அலைமோதிக் கரைபு ரண்டு வருவதெனக்
தங்கு தடையில் லாதொழுகும் தமிழின் அழுதம் ததும்பியெழப்
பொங்கு புகழ்சேர் இராமகதை புகன்ற கம்ப நாடன்சீர்
எங்கும் பரவி இவ்வுலகில் என்றும் வளர்க வளர்கவே''

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

# சுமந்திரன்

✵

முனைவர் (திருமதி) து. லலிதா

வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட மிகப் பழங்கால முதற்கொண்டே நம்முடைய நாடு முடியாட்சி முறையைப் பின்பற்றியதாகவே இருந்து வந்துள்ளது. அவ்வகையில் நாட்டைக் காக்கின்ற பெரும் பொறுப்பு அரசனுக்குண்டு என்று கருதிய அக்கால மக்கள் அவனைக் கடவுளுக்கு நிகராகவே கருதினர். 'இறைவன்' என்னும் சொல் என்றும் நிலைத்திருக்கும் கடவுளையும் என்றும் நிலைத்திருப்பதான அரச முறையைப் பேணிக்காக்கும் அரசனையும் உணர்த்தி நிற்பது எண்ணத்தக்கது. மக்களைக் காக்கும் நோக்கில் தனக்குரிய கடமையைச் செய்யும்போது அரசன் பல்லோர் குழுவை நாடி நிற்பது இன்றியமையாதது. பழங்காலத்தில் - குறிப்பாக சங்ககாலத்தில் அரசனுக்குத் துணையாக ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆகியவை இதன் பொருட்டு இருந்தன. ஐம்பெருங்குழுவில் அமைச்சர் முதலிடம் பெறுவது குடிமக்களுடைய நன்மை கருதிச் செயல்படும் அரசனுக்கு பல்லாற்றானும் அவர்கள் துணைநின்ற செய்தியைப் புலப்படுத்தும்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் சிறப்பு வாய்ந்த அமைச்சர்களைத் துணையாகக் கொண்டே ஆட்சி புரிந்தனர். தம் உயிருக்குத் துன்பம் நேர்ந்தாலும் அது பற்றிக் கவலையுறாமலும் அரசன் சினந்தபோதும் அதைத் தாங்கிக் கொண்டும் தொடர்ந்து அவனுக்கு அறங்களை எடுத்துரைத்து அவர்கள் வீரர்களாக விளங்கினர். அத்தகைய நல்லமைச்சர்கள் 'மந்திரச் சுற்றம்' என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். பால் தனது இனிமை மாறிப் புளிப்பினும் ஞாயிறு தன் ஒளி குன்றி இருளினும் வேதங்களில் கூறப்பட்டுள்ள ஒழுக்கம் வேறுபடினும் வேறுபாடில்லாத—ஒரே படித்தான சூழ்ச்சியினை உடையவர்களாய் அமைந்து அரசர்களுக்கு அவர்கள் அறிவுரை கூறினர்.

'மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்' என்று மன்னனை உயிராகக் கருதிய கருத்தினின்றும் மாறுபட்டு, மக்கள் உயிரென்றும் உயிரனைய அம்மக்கள் மன்னுகின்ற உடல் 'மன்னன்' என்றும் கருதுகின்ற மாற்றத்தைச் செய்தவர் கம்பர். உயிரனைய மக்களைக் காக்க வேண்டிய பொறுப்பு மன்னனுக்கு உண்டு என்பது இதன்வழி அறியலாகும். உயிர் தங்குகின்ற உடலாக விளங்கும் மன்னனுடைய குடிமக்களைக் காக்கின்ற பொறுப்பில் அவனுக்கு அனைத்து வகையாலும் துணை நிற்பவர்கள் அமைச்சர்கள். அமைச்சர்களின் அத்தகு மேம்பாடு கருதியே அரசனுக்குரிய ஆறங்கங்களைக் குறிப்பிட்ட ஆன்றோர் படை, குடி, கூழ், நட்பு, அரண் என்பதனோடு அமைச்சரையும் குறிப்பிட்டனர்.

நாட்டையாளும் அரசியல் வண்டியைச் செங்கோன்மையாகிய நன்னெறியில் செலுத்துவதற்கு இரண்டு காளைகள் வேண்டும். அரசனும் அமைச்சனும் அவ்விரு

காளைகளாக அமைவோரேயாவர். நன்னெறி காட்டும் பொன்னனைய நீதிகளை மன்னவர் செவியில் அழல் மடுப்பது போல் சொல்லுவோரே நல்லமைச்சர். இதனை

''மன்னவர் செவியழல் மடுத்த தாம் என
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள்''

என்று கூறுகிறார் கச்சியப்பர். நீதிநெறியை விளக்கிய குமரகுருபரர் அமைச்சரை யானைப் பாகர் என்று குறிப்பிட்டுள்ளார்.

இராம காவியத்தில் இடம்பெறும் கோசல நாட்டு மன்னன் தசரதனுக்கு அமைச்சர்களாக அறுபதினாயிரம் பேர் இருந்தனர். அவர்களுக்கெல்லாம் தலைமை தாங்கிய முதலமைச்சனாக சுமந்திரன் விளங்குகிறான். தசரதனுக்கு மனைவியர் அறுபதி னாயிரவர் என்றாலும் அவனுடைய மனைவியர் என்னும்போது கோசலை, கைகேயி, சுமத்திரை என்னும் பட்டத்துக்குரிய முத்தேவியரை மட்டுமே குறிப்பது போல அறுபதினா யிரவர் அவனுக்கு அமைச்சர்களாக விளங்கினார்களெனினும் அவர்களுள் 'அமைச்சன்' என்று தனித்து ஒருமையில் சுட்டும்போது அது தலைமைத் தன்மை வாய்ந்த முதல் அமைச்சனாம் சுமந்திரனையே குறித்து நின்றது.

தசரத மன்னனின் அமைச்சர்கள் குல முதல் தொன்மையர். கலையின் குப்பையர். பலமுதல் கேள்வியர். நடுவு நோக்குவார். தருமம் தாங்கினார். உறுபொருள் உணரும் கேளார். வினையின் வந்ததாயினும் மாற்றல் ஆற்றும் பெற்றியர். பிறப்பின் மேன்மைப் பெரியவர். அரிய நூல் கற்றவர். மானநோக்கில் கவரிமா அனைய நீரார். அறம் குணித்த மேலோர். சீலமும் புகழுக்கு வேண்டும் செய்கையும் தெரிந்தோர். உறுதி யாவும் தலைவற்குப் பயக்கும் நீரார். தம்முயிர்க்கு உறுதி எண்ணார். நீதி விடாது நின்று உரைக்கும் வீரர். செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார். மும்மையும் உணர வல்லார். ஒருமையே மொழியும் நீரார். தொல்லை நல்வினையென உதவும் சூழ்ச்சியர். திருவின் பெட்பினர். யாவராலும் புகழ்ந்து பாராட்டப் படுவதற்குரிய இத்தகைய இயல்புகள்

மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்

என்னும் குறட்பாக்கள் கூறும் தன்மைகளை ஒத்துள்ளமை உணரலாம்.

தசரதன் அவையைக் கூட்டி, தான் துறவறம் கொள்ளப் போகும் செய்தியை அறிவிக்க, அது அமைச்சர்களுக்கு இன்பத்தையும் துன்பத்தையும் ஒருங்கே ஏற்படுத்தியது. இராமனை அரசனாக்கும் அவன் உள்ளக்கருத்து பற்றிய செய்தி அவர்களுக்கு இன்ப மூட்டியதாயினும் துறவறம் பூணுவதற்காக வனம் போகும் செய்தி துன்பமூட்டியது. அதனால் அவர்கள் இரண்டு கன்றுகளுக்கு இரங்கும் ஒரு பசுவைப்போல் இருந்தனர். பின்னர் தசரதன் செய்யத்தக்கது பொருந்துவதே என்னும் முடிவால் அதற்கு இசைந் தனர். அவையிலிருந்த அமைச்சர்கள் அனைவருடைய கருத்தையும் உணர்ந்து எழுந்து கூறுவோனாக சுமந்திரன் அறிமுகமாகிறான். அதாவது

''தொழுத கையினன் சுமந்திரன் முன்னின்று சொல்லும்'' (47)

என்று சுமந்திரன் என்னும் பாத்திரத்தை அறிமுகப் படுத்துகிறார் கம்பர். சுமந்திரன் என்னும் சொல் நல்ல ஆலோசனையுடையவன் என்னும் பொருளைக் கொண்டது. அவன் ஆலோசனை கூறுவதில் வல்லமை, நயம்பட உரைக்கும் நாவன்மை, பண்புடைச் சொற்களை அன்புடன் பேசும் ஆற்றல் உடையவனாதலால் தசரதனுக்கு உற்றது கூறும் அமைச்சனாகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவனாகவும் திகழ்ந்ததோடன்றி தேரோட்டுவதில் வல்ல அரசனுக்குரிய சாரதியாகவும் விளங்கினான்.

இராமனுக்கு முடிசூடுவதும் தசரதன் துறவு மேற்கொள்ளுவதும் அறமேயாகும் என்று மகிழ்ச்சி மிக்கவனாகக் கூறுபவன்

''மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்று
அறத்தின் ஊங்குஇனிக் கொடிதுஎனல் ஆவது ஒன்று யாதோ'' (48)

என்று இன்பமும் துன்பமும் கலந்த நிலையில் பேசுகிறான். சூரிய குலத்தரசர்கள் தம் மைந்தரிடம் ஆட்சியை ஒப்படைத்துவிட்டு, தவம் செய்வதற்காக அரண்மனை நீங்கிச் செல்வதைச் சிறந்த அறமாகக் கொண்டிருந்ததை சுமந்திரன் நன்கு அறிந்தவனாதலின் செய்ய வேண்டிய அறத்தைப் பற்றித் தெரிவித்தான். மறத்தல் செய்கிலாத் தருமமாக அவன் குறிப்பிடுவது மூத்த மகனுக்கு முடிசூட்டியபின் காட்டுக்குச் சென்று மாதவம் இயற்றுவதையேயாகும். உறுதி பயக்கும் உண்மைகளை இங்ஙனம் அஞ்சாது எடுத்துரைத்தவன்

''முரசம் ஆர்ப்பநின் முதல்மணிப் புதல்வனை முறையால்
அரச னாக்கிப்பின் அப்புறத்து அடுத்தது புரிவாய்'' (49)

என்றும் குறிப்பிடுகிறான். முன் பின்னாகச் செய்யத் தகும் முறைமை அறிந்துரைக்கும் நல்லமைச்சனாக விளங்குகிறான் அவன். முறைப்படி எண்ணிச் செயல்புரியும் இத்தகைய தன்மை அவனுக்கு உண்டு என்பதை கங்கையாற்று நாவாய்களில் பரதனின் நால்வகைப் படைகளையும் ஏற்றுவதிலும் காணமுடிகிறது. வரிசையறிந்து சீர்தூக்கிப் பார்த்து செயல்புரியும் வன்மையுடையான் அவன் என்பது இதன்வழி தெளிவாகும்.

அமைச்சர்களின் இசைவு கண்டு மகிழ்ந்த தசரதன், இராமனை அழைத்து வருமாறு சுமந்திரனுக்கு ஆணையிட்டான். அப்போது குறிப்பறிந்து நடப்பவனான சுமந்திரன் அவன் அடிதொழுது தனக்கே அரசாட்சி வந்து சேர்ந்ததுபோல் பெருமகிழ்ச்சியுற்று அழகிய தேர்மீது அமர்ந்து இராமனை அழைத்து வருவதற்காக அவனுடைய மாளிகையை அடைந்தான். நீங்காது தொண்டு புரியும் இலக்குவனும் சிறிது நேரங் கூடப் பிரிதலாற்றாச் சீதையும் தன்னருகே விளங்க, இராமன் அங்கு இருந்தான். அக்காட்சியைக் களிப்புறக் கண்டான் சுமந்திரன். தம்மைச் சார்ந்தவர் இன்பத்துக்காக இன்புறலும் அவர் துன்புறும்போது அதற்காகத் துன்பப்படுதலும் பண்புநலம் வாய்க்கப் பெற்ற மேலோரிடத்து மட்டுமே காணவியலும். இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் ஒருங்கிருந்த காட்சியைக் கண்ட சுமந்திரன் மகிழ்வுற்றான் என்பது அத்திருக் காட்சியில் திளைக்கும் அவனது பண்பு மேம்பாட்டைக் காட்டுவதாக அமைகிறது.

''பெண்ணின் இன்னமுது அன்னவள் தன்னொடும் பிரியா
வண்ண வெஞ்சிலைக் குரிசிலும் மருங்கினி திருப்ப
அண்ணல் ஆண்டிருந் தான்அழகு அருநறவு எனத்தன்
கண்ணும் உள்ளமும் வண்டெனக் களிப்புறக் கண்டான்'' (52)

என்பது பாடல். திருமகள் துணையுடன் பரமபதத்தில் உறையும் பெருமானைக் கண்டு அடியார்கள் களிப்பது போல சுமந்திரன் இராமனைக் கண்டு பெருமகிழ்ச்சியடைந்தான். அவனை அழைத்து வருமாறு மன்னவன் சொன்னதாகக் குறிப்பிட, அவனும் விரைந் தெழுந்து தேரின்மீது சென்றான்.

திருமுடி சூட்டும் நாளில் விரைவாகச் சென்று தசரதனை அழைத்து வருமாறு வசிட்டர் சுமந்திரனிடம் கூற, அவனும் கைகேயியின் அந்தப்புரத்தில் அரசன் இருப்பதை அறிந்து அங்குச் சென்றான். சென்றவனிடத்து

''பெண்டிரில் கூற்றம் அன்னாள் 'பிள்ளையைக் கொணர்க' '' (83)

என்றாள். அவனும் இராமனை அழைத்து வருவதற்காக

''பொன்திணி மாடவீதி பொருக்கென நீங்கி'' (84)

போய் அரியணையில் அமரவிருக்கும் எதிர்கால அரசன் என்னும் மரியாதை காரணமாக அவனைத் தொழுது கைகேயி சொல்லைத் தெரிவித்து 'விரைவில் வருக' என்று கூறினான்.

தந்தையின் ஆணையாக கைகேயி கூறியதைக் கேட்டு மகிழ்ந்த இராமன் அவ் வாணையை ஏற்று மனைவி சீதையுடனும் தம்பி இலக்குவனுடனும் அயோத்தி மாநகர் நீங்கிச் சென்றபோது தேர்ப்பாகனும் அமைச்சனுமாகிய சுமந்திரனுடன் நகரமக்களும் சென்றனர். ஒரு சோலையை அடைந்து இராமன் முனிவர்களோடு தங்க, பின்தொடர்ந்து சென்றோரும் சோலையின் புறத்தே தங்கினர். இரவு வர, யாவரும் உறங்கும்போது சுமந்திரனை அழைத்து

''பூண்டபே ரன்பி னாரைப் போக்குவது அரிது போக்காது
ஈண்டுநின்று ஏகல் பொல்லாது, எந்தை! நீ இரதம் இன்னே
தூண்டினை மீளநோக்கிச் சுவட்டை யோர்ந்து என்னை "அங்கே
மீண்டனன்'' என்ன மீள்வர இதுநின்னை வேண்டிற்று...'' (556)

என்று இராமன் கூற, அதுகேட்ட சுமந்திரன் தான் வெறுந்தேருடன் திரும்பிச் சென்றால் ''தாங்கள் இல்லாமல் அயோத்தி மாநகர மக்கள் படுகின்ற துயர நிலைகளைக் காணுதற்கு உடன்பட்டவன் ஆவேன். அதனால், தாங்கள் காட்டிற்குச் செல்ல வேண்டுமென்று வரம் வேண்டிய அந்தக் கொடிய தாயினைவிட, கொடுமையில் மேம்பட்டவன் ஆவேன்'' என்று வருந்திக் கூறினான்.

''செவ்விய குரிசில் கூறத் தேர்வலான் செப்பு வான் 'அவ்
வெவ்விய தாயின் தீய விதியினின் மேலன்......'' (557)

என்பது அக்கூற்று. இராமபிரானை விட்டு விட்டு வந்ததாகத் தன் வாயால் சொல்லும்படி தனக்கு நேரிட்டதே என்று வருந்தி 'இரும்பின் நெஞ்சினேன்' என்று தன்னைத் தானே பழித்துக் கொள்கிறான்.

''வன்புலம் கல்மனம் மதியில் வஞ்சனேன்
என்புலப்பு உறஉடைந்து இரங்கு மன்னன்பால்
உன்புலக்கு உரியசொல் உணர்த்தச் செல்கெனோ?
தென்புலக் கோமகன் தூதின் செல்கெனோ?'' (560)

'நால்திசை மாந்தரும் நகர மாக்களும்
தேற்றினர் கொணர்வர்உன் சிறுவன் தன்னை' என்று
ஆற்றின அரசனை ஐய! வெய்யஎன்
கூற்றுஉறழ் சொல்லினால் கொலைசெய் வேன்கொலோ? (561)

என்று செய்வதறியாது திகைத்தவனாகவும் உள்ளான்.

இராமன் காட்டுச்குச் சென்று விட்டான் என்பதை தசரதனும் ஏனையோரும் அறிந்த மாத்திரத்திலேயே இறப்பு நேரிடவும் கூடும் என்பதை மனத்துட் கொண்டே தன் வாயிலாக வரப்போகும் அச்செய்தி எமதூதன் போலவும் கூற்று உறழ் சொல் போலவும் அவர்களைத் துன்புறுத்தும் என்று பேசுகிறான். இராமன் பிரிவு பற்றிய பெருந்துயர் சாதாரணமானதன்று என்பதை நுண்ணிதின் உணர்ந்த அவன் உயிர்கதுவு வதாகிய எமபயம், கூற்று உறழ் சொல் ஆகியவற்றை இயைபுறுத்திக் காட்டுகிறான். நிகழவிருக்கும் கொடுமை இதன் மூலம் அவனால் நன்கு உணர்த்தப் படுகிறது. குறிப் பிட்ட அந்நிகழ்வுக்குக் காரணன் தானில்லை என்பதையும் தான் செய்தியைச் சொல்லும் தூதுவன் போன்றவனே என்பதையும் முற்றிலுமாக உணர்ந்து கொண்ட நிலையில் சொல்லும் செய்தியால் பிறருக்கு இழப்பு ஏதும் வந்துவிடக் கூடாது என்பதை எண்ணி அதைச் சொல்வதற்குக் கூட தயக்கம் காட்டுகின்ற அவனுடைய பண்பு அடுத்தவருடைய இன்னல்களுக்காக இரங்குகின்ற அருங்குணத்தைச் சுட்டுவதாக உள்ளது.

இராமனைக் காட்டில் விட்டு தான் மட்டும் வந்த செய்தியறிந்தால் நகரத்தார் வருந்துவர் என்றெண்ணி, பின்னர்

''எங்கள் கோமகற்கு இனி என்னில் கேகயன்
நங்கையே கடைமுறை நல்லள் போலும்'' (562)

என்று கூறி இராமனை அடியுறத் தழுவினான்; படியுறப் புரண்டான்; பலபடியாகப் புலம்பினான். அயோத்திக்கு அழைத்துச் செல்வதே தன் கருத்து என்று விளங்கும்படி இராமனிடத்துச் சொல்லியும் அவ்வெண்ணமே இல்லாத அவன் நிலை கண்டு இடியேறுண்ட நாகம் போலத் துடித்து, துன்புற்று நெஞ்சம் குமுறினான். அவனது இந்நிலையை கம்பர்

''அழுங்கு பேர்அறா இடியுறத் துவளுவது என்னும் இன்னலன்'' (563)

என்கிறார். நெஞ்சங்குமுறி வருந்திப் புலம்பிய சுமந்திரனைக் கைகளால் எடுத்து, ஆரத் தழுவி, அவன் கண்ணீரைத் துடைத்து 'தான் நகருக்கு மீண்டு வருவது தகுதியன்று' என்பதற்குரிய காரணங்களை எடுத்துக் கூறியபோது சுமந்திரனின் பண்புகள் புலப்படு முகத்தான்

''பிறத்தல் என்று உற்றபின் பெறுவ யாவையும்
திறத்துளி உணர்வதோர் செம்மை உள்ளத்தாய்'' (565)

என்று கூறுவது மனிதப் பிறவியிலுள்ள இன்ப துன்பங்களை முறையாக ஆராய்ந்து அதற் கேற்றபடி நடப்பவன் சுமந்திரன் என்பதை விளக்குகிறது. 'தூய வீரனாகிய நீ என்னை அறநெறியில் செல்ல வேண்டுமென்று சொல்ல வேண்டியிருக்க, அதற்கு மாறாக நடக்கச் சொல்லுதல் அமைச்சனாகிய உனக்குத் தகுதியாகாது'' என்ற இராமன்

''ஊன்திறந்து உயிர்குடித்து உழலும் வேலினாய்'' (568)

என்று கூறுமிடத்து சுமந்திரனின் போர் ஆற்றல், வலிமை, போர்க் களத்தில் பெறும் வெற்றி ஆகியவை விளக்கப்படுகின்றன. ''பணியாளரின் கடமை, தலைவனுக்குக் கீழ்ப் படிதலாகிய அடிமைத் தொழிலினின்று மாறுபடுதல் அன்று'' என்னும் நீதி நெறியை எண்ணிப் பார்த்து இராமனின் திருவடிகளை வணங்கி, மூவரிடம் விடைபெற்று தேரைப் பூட்டினான். அவன் தேர் பூட்டிய விதத்தை

''கூட்டினன் தேர்ப்பொறி கூட்டிக் கோல்முறை
பூட்டினன் புரவிஅப் புரவி போம்நெறி
காட்டினன் காட்டித்தனி கல்வி மாட்சியால்
ஒட்டினன் ஒருவரும் உணர்வு றாமலே'' (584)

என்று கம்பர் வருணிக்கிறார். குதிரைகளைச் செலுத்தும் வித்தையில் தனக்கு ஏற்பட்டுள்ள திறனால் தேர் செல்லும் ஒலிகேட்டு ஒருவரும் விழித்துக் கொள்ளாத வகையில் ஓசை யின்றி, விரைவாக அத்தேரை ஓட்டி ஐந்து நாழிகைக்குள் அயோத்தி சென்று வசிட்டரிடம் இராமன் கூறியவற்றைச் சொன்னான். அவர் அவனை அழைத்துக் கொண்டு தசரத னிடம் சென்றார். தேர்வந்த செய்தியை அறிந்தவுடன் 'இராமன்தான் திரும்பிவந்து விட்டான்' என்றெண்ணி வந்த அமைச்சர் பெருமக்கள் இராமனைக் காணாது, கண்களில் நீர் மல்க நின்ற சுமந்திரனை மட்டும் கண்டு வருந்தினர்.

தசரதன் குற்றுயிராகக் கிடக்கும் நிலையில் அருகிருந்த வசிட்டரை நோக்கி 'இராமன் வந்துளனோ?' என்று வினவ, அதற்கு மறுமொழியாக 'இல்லை' என்றுரைத் தால் தீங்காகவும், ஆம் என்று உரைத்தால் அது பொய்யாகவும் ஆகும் என்பதை உணர்ந்து தடுமாறிய முனிவர் நிலைகண்ட அவன் மனம் குழம்பி ஆவி சோர்ந்தான். அந்நிலை காண ஆற்றா முனிவர் அவ்விடத்தி னின்றும் அகல, பின்னர் தசரதன் சுமந்திரனை நோக்கி

''நம்பி சேயனோ? அணியனோ?'' (597)

என்று வினவினான். அதற்கு மறுமொழி கூறும் சுமந்திரன்

''வேய்உயர் கானில் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்
போயினன்'' (597)

என்றான். இவ்விடத்து அரசன் கேட்ட கேள்வி இராமன் இருக்கிறானா? சென்று விட்டானா? என்பதுதான். ஆனால் அதற்கு பதிலிறுக்கும் வகையில் அமைந்துள்ள மேற்கண்ட சுமந்திரன் கூற்று அவனது மதிநுட்பத்தையும் தாம் உரைப்ப தால் அரசர்க்குத் தீங்கு எவ்வகையிலும் வந்து விடக் கூடாது என்று எண்ணித் துணிகின்ற தன்மையையும் ஒருங்கே விளக்குவதாக உள்ளது. ஏமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தனை எவ்வகையிலேனும் கொன்று விட்டு தான் அரசனாக விரும்பிய முதலமைச்சன் கட்டியங் காரன் அவ்வெண்ணத்தை மறைத்து அதற்குப் பிறிதொரு காரணம் கற்பித்து சகஅமைச்சர்களிடம் உரைக்கும்போது வேந்தனுக்குப் பகையாய் விளங்கும் ஒரு தெய்வம் தன்னிடத்து வந்து இராப்பகலாக 'அரசனை நீ கொன்று விடு' என்று வற்புறுத்துவதாக கூறுவதில் காணலாகும் வஞ்சகத் தன்மையோடு தான் கூறும் சொற்களால் கூட அரசனுக்கு ஏதும் வந்துவிடக் கூடாது என்றெண்ணும் சுமந்திரனின் தன்மையை ஒப்பிட்டு நோக்கும்போது குணமென்னும் குன்றேறி நிற்கும் அவன் நற்பண்பு புலனாகும்.

தசாதன் வினவிய வினாவுக்குரிய விடையை மட்டும் சுமந்திரன் கூறுவதாக இருந்தால் சேயன் அல்லது போயினன் என்னும் அளவில் கூறுவதோடு மட்டும் நின்றிருக்கலாம். அவ்வாறில்லாமல் அவன் காட்டுக்குச் சென்று விட்டான் என்றாலும் தனியாகச் செல்லவில்லை; தம்பி, மனைவி ஆகியோருடனும்தான் அவன் செல்லுகிறான் என்பதைப் புலப்படுத்துமுகமாகவே அது அமைகிறது. சுமந்திரன் மதி நுட்பமும் நாவன்மையும் படைத்தவன். சொற்களை அளந்தறிந்து பேசுவதில் வல்லவன். அதனால் தான் 'இராமன் போனான்; அவன் சீதையையோ இலக்குவனையோ தன்னுடன் வருமாறு சொல்லிக் கட்டாயப் படுத்தவில்லை; தம்பியும் சீதையும் அவர்களாகவே அவனுடன் சென்றனர்' எனவும் பொருள்பட 'போயினன்' என்னும் ஒருமை முடிவு கொடுத்து அவன் மொழிவதாக அமைக்கிறார் ஆசிரியர். போனவன் இராமன் ஒருவனே என்பதும் ஏனைய இருவரும் தாங்களாகவே விரும்பி அவனுடன் சென்றவர்கள் தாம் என்பதும் இதனால் அறியக் கிடக்கிறது. எனினும் 'தானும்' என்பதில் காணப்படும் உம்மையால் அவன் ஒருவன் மட்டும் செல்லவில்லை என்னும் உண்மையையும் நுட்பமாகப் புலப்படுத்தும் வகையிலேயே 'தானும்' என்று தொடங்கி அவர்களும் உடன் செல்வதாகக் குறிப்பிடுகின்றான்.

அரசன் இன்றி நாடு இருப்பது குறித்து வசிட்டமுனிவரும் அமைச்சர்களும் ஆலோசித்து பரதனை ஆட்சிப் பொறுப்பில் அமர்த்த எண்ணுகின்றனர். அப்போது அழகிய பெரிய தேரை ஓட்டுவதில் வல்லவனும் அறிவு மிக்கவனும் அரசனுக்கு வேண்டிய வற்றை வேண்டிய நேரத்தில் ஏற்றவாறு எடுத்துச் சொல்லுவதில் வல்லவனாக விளங்குகின்ற சுமந்திரன் 'பரதன் அரசை ஏற்க வேண்டும்' என்னும் முடிவை வசிட்டரே சொல்லும்படி அவரைக் குறிப்புடன் நோக்கினான் என்கிறார் கம்பர்.

> ''சுற்றினர் இருந்துழிச் சுமந்தி ரப்பெயர்ப்
> பொற்றடத் தேர்வலான் புலமை உள்ளத்தான்
> கொற்றவற்கு உறுபொருள் குறித்த கொள்கையான்
> முற்றுணர் முனிவனை முகந்து நோக்கினான்'' (954)

என்பது அப்பாடல்

> ''நோக்கினால் சுமந்திரன் நுவலல் உற்றதை
> வாக்கினால் அன்றியே உணர்ந்த மாதவன்'' (955)

என்னும் பாடற்பகுதியில் பார்வையினாலேயே தன் எண்ணத்தை வெளியிடுவதில் வல்லவன் சுமந்திரன் என்பதையும் உணர்த்துகின்றார்.

தன்னைத் தேடி வந்த ஆட்சி உரிமையை உதறிவிட்டு, மரவுரி புனைந்து சடை முடி தாங்கி, இராமனைக் கானகத்தின்று அழைத்து வருவதற்குச் சேனையோடு புறப்பட்டான் பரதன். அவன் சேனையோடு வருவதைக் கண்டு ஐயுற்ற குகன் தன் சேனையுடன் கங்கையின் தென்கரையை அடைந்தான். குகன் அங்கிருந்ததைக் கண்ட சுமந்திரன், பரதனிடத்தில் அவனை அறிமுகப்படுத்தும் பாங்கில் கங்கைக் கரையில் ஓடம் செலுத்தி வாழும் அவன் எண்ணற்ற ஓடங்களை உடையவன் என்பதையும் இராமனுக்கு உயிர்த் துணைவனாக விளங்குபவன் என்பதையும் யானைபோலும் வலிமை வாய்ந்தவன் என்பதையும் எப்போதும் வில்லைக் கையில் கொண்டு விளங்கும் வேடன் என்பதையும் அவன் குகன் என்னும் பெயரையுடையவன் என்பதையும் கூறி, தொடர்ந்து அவனைப்

பற்றி பேசுவன யாவும் சுமந்திரன் சொன்ன குகனைக் காணுமாறு அப்பரதனைத் தூண்டி விடக் காண்கிறோம். அவனைப் பற்றிய நல்லெண்ணம் பரதனுக்குத் தோன்றிட, சுமந்திரன் சொன்ன விளக்க உரைகளும் ஒரு காரணமெனில் வியப்பன்று.

> "கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
> உங்கள்குலத் தனிநாதற்கு உயிர்த்துணைவன் உயர்தோளான்
> வெங்கரியின் ஏறுஅனையான் விற்பிடித்த வேலையினான்
> கொங்கலரும் நறுந்தண்தார்க் குகன்என்னும் குறியுடையான்" (1035)

என்பது முதலாக அமைகிறது அவ்வுரை.

'யார் நீ?' என்று வினவிய அளவில் பூதங்களுக்கெலாம் தலைவனும் பூமிக்குத் தலைவனும் பூமியிலுள்ள சீதை என்பவளுக்குக் கணவனும் ஏனைய தெய்வங்களுக்குத் தலைவனும் வேதங்களுக்குத் தலைவனும் மேலாய விதிக்குத் தலைவனுமாகிய இராம பிரான் விடுத்த தூதுவன் தான் என்பதை, இராவணன் தன் தலைவனாகிய இராம பிரானைப் பற்றிய சிறப்புக்கள் அனைத்தையும் முழுமையாக உணர்ந்து கொள்ளும் வகையில் சுக்கிரீவனுடைய அமைச்சனாக விளங்கும் சொல்லின்செல்வன் அனுமன் எடுத்துரைக்கும் அத்தகைய விளக்கத்துக்குச் சற்றும் குறைவுறா வண்ணம் குகன் பற்றிய சுமந்திரன் விளக்கம் அமைகிறது. சொலல்வல்லனும் சோர்விலனுமாகிய சுமந்திரனுடைய அவ்வுரை பரதனுடைய உள்ளக் கிழியில் அழியாச் சித்திரமாகப் பதியத் துணையாகிறது. தான் சொல்ல வந்த கருத்தை இவ்வாறு சொற்படமாகச் சித்தரிக்கவல்ல நாவன்மை படைத்தவனாக விளங்குகிறான் சுமந்திரன்.

கடமை ஆற்றம்போது அரசனுக்கு உதவுவதாகிய தன்னுடைய மனக்கருத்தில் மாற்றம் எதுவும் இல்லாதவன் என்பதை எடுத்துக்காட்டும் வகையில் கம்பர் சுமந்திரனைக் குறிப்பிடும்போது 'அவன் மனம் அனையான்' 'காதல் சுமந்திரன்' 'வேறிலா அன்பினான்' என்னும் தொடர்கள் வாயிலாகக் கூறுகிறார். இத்தகைய வேறுபாடில்லாத அன்பு அவனிடத்து காணப்படுவதை முற்றுமாக உணர்ந்து கொண்ட இராமன் பரதன் ஆகிய இருவருமே 'எந்தை' என்பதாகவும் ஆசிரியர் தாமே 'தந்தை துணை' என்பதாகவும் காட்சி அமைகிறது. இதனால் அரச குடும்பத்தாரிடத்து மாறாத அன்பினையுடையவன் சுமந்திரன் என்பது பெறப்படும்

மகோதரமனைய மகோதரனும் கோது செய்குணக் கோதினுட் கோதனைய கட்டியங்காரனும் குடிலக்குணம் கொண்டோனாகிய குடிலனும் போலன்றி, அமைச்சர் களுக்குரிய மந்திரச்சூழ்ச்சி வல்லனாய் சுமந்திரன் விளங்குகிறான் என்பது எண்ணி இன்புறத் தக்கது. அரசியலில் எண்ணிய எண்ணியாங்கு எய்த வேண்டுமேல் நல்லவர் களாக இருப்பதோடன்றி வல்லவர்களாகவும் இருத்தல் வேண்டும். நல்லவனாக விளங்கும் சுமந்திரனிடத்து அவ்வல்லமையும் சேர்ந்திருப்பதை கம்பர் தரும் இராமாயணம் வழி அறிய முடிகிறது.

'மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல்' என்பதற்கு ஏற்ப உற்றது கொண்டு மேல்வருவது உரைக்கும் நேர்மை, செய்திகளை முறையாக அறிவிக்கும் வினைத்திறம், பாகனாக தேரைச் செலுத்தும் பாங்கு, வீரனாக விரைந்து செயலாற்றும் தன்மை, அனைத்துக்கும் மேலாக அரசனுக்குக் கீழ்ப்பட்டு வஞ்சமில் மனத்தனாக, நல்லவனாக நிற்கும் அருங்குணம் உடையவன் சுமந்திரன் என்பதை இதன்வழி அறியலாம். ●

# “நடையின் நின்றுயர் நாயகன்”

*

பேரா. வெ. செல்வசுப்பிரமணியன்




“வான்நின்று இழிந்து, வரம்பு இகந்த
மா பூதத்தின் வைப்பு எங்கும்,
ஊனும் உயிரும் உணர்வும் போல,
உள்ளும் புறத்தும் உளன் என்ப
கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்ப, கோல் துறந்து
கானும் கடலும் கடந்து, இமையோர்
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்”

கற்றார் இராம பிரானை அல்
லால்மற்றும் கற்பரோ?

என்பது நம்மாழ்வாரின் திருவாக்கு. இந்த இராம கதையை

“நடையின் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநிகழ்ந்தஇ ராமாவ தாரப்பேர்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை”

என்று குறிப்பிடும் இராமாயணத்தின் தற்சிறப்புப் பாயிரம் ‘நடையின் நின்றுயர் நாயகன் என்ற அடியின் முறை சிந்திக்கத்தக்கது. உலக உண்மைகளை யெல்லாம் மனித மனிதம் உணரக் கூடியவாறு தன் மந்திரச் சொல்லால் உள்ளம் மயங்கச் செய்திடும் ஆற்றல் பெற்றவன் கம்ப நாடன். அத்தகைய கம்பன் அறத்தின் மூர்த்தியாம் இராமனை தெய்வநாயகனாக அயோத்தியா காண்டத்தில் காட்டும் பாங்கினை ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

**தெய்வ நாயகன் :**

மனித இனத்தில் இராமனை மிகச் சிறந்த பாத்திரமாக விளக்கியுள்ளார் கம்பர். ஒரு உயரிய இலட்சியத்தை நிலை நிறுத்துவதற்கு உறுதியான மனமும், திடசித்தமும் தேவை. எல்லாவிதமான குற்றங் குறைகளையும் பெருந்தன்மையுடன் ஏற்றுக் கொள்ளும் உள்ளமும் தேவை. எல்லோரிடத்திலும் அன்புடன் வாழவேண்டுமானால் எக்காரியத்தையும் சாதிக்கும் படியான திறமையும், தகுதியும் தேவை. இவைகளையெல்லாம் பெற்றவனாக இராமன் திகழ்கின்றான். வால்மீகி இராமனை ‘லோக நாயகனாக’க் கொண்டார். ஆனால் கம்பர்

''தேவர்க்கும், தானவர்க்கும், திசைமுகனே
முதலாய தேவ தேவர்
மூவர்க்கும்; முடிப்ப அரிய காரியத்தை
முற்றுவிப்பான் மூண்டு நின்றாய்''

என்றும்,

''மூலமும் நடுவும் ஈறும் இல்லாது ஓர் மும்மைத்து ஆய
காலமும், கணக்கும், நீத்த காரணம் - கை வில் ஏந்தி
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து. தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு, அயோத்தி வந்தான்''

என்றும் பலவாறு குறிப்பிடுகிறார். அறத்தின் மூர்த்தியாக வந்து அவதரித்த இராமனைப் பற்பல இடங்களில் தெய்வ நாயகனாகச் சிறப்பித்துள்ளார். மனிதப் பிறவியாக வந்து அவதரித்த இராமன், தமிழனுடைய தனிப்பண்பாட்டிற்கேற்ப ஒருவன், ஒருத்தி என்ற நியதிப்படி இல்லற வாழ்க்கையில் ஈடுபடுகிறான். 'கற்பு' எனப்படுவது இருபாலருக்கும் பொதுமைத்தாகும். இராமன் இதைத் தன் வாழ்க்கையில் நிலை நிறுத்திக் காட்டுகிறான். உலகமக்கள் எவ்வாறு ஒழுக வேண்டும் என்பதைத் தம் வாழ்வில் வாழ்ந்து காட்டுகிறான். இதைக் கம்பர் 'நடையின் நின்றுயர் நாயகன்' என இராமனைச் சிறப்பித்துக் கூறுவதால் அறியலாம். ஏகபத்தினி விரதனாக வாழ்ந்த இராமன் தன் அறிவு, ஆற்றல், ஆண்மை, அழகு, வீரம் முதலிய அனைத்தையும் உயரிய இலட்சியங்களுக்காகவே பயன்படுத்தி வாழ்கிறான்.

### வியப்பூட்டும் பெருங்குணம் :

அயோத்தி நகர மக்கள் இராமனுக்கு முடிசூட்டு விழா நடக்கும் நன்னாளை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தயரதன் இராமனை நோக்கி நீ அரசு புரிய வேண்டும் என்று கூறிய போது இராமன் அதை ஏற்றுக் கொள்கிறான்.

''யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ,
நீதி எதற்கு?' என நினைந்தும், அப்பணி தலை நின்றான்''

அதே சமயம் கைகேயி இராமனைப் பார்த்து நீ பதினான்கு ஆண்டுகள் காடாளவும், பரதன் நாடாளவும் கட்டளையிடுகின்றாள். இராமன் இன்பத்திலும் துன்பத்திலும் ஒரே நிலையில் இருந்தான் அத்தகைய இராமனின் நிலையைக் கம்பர்,

''இப்பொழுது, எம்மனோரால் இயம்புதற்கு எளிதே? யாரும்
செப்ப அருங் குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கின்,
ஒப்பதே முன்பு பின்பு; அவ்வாசகம் உணரக் கேட்ட
அப்பொழுது, அலர்ந்த செந்தா மரையினை வென்றது அம்மா''

இதில் கம்பர் முன்பும், பின்பும் இராமன் செந்தாமரையின் ஒத்து மலர்ந்து காணப்பட்டான் என்று கூறுகிறார். அடுத்த கவியில் முன்பிருந்ததை விடப் பின்பு மகிழ்ந்து காணப்பட்டான் என்னும் கருத்துத் தோன்ற

''உருளுடைச் சகடம் பூண்ட, உடையவன் உய்த்த கார்ஏறு
அருளுடை ஒருவன் நீக்க, அப் பிணி அவிழ்ந்தது ஒத்தான்''

என்று பாடியுள்ளார். இராமனின் உயரிய பண்பைக் கம்பர், தன் சிற்றன்னைக்கு இராமன் இறுத்த பதிலில் அற்புதமாகக் காட்டுகிறார். அப்பாட்டால் இராமன் பரதன் மேல் கொண்ட பேரன்பினையும் கைகேயியின் பால் கொண்ட பெருமதிப்பையும் நாம் நன்கு உணர முடிகின்றது.

''மன்னவன் பணிஅன் றாகில் நும்பணி மறுப்பேனோ? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ?
என்இனி உறுதி அப்பால்; இப்பணி தலைமேல் கொண்டேன்
மின்ஒளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்''

என்று கூறுகிறான்.

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'' என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாய்

திகழ்ந்தான் இராமன்.

## பிறர் நலம் பேணும் தன்மை :

இராமன் பிறர் பொருட்டுத் தான் எவ்வளவு துன்பத்தையும் தாங்கத் தயங்கான். ஆனால், தன் பொருட்டுப் பிறர் ஒரு சிறு துன்பத்தை அடைவதைக் கூடச் சகியான். தன் பிரிவால் தசரதன் உற்ற துயரைத் தவிர்க்க முடியாதது மட்டுமே இதற்குக் காரணம். தனது தாய் கோசலை காடு வந்து இடருறுவதைத் தடுக்கிறான். தனது மனைவியாகிய சீதையும், தம்பி இலக்குவனும் காட்டுக்கு வந்து அல்லற் படுவதையும் அவன் விரும்ப வில்லை. வரவேண்டாம் என அவர்களை எவ்வளவோ கூறியும் தடுக்க முடியவில்லை. நகர மக்கள் தன்னோடு சாடு சென்று தன் பொருட்டுக் கஷ்டப்படுவதையும் இராமன் விரும்பவில்லை. அவர்களை நகருக்குத் திரும்பிச் செல்லும்படிச் செய்துவிட்டான். சீதையும் இலக்குவனும் தன் பொருட்டு அரச போகங்களை இழந்து அல்லற் படுவதைக் காணச் சகியாது கலங்கிய சமயங்கள் பல. சீதையின் மெல்லிய பாதங்கள் கல்லிடை நடந்தன. இலக்குவனது மேன்மையான கைகள் அழகான குடிலை அமைந்துள்ளன'' என்று கருதினான். துக்கத்தோடு இலக்குவனை நோக்கி இத்தொழிலை நீ என்று கற்றாய் என்று கேட்டுக் கண்ணீர் சொரிகின்றான்.

''என்று சிந்தித்து, இளையவற் பார்த்து இரு
குன்று போலக் குலவிய தோளினாய்!
என்று கற்றனை நீ இது போல்? என்னா
துன்று தாமரைக் கண் பனி சோர்கின்றான்''

''அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தம்நோய்போல் போற்றாக் கடை?''

என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாய்த் திகழ்ந்தான் இராமன்.

## நீயே நான்! நானே நீ!

சிருங்கி பேரத்திற்குச் சென்ற இராமனைக் கண்ட குகன் மிகவும் மகிழ்ச்சியடை கிறான். 'தேவரீர் திருவமுது செய்தற்குச் சிறந்தனவாய்த் தெரிந்தெடுத்துத் தேனும்

மீனும் கொண்டு வந்திருக்கிறேன். திருவுள்ளம் யாதோ? எனக் கேட்க இராமபிரான் அப்பா! அப்பொருள்கள் உனக்கு என்பாலுள்ள அன்பு மிகுதியை வெளிப்படுத்துகின்றன. அவை தேவாமிர்தத்தினும் சிறந்தது. என் போலியர்க்கு அன்பால் அளிப்பன யாவையும் தூயவையே. அவைகளை அங்கீகரித்து அருந்தினேன் என்று நினைத்துக் கொள் எனக் கூறுகிறான். இராமபிரான் குகனிடம் படகுகளைக் கொண்டு வரச் சொன்னான். சீதா இலக்குமணருடன் குகன் படகைச் செலுத்த படகு கங்கைக் கரையை அடைந்தது. இராமபிரான் குகனிடம் சித்திர கூடத்திற்குச் செல்லும் வழியைக் கூறுவாயாக எனக் கேட்டான். குகன் இராமனை வணங்கித் தங்கள் திருவடிகளைப் பிரியேன் என்றான். இராமன் விடையளிப்பானாகி 'நீ என் உயிர் போல்வாய்; என் தம்பி உன் தம்பி; இந் நங்கை உன் கொழுந்தி; என் ஆள்கைக் குரிய பெரிய கடல் சூழ்ந்த நில உலகம் முழுவதும் உன்னுடையது. யான் உன்னால் நியமிக்கப்பட்ட தொழில் செய்யும் கடப்பாடுடையேன்' என்றான்.

"துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது? அது அன்றிப்
பின்பு உளது; "இடை, மன்னும் பிரிவு உளது" என, உன்னேல்;
முன்பு உளெம், ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னா
அன்பு உள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்;"

துன்பம் உண்டான தொன்றல்லவா, சுகம் உண்டாம், என்று நினைப்பதல்லாமல், இப்போது பிரிதலால் துன்பமே உண்டாகிறது. இன்பமோ பின்பு திரும்பக் கூடுங் காலத்திலே தானே உளதாம் என்று நினைத்து இப்போதைய பிரிதலுக்கும், நெடுங் காலத்துக்குப் பிந்திய கூடுதலுக்கும் மத்தியில் மிகவும் நீடித்த பிரிவுள்ளதென்று நினை யாதே; உன்னைச் சேரும் முன்பு, நால்வராயிருந்தோம். இப்போது முடிவுள்ளதென்று நினைக்க வொண்ணாத அன்புடையேமாய்ச் சகோதரர்களாக நாம் ஐவராகி விட்டோம். எனக்குத் துணையாக வருவதற்கு உன் தம்பி இலக்குமணன் இருக்கின்றான். அவனிருக்கும் போது யான் துன்புறும்படியான பகையாதும் இன்னோம். 'நீயே, நான்; நானே நீ! என் சொற்கடவாமல் ஊருக்குப் போவாயாக' என்று இராமன் குகனைத் தேற்றிப் பின்னும் கூறுவான். அயோத்தியிலுள்ள நம்முடைய சுற்றத்தாரைக் காத்தற்கு உன் தம்பி பரதன் பொருத்தமாயிருக்கிறான். இங்கேயுள்ள நம்முடைய சுற்றத்தாரைக் காத்தற்கு உன்னை யன்றி யாரே உள்ளார்? சொல்லாய்! உன் சுற்றத்தார் என் சுற்றத்தாரல்லவா? மிக்க துன்பமுறலாமோ? இங்கேயுள்ளாராய என் சுற்றத்தாரை என் ஆணையின்படி இனிது காப்பாயாக' என்றான் இராமன்.

குகனை இராமனுக்குத் தம்பி ஆக்கியது திருமங்கை மன்னன். குகன் ஏழை ஏதலன், குலத்தால் கீழ்மகன். இவை கண்டும் சக்கரவர்த்தித் திருமகன் அவனுக்கு இரங்கி அருள் சுரந்தார். இரக்கம் தன் உயர்வையும், அவன் தாழ்வையும் குறிக்கும். அதனால், உடனே 'தோழமை' என்ற சமத்துவம் உதிக்கிறது.

"ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி, மற்று இன் அருள் சுரந்து
மாழை மான்மட நோக்கி உன் தோழி
உம்பி எம்பி என்று ஒழிந்திலை உகந்து
தோழன் நீ எனக்கு, இங்கு ஒழி என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட

ஆழி வண்ண, நின் அடி—இணை அடைந்தேன்
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே''

என்று பாடுகிறார் திருமங்கையாழ்வார்.

''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்''

என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாய்த் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த வேடன் குகனை இராமன் சகோதரனாக ஏற்ற பாங்கு எண்ணி மகிழத் தக்கது.

## உன் அன்பு எங்கே! என் அன்பு எங்கே!

இராமனைக் கண்ட பரதன் இறந்த தந்தையை எதிர்கொண்டாற்போல அவனைக் கண்டு வணங்கினான். உன் பிரிவென்னும் துயரத்தாலும், என்னைப் பெற்ற கொடியாள் கேட்ட வரத்தாலும் உயிரை நீத்து உண்மையைக் காத்து உம்பருலகுற்றான் நம் தந்தை தசரதன் என்றான். அதைக் கேட்ட இராமனின் நிலையை அழகாகச் சித்தரிக்கிறார் கம்பர். ''வாடா விளக்குப் போலக் குன்றாப் புகழுடையாய்! சகத்திலுள் ளோர்க்குத் தந்தையே! தருமத்துக்குத் தாயே! சத்ருக்களுக்குத் தந்தயே! இறந்தாயே! இனி உண்மைக்கு யாரிருக்கிறார்கள். கலைக் கோட்டு முனியின் கருணையைப் பெற்று, யாகஞ் செய்து என்னைப் பெற்றதனால் நீ பெற்றபேறு, இனிய உயிரை இழத்தலோ! ''முதுமையால் இளைத்தேன், இனிப் பூபாரந் தாங்க கில்லேன், நீ ஏற்றுக் கொள்'' என்ற உன் ஆணைப்படி யான் உலகாள ஒப்புக் கொண்டேன். ஒப்புக் கொள்ளாதிருந்தேனேல், நீ ஆண்டு கொண்டிருப்பாய். ஒப்புக் கொண்டு உன் உயிர்க்குக் கூற்றுவன் நானே ஆனேன். நான் பூ பாரம் தாங்கி, நீ அப்பாரம் நீங்கி இளைப்பாறியவாறு இதுவோ! யான் அரசு செய்ய நீ ''தவசு செய்வே'' னென்றது இந்த முடிவுக்கோ! அந்தோ! உலகை ஆள்வேனென்று உலகுக்குத் துன்பம் தந்தேன். இங்கே சாவேனேயன்றி அங்கே வாரேன்! வருவது ஆர் முகத்தே விழிக்க!

''நான் நாட்டை விட்டுக் காட்டை அடைந்தேனென்று சொல்லக் கேட்டு அதைச் சகிக்க மாட்டாமல், நீ இறந்தாய்! நானோ நீ செத்தாயென்று தெரிந்தும் சாவாமல் உயிரோடு இருக்கிறேன். உன் அன்பு எங்கே! என் அன்பு எங்கே! இரவலர்க்கு ஈதலும், மானத்தை ஓம்பலும், போரிற் சலியாமையும், சத்தியம் தவறாமையும் முதலிய சிறந்த செயல்களெல்லாம் உன்னோடு தோன்றி உன்னுடனிருந்து இப்போது இல்லாமையால் அவைகளையெல்லாம் உன்னுடன் கொண்டு போய்விட்டாயோ! என்று பின்னும் பலவாறு இயம்பிப் புலம்பியிருந்து வருந்தும் நிலையில் இருந்தான் இராமன்.

## வாக்குத் தவறாத பண்பாளன் :

இராமனை அரசாளும்படிக் கூறிய பரதனைப் பார்த்து இராமன் உன் தாயும் தந்தையும் ஒன்று சேர்ந்து உனக்கு உதவிய இராச்சியம் உன்னுடையதே. ஆதலால், அதனை நீ ஆள்வாயாக! என்றான். பரதன் நீ தலைமகனாதலால் நீயே அரசு புரிய வேண்டும் எனக் கூறினான். அயோத்திக்கு உடனே வரவேண்டும் என வேண்டினான் பரதன். இராமன் அரசன் ஆணைப்படி யான் காட்டில் பதினான்கு வருடங்களும் கழிக்கும் நாள்கள் இன்னும் வரவில்லை. நாட்டிற்கு வருவதெங்ஙனம்? எனவே நான் வனவாசம்

செய்யும் காலத்தில் என் ஆணையை மறுக்காமல் நீ நாட்டை அரசாள்வாயாக! எனக் கூறினான். வசிட்டமா முனிவரும் இராமனை அரசாட்சிப் பொறுப்பை ஏற்கும் படிக் கூறினார். இராமபிரான் வசிட்டரை நோக்கி பிரம்மபுத்திர! ஒருவன் ஒரு காரியத்தைச் செய்வேனென்று வாக்குக் கொடுத்து அதனைச் செய்தற்கு ஒப்புக் கொண்டதாக உரைத்த பின்பு, அந்த உரையை மாற்றும்படி சொல்வோர், அன்பு காரணமாக மறுக்க முடியாத தனது பிள்ளைகள் ஆயினும் ஆக; அப்பெரியாருள்ளும் தலை சிறந்த தன் குருவே ஆயினும் ஆக, கீழ்ப்படியும் கட்டுப்பாடு காரணமாக் மறுக்கக் கூடாத பெரியோர் ஆயினும் ஆக, அந்த உரை மறுக்கத்தக்கதோ? என இராமன் தன் குருவாகிய வசிட்டனிடம் கூறினான். இத்தகைய வாய்மை என்ற பண்பைப் பெற்ற இராமன் எத்தகைய நிலையிலும், மாறாமல் தம் தந்தை தாய்க்குக் கட்டுபட்டு ஒழுகும் பண்பாளன் என்பதைக் கம்பர் தம் காவியத்தில் சிறப்பாகக் கையாள்கிறார்.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்ற முதுமொழிக்கிணங்க இராமன் தாய் தந்தையர் சொற்படி நடக்கும் பண்பாளன். தன்னலம் கருதாது பிறர் பொருட்டு வாழும் உத்தமன். வாய்மையைக் கடைபிடிக்கும் சீலன். 'ஒன்றே குலம்' என்ற நெறியைப் பின்பற்றியவன். அன்பின் சிகரமாக விளங்கியவன். தாம் கொண்ட கொள்கையில் தளராது மேற்கொண்ட திருமகன். அவன் 'நடையின் நின்றுயர் நாயகன்' என்பது அயோத்தியா காண்டத்தில் எவ்வளவு சிறப்பாகக் கையாளப்பட்டிருக்கிறது.

"எத்திக்கும் போற்றும் இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து—நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்த வைத்த
கம்பன் கவியே கவி"



## ஆசான் கம்பன்

தானும் தெளிந்து. கற்றாரையும் தெளிவிக்க வல்லனே ஆசான். இந்தக் கணிப்பில் நம் ஆசான் கம்பன் முற்றிலும் பொருந்தி வருவான், அவன் படைத்த இராமாயணம் காலத்தை வென்று இன்றும் நிற்கிறது. அப்படியானால் அதன் நோக்கத்தில் படைக்கப் பெற்ற குறிக்கோளில் வெற்றி பெற்றிருக்கிறதென்றால், அது அழகாகவும் அற்புதமாகவும் ஆக்கப்பட்டிருக்க வேண்டும். அப்படி அழகு மிளிரவும் அற்புதம் தோன்றுமாறும் அமைந் துள்ளது. ஆக்கியோனின் மிகத் திறமையான அநுபவப் பரிமாற்றத்தினால் தான் சாத்திய மாகும். அப்படி அதி திறமையான அநுபவப் பரிமாற்றம் சாதிக்க வேண்டுமானால் ஆக்கியோனின் அனுபவம் மிக விழுமியதாயும், பரந்து பட்டதாயும், அதே சமயத்தில் ஆழமுடையதாயும் இருந்திருக்க வேண்டும். அந்த அதிமதுரமான அநுபவங்களை அப்படியே சாறாகப் பிழிந்து வடித்துத் தந்ததால்தான் கம்பன் 'கவிச்சக்கரவர்த்தி' ஆக இன்றும் நின்று தமிழ் மக்கள் உள்ளங்களில் கோலோச்சி வருகிறான். இப்போது சொல்லுங்கள்! ஆசிரியனாய் இருப்பதற்குரிய கம்பனின் தகுதியின் மாண்பை!

—கம்பன் அடிப்பொடி

# கைகேயி

✵

முனைவர். மா. நடராசன்

கம்பனுடைய இராமாயணம் ஒரு நோக்கத்தோடு படைக்கப்பட்டது. ஒவ்வொரு நோக்கத்தோடும் குறிக்கோளோடும் வாழ்க்கை முறையோடும் படைக்கப்பட்ட பாத்திரங்கள் பல. எல்லாப் பாத்திரங்களும் அததற்குரிய பலத்தோடும் பலவீனங்களோடும் படைக்கப் பட்டுள்ளன. கம்பன் படைக்கும் போது அந்தந்தப் பாத்திரத்தின் இயல்புக்கும், வாழ்க்கை முறைக்கும் ஏற்பச் சிறிதும் சறுக்கல் இல்லாமல் உளவியல் ரீதியாக அணுகிப் படைத் துள்ளான். ஒவ்வொரு சூழ்நிலைக்கு, காண்டத்துக்கும் முதன்மையும் அடிப்படையுமான பாத்திரம் எதுவோ அப்பாத்திரத்தை அங்கு அழுத்தமானதாகவும் அர்த்தமானதாகவும் படைத்துள்ளான். எல்லாப் படைப்பும் இராமாவதாரத்தைச் சிறப்புச் செய்யவே பயன் படுகின்றன. அயோத்தியாக் காண்டம் கைகேயியின் செயல்பாடுகளை அடிப்படையாகக் கொண்டது. அடிப்படையைப் பலமானதாகப் படைத்துக் காவியத்தை வளர்த்துக் கொண்டு செல்கிறார் கம்பர்.

காப்பிய நோக்கத்திற்கு கைகேயியின் செயல்தான் உயிரானது; உயிர்ப்பானது. ஆனால் அந்தப் பாத்திரத்தின் மீது மேம்போக்காகப் படித்தால் கைகேயியின் மீது எதிர்ப் புணர்வும் வெறுப்பும் தோன்றும். ஆனால் கம்பனுடைய நோக்கம் அதுவல்ல என்பதை ஆழ்ந்து படிக்கும் போதும் கம்பன் ஆழ்மனதைப் புரிந்து கொண்டு கைகேயியின் மன நிலையோடு ஒன்றிப் போகும் போதும் உணர வேண்டும். உணர முடியும். அந்த வாசக நேசிப்புடன் இக்கட்டுரை அமைக்கப்படுகிறது.

கடவுள் வாழ்த்திலேயே கம்பர் கைகேயியை அறிமுகப்படுத்துகிறார். அறிமுகத்தின்போது மந்திரையை முதலில் கூறி, சிறிய கோத்தாய் என்று கைகேயி யையும் கூறி நம்கண்முன் அவளைக் கொடுமை இழைத்தவளாகக் கூறியுள்ளார். ஒரு கொடுமை, இமையவர் இடுக்கண் தீர்க்கக் காரணமாய் இருந்தது. ஆகவே கைகேயியின் அயோத்தியாக் காண்டத்துச் செய்கை தேவர்களுக்கு நன்மைத் தருகிறது என்ற 'த்வொனி' பொருளில் கம்பர் அப்பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

> ''கூனுஞ் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல்துறந்து
> கானும் கடலும் கடந்து இமையோர்; இடுக்கண் தீர்த்த கழல் வேந்தே''

என்று கடவுள் வாழ்த்தில் சொல்கிறார்.

தயரதன் தனக்கு வயதாகிவிட்டதை உணர்ந்து கொண்டு அரசாட்சியைத் தலை மகனுக்கு வழங்கிவிட்டு, துறவு மேற்கொள்ள முடியும் என்ற தன்னம்பிக்கையைத்

தனக்குத்தானே உணர்ந்து கொள்ளும் சூழ்நிலையில் தயரதனுடைய மனம் தள்ளப் படுகிறது. அப்போது தயரதன்,

> ‘‘பஞ்சிமென் தளிரடிப் பாவை கோல்கொள
> வெஞ்சினத்து அவுணர்தேர் பத்தும் வென்றுளேனுக்கு’’

என்று மந்திரிமார்களிடம் சொல்கிறான். பத்துத் திசைகளிலிருந்தும் வந்த அவுணர்களின் தேர் பத்தை அழித்தவன் நான். அவ்வளவு வல்லமையுடையவனும் நன்மையின் பக்கம் சார்ந்து நிற்பவனுமாகிய நான் வெற்றி பெறக் கைகேயியானவள் சாட்டை கொண்டு சாரத்தியஞ் செய்தாள் என்று சொல்கிறான்.

கைகேயியின் பணியும் ஒத்துழைப்பும் அன்பும் இருக்கும்போதுதான் அவுணர்களை வெல்ல முடிந்தது. இல்லையெனில் முடியாது என்பது த்வொனிக்கக் கூடிய கூற்று. இராமாயணயத்தின் வளர்ச்சிக்கும் தொடர்ச்சிக்கும் சிக்கலுக்கும் சிக்கல் அவிழ்ப்புக்கும் தேவை என்பதால் இந்த இடத்தில் தேவையில்லை எனினும் தயரதன்சொல்ல நேர்ந்தது.

காப்பியத்தின், இராம அவதாரத்தின் நோக்கத்திற்குக் கைகேயிதான் அடிப்படை என உணர்த்துவதற்கும் அவளே காரண காரியம் என்று சொல்லத் தயரதனுடைய இந்தக் கூற்று மிக அவசியமாகின்றது.

தயரதன் பட்டாபிஷேகம் செய்து வைக்க நல்ல நாள் பார்த்துச் சொல்லுமாறு கேட்கச் சோதிடர்களிடம் சென்றான். இந்தச் செய்தியை நான்கு பெண்கள் கோசலை யிடம் சொன்னார்கள். அதைக்கேட்ட கோசலை சுமத்திரையோடு ஸ்ரீமன்நாராயண மூர்த்தி கோயிலுக்குச் சென்றாள். அதுவும் ‘துன்னு காதல் சுமத்திரையோடு சென்றாள்’ என்று கம்பர் சொல்கிறார். அப்படியெனில் கைகேயி என்ன ஆனாள் என்ற வினா எழுதல் இயல்பே. அதற்கு நாம் சிந்தித்துப் பார்த்தால் பின்னால் நடந்த நிகழ்ச்சிகளை எண்ணி இந்த நிகழ்ச்சியோடு இயைபுபடுத்திப் பார்க்க வேண்டும். கைகேயி அப்போதே வேறாயி ருந்தனள் என்பது குறிப்பால் உணர்த்தப்படுகிறது (ஸௌமித்திரை - ஸௌமித்திரா: நல்ல மித்திரர்களை உடையவள் என்று அர்த்தம்).

மக்கள் அடுத்த நாள் நடக்கும் இராமனின் பட்டாபிஷேகத்லத அறிந்து ஆரவார மகிழ்ச்சியோடு நகரை அலங்கரித்தனர். அந்த நேரத்தில் இராவணன் இழைத்த தீமையின் ஒட்டுமொத்த உருவம் போலக் கொடுமனக் கூனி அதைப்பார்க்க வெளியே வந்தாள்.

இதுவரை கைகேயி இராமனின் தாயாகவே காணப்படுகிறாள். ஏன் இதற்குப் பிறகும் கூனி கைகேயியைத் தன்வசப்படுத்தும் வகையிலும் தூய அன்புடையவளாகவே பூரணமான தாய்மையுடையவளாகவே படைக்கப் பட்டுள்ளாள். தன் இயல்பிலிருந்து, முற்றிலும் மாறுபட்ட கைகேயி கூனி வசப்படுகிறாள்.

மண் — காரணம்
பானை — காரியம்
அடுப்பில் வைக்கப்படல் — பலன்
அடுப்பு எரிதல் — நீர்கொதித்தல்
அரிசி வேதல் — சோறாகப் பயன்படமாறுதல்

கூனி — காரணம்
கைகேயி — காரியம்
இராமன் காடு ஏகுதல் — பலன்
இருவரம் கேட்டல் — அடுப்பு எரிதல்
இராவணவதம் — பக்குவப்படுத்தப்படுதல்

என்ற அடிப்படையில் கைகேயியின் செயல்பாடுகள் புரிந்து கொள்ளப்படவேண்டும்.

மேற்படி பார்வையினால் கூனி கைகேயியாகவும் கைகேயி கூனியாகவும் 'வசப் படல்' நடக்கிறது. அதைத்தான் 'தோன்றல்' எனக் கம்பன், 'தோன்றிய கூனி' என்று மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் 40ஆவது பாடலைத் தொடங்குகிறார். அந்தப் பாடலில்,

"............ துடிக்கும் நெஞ்சினாள்
ஊன்றிய வெகுளியாள் உளைக்கும் உள்ளத்தாள்
கான்றெரி நயனத்தாள் கதிக்கும் சொல்லினாள்
மூன்று லகினுக்குமோர் இடுக்கண் மூட்டுவாள்"

என்ற அடையாளங்கள் கூனிக்குச் சொல்லப்படுகின்றன. இந்த அடையாளங்களுக்குள் கைகேயி வசப்படப் போகிறாளல்லவா?

அதாவது தூய உள்ளம் உடைய 'கண் அளிபொழிகின்ற' கைகேயி (மந்-சூழ் படலம் : 42ஆவது பாடல்) எவ்வாறு கூனிவசப்படுகிறாள் என்பதுதான், பாத்திரத்தின் உள்நிகழ் முரண் வளர்ச்சியை உணர்த்துவது ஆகும்.

பஞ்சணையில் உறங்கிக் கொண்டிருந்த கைகேயியை இராகு அணுகி விழுங்க உள்ள மதியைப் போல உறங்குகின்றாய் என்று சொல்கிறாள். உன் மகன் பரதனுக்கு வரவேண்டிய பட்டாபிஷேகம் என்ற நிலாவை விழுங்கும் இராமன் என்ற இராகு என்று அர்த்தப்படுத்திப் பேசுவதாகவே கம்பர் பாடியதாகச் சிலர் சொல்வர். மேம்போக்காகப் பார்த்தால் அப்படித்தான் தெரியும். ஆனால் மந்தரை மேல் கம்பருக்கும் கோபமும் வருத்தமும் இருப்பதால், 'இராகு ஆகிய (நான்) மந்தரை பஞ்சணையில் படுத்துறங்கும் மதியாகிய கைகேயியை விழுங்க வருவதாகவும் அர்த்தம்படச் சொல்லியிருப்பார்' என்றும் கருதப்பட வேண்டும். அப்படியென்றால் கூனி வசப்படல் என்பது இங்கு மேலும் வலுப் பெறுகிறது. கூனிதான் இராகு; நிலவு போன்றவள் கைகேயி.

விடத்தைப் போன்ற மந்தரை என்று உடனே அடுத்த பாடலைக் கம்பர் தொடங்குவதால் கம்பர் மனத்தில் மேற்படி கருத்துதான் வலுப்பெற்றிருந்தது என்பதும் உறுதியாகின்றது. அதே பாடலில் கைகேயி 'தெவ் அடு சிலைக் கைஎன் பிள்ளைகள் செவ்வியர் அதனால் எனக்கு நீ சொல்வது போல என்ன துன்பம் நேரவுள்ளது?' என்று கைகேயி மந்தரையிடம் மிகவும் யதார்த்தமாகக் கேட்கிறாள். அதற்கு மேலேயும் சென்று,

"........... ...... புவிக்கெலாம் வேத மேஎன
இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ என்றாள்"

என கைகேயி கூறுகிறாள். அதனால் கைகேயி இராமனைக் கோசலை மகன் என்று உணர்வதைவிடத் தன் மகன் என்றும், வேதமாகவே விளங்குகின்றான் என்றும் உணர்

கிறாள் என்று இங்கு புரிந்து கொள்ளலாம். அதனால்தான் எனக்கு எந்த இடரும் உண்டாக வாய்ப்பில்லை என்று சொல்கிறாள்.

அதை மறுக்க முற்பட்ட மந்தரை, 'இராமன் அரசாட்சி ஏற்க உள்ளான். உன்னுடைய நலமும், செல்வமும் கீழ்நிலை அடையும்; கோசலை வாழ்க்கை பெறுவாள். அவளுடைய சமயோஜித அறிவுதான் அதற்குக் காரணம் ஆகிறது' என்று சொன்னாள். கோசலைக்குக் கணவன் சக்கரவர்த்தி தயரதன்; மகன் பரதன்; இதற்கு மேல் இராமன் ஆட்சி ஏற்பது என்பது பெரிய வாழ்வா?'' என்று வினவுகிறாள்.

கொடுமனக் கூனி ''இராமன் பெண்களுக்குக் கொடுமை செய்பவன். அவன் தன் தாயல்லாத உனக்குக் கொடுமை செய்யமாட்டானா?'' என்று வினவுகின்ற த்வொனியில்,

''தாடகை எனும் பெயர்த் தையலாள் படக்
கோடிய வரிசிலை இராமன்.........''

நாளைக்கு முடிசூடினானெனில் இது கோசலைக்கு வாழ்வும் உனக்கு வீழ்வும்தானே என்று விஷவிதை விதைத்துத் 'தன்வசம்' செய்ய முயல்கிறாள்.

ஆனால் கைகேயி மந்தரையின் விஷக் கருத்துக்கு ஒருப்படாதவளாய் இராம னுடைய பட்டாபிஷேகத்தில் மகிழ்ந்து மந்தரைக்கு மணிமாலை தருகிறாள்.

கைகேயியின் மனமும், கோசலையின் அறிவும் ஒத்திருந்தன. அதனால் கோசலையின் மனநிலையிலிருந்து கைகேயி வேறுபாடு அடைய முடியவில்லை. தசரதன் எப்பொழுதும் கைகேயியின் மனதில் இருப்பதால், அவன் மனமே அவள் மனமாவதன்றி வேறு தோன்றாது என்பதனாலும் கைகேயி, தசரதன் போல இராமனுடைய பட்டாபி ஷேகத்தை ஏற்றாள் என்பது கம்பர் கருத்தாகும். அதனால் தூயவள் என்று மந்தரை சூழ்ச்சிப் படலம் 52 ஆவது பாடலில் கைகேயியைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

கைகேயி கொடுத்த பரிசை மந்தரை பூமி குழியாகும்படி வீசினாள். கோபத்தோடு கைகேயியைப் பார்த்து. ''நீ அறிவுகெட்டவள். நீ வேறு கோசலை வேறு என்று பேத புத்தி இல்லாதவள். அதனால் நீயும் உன் மகன் பரதனும் பெருந்துன்பம் அடைவீர்கள். நான் கோசலையின் தாதிகளுக்கு அடிமை செய்யப் பொறுக்கமாட்டேன். இராமன் சீதை யோடு சிம்மாசனத்திருக்கப் பரதன், தரையிலிருக்கலாமா? அதற்குப் பதிலாகப் பரதனும் சத்துருக்கனனும் தவஞ்செய்யச் சென்றுவிடலாம் அல்லது இறந்து படலாம் என்று கூறித் தசரதன் பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பியதன் நோக்கமே அவனை ஏமாற்று தலுக்குத்தான்'' என்று கூறியும் கைகேயி மனத்தை மாற்ற முடியவில்லை. 'தன்வசப் படுத்தல்' இயலவில்லை. மாறாக மந்தரையைச் சினந்து கொள்கிறாள். அரசகுலத்தின் முறைமையை எடுத்துச் சொல்லி மூத்தவன்தான் ஆட்சிக் கட்டில் ஏறும் முறைமையைத் தெளிவாகச் சொல்கிறாள். அதைக் கம்பர்,

''மயில் முறைக் குலத்து உரிமையை மனுமுதன் மரபைச்
செயிர்உறப் புலைச்சிந் தையால் என் சொனாய் தீயோய்''

என்று தீயவளாக மந்தரையைக் கைகேயி விளிக்கிறாள். மேலும் கைகேயியின் தூய சிந்தனையைக் கம்பர் காட்டக் கைகேயி மந்தரையை நோக்கி, வரன்முறை திறம்புதல்

வழக்கோ (நியாயமே?) என்று கேட்டு மரபின் முறைப்படி இராமனே பட்டாபிஷேகத்திற்கு உரியவன் என்று தீர்மானமாகச் சொல்வதாகப் படைக்கிறார்.

அதனால் கைகேயி புகழ்மீதும், பரம்பரை மரபுமீதும் ஆழ்ந்த பற்றும் பிடிப்பும் உடையவளாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

மந்தரை கைகேயியிடம் நீ கோபப்பட்டாலும், என்னை ஒழிக என்று வெறுத்தாலும் உனக்கு நல்லது சொல்வதிலிருந்து விலகமாட்டேன் என்று கூறிக் காலில் விழுந்து அழுகிறாள். ஏதேதோ சொல்கிறாள். அதற்கெல்லாம் கைகேயி வசப்படவில்லை. இறுதியில் கைகேயியின் பிறந்த வீட்டார்க்கும் சுற்றத்தார்க்கும் இராமன் பட்டாபிஷேகத் தால் கேடு விளையும் எனச் சொன்னாள். இதுவரை தூயசிந்தையோடு இருந்த கைகேயி மனம் திரிந்தது. கம்பர் இங்கே நேராகவே வந்து தூயசிந்தை திரிதலுக்கு அதாவது, மந்தரை கைகேயியைத் தன்வசப்படுத்துதலுக்குக் காரணம் இரண்டு என்று சொல்கிறார், அவை ஒன்று — முந்தியே அரக்கரைக் கொல்லுமாறு இமையோர் திருமாலினிடத்து வரம் பெற்றிருத்தல். இரண்டு — அரக்கரால் அலைப்புண்ட அந்தணர்களின் தவம் பலிக்கின்ற காலம் கனிந்துவிட்டது. எனவே கைகேயியாகிய தூய சிந்தனையாள் திரிந்த சூழ்ச்சியினால் நன்மையே நடக்கப் போகிறது என்பது கம்பர் கருத்து. ஆகவே யாருக்கும் அனுதாபமே பிறக்கும்படி படைக்கப்பட்டுள்ள பாத்திரம் கைகேயி என்பதில் கம்பர் வெற்றி பெற்று விடுகிறார்.

சிந்தை சொல் செயல் மூன்று நிலைகளிலுமே கைகேயி நன்மையே செய்கின்றனள் என்பதைக் கம்பன் 'தூயசிந்தை', தூமொழி மடமான்' என்று கைகேயியிக்குக் கொடுக்கும் அடைமொழிகளால் (மந்-சூழ்-படலம்: பாடல்கள் 77, 78) உணர வேண்டும். செயலால் நன்மையே செய்கிறாள் கைகேயி என்பதை 79 ஆம் பாடலில்,

"நீண்முடி பெறும்படி புகலுதி என்றாள் கேகயன் அன்னம்"

என்ற வரிகளால் மந்தரை சொல்படி செயல் செய்வதாகக் கூறுகிறாள் (செயல்—பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தல்).

கைகேயி மனம் திரிந்ததும் மந்தரை அவளை என்தோழி வல்லள்; என் துணை வல்லள் என்று கூறிப் பாதங்களை வணங்கினாள். இங்கு கைகேயியின் தனித்தன்மை அது அல்ல; என்வசம் வந்ததால் என்துணை வல்லவளாகிவிட்டாள் என்று மந்தரை சொல்லாமல் செல்வதைக் கம்பர் வரிகள் மூலம் புரிந்து கொள்ள வேண்டும்.

சம்பராசுர யுத்தத்தின் போது சாரத்தியம் செய்ததற்காகக் கைகேயிக்குத் தயரதன் கொடுத்த இரண்டு வரங்களைச் சொல்லி நினைவு படுத்திக் கைகேயி இப்போது கேட்க வேண்டிய பரதன் முடிசூடல், இராமன் காடேகுதல் என்ற இரண்டு வரங்களைக் கேட்கச் சொன்னாள்.

அதற்கு உடன்பட்ட கைகேயி மகிழ்ச்சியால் மந்தரையை ஆரத் தழுவிக் கொண்டாள். "நான் வெறும் பரதனுக்குத்தான் தாய். நீயோ இரைந்த கடல்சூழ் உலகம் எல்லாம் என் ஒரு மகனுக்கு ஈந்தாய். தரைக்கு நாயகன் தாய் இனி நீயெனக்" கூறியதாகக் கம்பர் கூறுகிறார். இங்கும் அவளையறியாமலேயே வந்த கூற்றின்மூலம் கைகேயி தூய்மையான சிந்தை உடையவள் என்பதை உணர வைக்கிறார் கம்பர்.

இராமனுக்குச் சூட்டப்படவேண்டிய பட்டாபிஷேகத்தைச் சூழ்ச்சியால் பெற்றுத் தரும் தீவினை செய்பவள் நீயே. அதனால் தீவினையால் பெறும் அரச பதவியேற்கும் பரதனுக்குத் தாய் இனி நீ தான் எனக் கூனியிடம் கைகேயி கூறுவது கம்பனின் ஆழ்மன நிலைக்குச் சிறந்த ஆதாரம்.

மந்தரை வசப்பட்ட கைகேயி கணவன் இரண்டு வரங்களை வழங்காவிட்டால் அவன் முன்பே தான் இறத்தல் உறுதி என்று மந்தரையிடம் தெளிவுபடுத்துகிறாள். மந்தரையை அனுப்பிவிட்டுக் கணவன் தசரதன் வரும் நேரத்தில் ஊடல் கோலங்கொண்டு அலங்கோலமாகக் காட்சி தரக் கைகேயி தயாரானாள்.

தசரதன் இராமன் பட்டாபிஷேகத்தைப் பற்றிக் கைகேயியிடம் சொல்ல வருகின்றான். தயரதனின் ஆவியை ஒத்த கைகேயி கோலம் கண்டு வருத்தப்பட்டு, ஆண் யானை மானை அள்ளுவது போல அள்ளி எடுத்தான். ஏன் இந்தக் கோலம் என்று கேட்கிறான். முன்பு கொடுத்த இரண்டு வரங்களைக் கேட்கிறாள்.

"உன் பிள்ளையாகிய இராமன் மேல் ஆணை நீ எது கேட்டாலும் செய்வேன்" என்று சொல்கிறான். அப்போது கைகேயி திட்டமிட்டபடி இரண்டு வரங்களைக் கேட்கிறாள். ஆவியை ஒத்த கைகேயி என்று முன்னால் கூறிய பாடலில் சொன்ன கம்பர் இந்த இடத்தில், "தீயவை யாவையினும் சிறந்த தீயாள்" என்று வேறு முரணான படப்பிடிப்பை நமக்கு அளிக்கிறார். தசரதன் என்ற யானை கைகேயி என்ற மானை அள்ளிய காட்சியைக் காட்டிய கம்பர் கைகேயி வரம் கேட்ட உடனே "நாகம் தீண்டிய யானை வீழ்ந்தது போல் தசரதன் வீழ்ந்தான்" என்று கூறுகிறார்.

காட்சி நாடக அரங்கில் மாறுவது போலக் கம்பனால் காட்டப்படுகிறது. தசரதன் கைகேயியைப் பிடித்து எற்றி மோத நினைத்தான். பெண்ணை அடித்தல் பழி என்று அஞ்சினான். அப்போது தசரதன் உற்ற துன்பத்தைப் பார்த்த தேவர்களும் பிரளய காலம் வந்தபோது நடுங்குவது போல நடுங்கினர். ஆனால் கைகேயி முன்பு போலவே இருந்தாள் அஞ்சவில்லை; இரங்கவில்லை; வெட்கப்படவுமில்லை என்று சொல்ல கம்பருக்கு வெட்கமாக இருக்கிறது என்று சொல்கிறார்

கைகேயியின் மனதுள் நிகழ்ந்த முரண் தன்மையை தசரதனால் நம்ப முடிய வில்லை. அதனால்தான் உனக்கு யாராவது வஞ்சகத் தன்மையுடையவர்கள் ஏதோ கற்பித்த வஞ்சனைச் சொல்தான் இதற்குக் காரணமோ என வினவுகிறான்.

அதைக்கேட்டவுடனே கைகேயி காரண காரியங்களை விளக்கித் தசரதனை சமாதானப்படுத்த முடியாமல் நீ அன்று கொடுப்பதாகச் சொன்ன இரண்டு வரங்களைக் கொடுக்கவில்லை எனில் 'மாள்வேன்' என்று உச்சத்துக்கே சென்றுவிட்டாள். கைகேயியின் மாள்வேன் என்ற கூற்றைக் கேட்ட தசரதன் இந்த உலகத்தில் உள்ள அத்தனை பெண்களையும் அழித்துவிடலாமா என்று கூட எண்ணினான். அதனால் பெரும்பழி வருமே என்று எண்ணிக் கைகேயி காலில் விழுந்தேனும் அவளுக்கு வரவுள்ள பழியை நீக்கலாம் என்று தசரதன் முடிவெடுத்தான். கைகேயி கேட்கவில்லை. பரதனுக்கு வேண்டுமென்றால் ஆட்சியைக் கொடுத்துவிடலாம். இராமனைக் காட்டுக்குப் போகச் சொல்லும் வார்த்தைத் தவிர்ப்பாயோ என்று சொல்லியும் கேட்கவில்லை.

'பேயும் கூட இறங்குமே நீ இறங்கமாட்டாயா?' என்று தசரதன் கெஞ்சுகிறான். பேயைவிடக் கொடியவளாகக் கைகேயி காட்சி தருகிறாள். கம்பனே அடுத்து;

''சூழ்ந்தாள் துன்பம் சொற்கொடியாள் சொல்கொடு நெஞ்சம்
போழ்ந்தாள் உள்ளப் புன்மையை நோக்கி புரள்கிறான்''

என்று தசரதன் நிலையைச் சொல்லும்போது கைகேயி தசரதனைக் கொலை செய்கிறாளோ என்று விளவுகிறான். எல்லா அரசர்களையும் வென்ற தசரதனுக்கு ஒரு பெண்ணை வெல்ல முடியவில்லையே என்று ஏங்குகிறார். அவனைக் கம்பன் பசை அற்றாள் என்று அயோத்தியா காண்டத்தில் 42-ஆம் பாடலில் கூறுகிறார்.

என்ன சொல்லியும் கெஞ்சியும் கூடக் கேட்கவில்லை. வரத்தைக் கேட்டவளிடம் தசரதன் கொடுத்தான். இரவில் நிம்மதியாக தூங்கினாள்.

பிறகு காலையில் சுமந்திரன் கைகேயியின் அந்தப்புரத்தில் இருக்கும் தசரதனை அழைத்து வரச் சென்றான். 'ஆனால் பெண்களில் கூற்றம் போன்ற கைகேயி' இராமனை அழைத்து வருமாறு சொல்கிறாள். இராமனை அழைத்து வந்தான்.

அப்போது அங்கே இராமன் வருகையைத் தரிசிக்கக் காத்திருந்த சிலர் கோசலை யாகிய தாயின்மடியில் இராமன் வளரவில்லை. முன்பு கைகேயி செய்த தவத்தால் அவள் கையில் வளர்ந்தவன் ராமன் என்று எண்ணுகின்றனர். எல்லோரும் கைகேயி கூனி வசப்பட்டதை அறிய வாய்ப்பில்லை. இராமன் கைகேயியிடம் வந்ததும் தான் பெற்ற வரத்தைச் சொல்கிறாள். அப்போது கம்பர்

''இரும்பினால் இயன்ற நெஞ்சினை உடையவள்'' என்றும்,

''கொன்றுழல் கூற்ற மென்னும் பெயரின்றிக் கொடுமை பூண்டாள்''

என்றும் கைகேயியைப் பற்றிச் சொல்கிறார். அப்பேர்ப்பட்ட கைகேயி பரதன் ஆட்சியை ஆளவேண்டியதையம், இராமன் காடேக வேண்டியதையும் சொன்னாள்.

இராமன் அவள் திருவடிகளையும் தந்தை தசரதன் இருக்கும் திசையையும் தொழுது அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற முகமலர்ச்சியோடு கோசலை மாளிகை அடைந்தான். கோசலையிடம் தந்தை இட்ட கட்டளையைச் சொல்கிறான். கோசலை கைகேயி மாளிகைக்குச் சென்று தசரதனைக் கண்டாள். மூர்ச்சையுற்றுக் கிடந்ததை அறிந்து அழுதாள். அங்கு வசிட்ட முனிவர் வருகிறார். அவர்,

மாணா உரையாளாகிய கைகேயியே அரசை இராமனுக்குக் கொடுப்பாள் என்று சொல்லித் தயரதனைத் தேற்றுகிறாள்.

தயரதன் ஒருகட்டத்தில் கைகேயியைத்தன் மனைவி அல்லள் பரதன் தன் மகன் அல்லன் என்று சொல்லுமளவுக்குப் பாத்திர வளர்ச்சி வலுவாக அமைகிறது. முதலில் கூனிவசப்பட்ட கைகேயி இறுதியில் கூனியாகவே மாறிவிட்டாள்.

அப்படித் தயரதன் கைகேயியைத் திட்டும்போது கோசலை இடையில் புகுந்து, ''சத்தியத்தில் வழுவாது நின்ற நீங்கள் தங்கள் மகன் மேல் உள்ள அன்பால் சொன்ன

சொல்லாகிய கைகேயிக்குக் கொடுத்த வரத்திலிருந்து மாறினால் உலகம் ஏற்றுக் கொள்ளாது'' என்று தன் கணவனுக்கு மாசு வரக் கூடாது என்று நினைத்தாள். கூறினாள். (நகர் நீங்குபடலம், பாடல் எண் 53) கணவன் செத்தால் சாகட்டும், தன் பிள்ளை அரசாண்டால் போதும் என்று கைகேயி நினைவு உள்ளதைக் கம்பர் கூறுகிறார்.

இங்கு தம்பி இலக்குவன் ''சிங்கத்துக்கு வைத்த மாமிசத்தை நாய்க்கு வைக்கப் பார்க்கிறாள் சிற்றன்னை'' என்று சீறுகிறான். பிறகு இராமன் இலக்குவனைத் தேற்றிச் சுமித்திரையைச் சந்திக்கச் செல்கின்றனர். அங்கே கைகேயி தந்த மரவுரிகள் இரண்டைத் தாதியர் கொண்டு சென்றனர். இந்த இடத்தில் கைகேயியை ''மாயாப் பழியாள்'' என்று கம்பர் சொல்கிறார்.

வசிட்டர் அழைப்புக்கிணங்கப் பரதன் அயோத்தி வந்து கைகேயியின் கோயிலை அடைந்து ''என் தந்தையை வணங்கவேண்டும். அவர் எங்கே'' என்று கேட்டான். அதற்கு சிறிதும் வருத்தமடையாத மனதை உடைய கைகேயி,

''.......... . .........தேவர் கைதொழ
வானகம் எய்தினான் வருந்தல் நீ என்றாள்,'

என்று கம்பர் கூறுகிறார். கைகேயி 'இராமன் காட்டுக்குப் போனால்தான் இராவணனை அழிக்கமுடியும்' என்ற காப்பிய நோக்கத்தைத் திட்டமிட்டுச் சொல்லவில்லை. மாறாக எதேச்சையாகச் சொன்னதிலிருந்து நாம் அதை உய்த்துணரும் வகையில் அமைந்திருப்பது போற்றுதற்குரியது. பிறகு இராமன் காடேகியதற்கும், தயரதன் இறந்ததற்கும் உண்மைக் காரணத்தைச் சொன்னாள் கைகேயி. அப்போது பரதன்,

''நீ இனும் இருந்தனை யானும் நின்றெனன்
ஏ எனும் மாத்திரத்து எற்று கின்றிலன்
ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால்
தாய் எனும் பெயர் எனைத் தடுக்கற் பாலதோ''

(பள்ளிப்படைப் படலம் பாடல் எண் : 72) என்று கூறுவதாக கம்பர் படைத்துள்ளார்.

ஆகவே முதலில் கூனி வசப்பட்டுப் பிறகு கூனியாகவே மாறிவிட்ட கைகேயி மனைவி அல்ல என்ற நிலையைத் தசரதனும் தாய் அல்ல என்ற நிலையைப் பரதனும் தங்கள் வாயால் சொல்லியதாகக் கம்பர் படைத்துள்ளார்.

கைகேயியைப் படைத்த கம்பனின் நோக்கம் மிகவும் கூர்மையானது. இராமாவதார நோக்கம் ஈடேற அடிப்படைக் காரணமாகக் கூனியும் காரியமாகக் கைகேயியும் படைக்கப்பட்டுள்ளதால் அயோத்தியாக் காண்டம் கைகேயி காண்டமாகவே பரிமளிக்கிறது என்று தான் சொல்ல வேண்டும்.



# “மன்னு புகழ்க் கோசலை”

*

முனைவர். திருமதி வ. ச. வண்டார்குழலி




கம்பன் உலக மகா கவிஞன்; தமிழ்க் கவிச் சக்ரவர்த்தி; காப்பியக்கவி ஏறு; கற்பனைக்கொரு கொள்கலம்; அணிகளுக்கோர் இருப்பிடம்; கலைகளுக்கொரு கவின் களம்! கருத்துக் குவியல்களின் களஞ்சியம். கல்விக் கடல். உவமைக் கவிஞன். இவை அனைத்திற்கும் மேலாகப் பாத்திரங்களைப் படைப்பதில் பெரியவன். காவிய உலகில் பாத்திரப் படைப்பில் கம்பன் ஓர் அற்புதன் என்றால் மிகையாகாது.

கம்பன் காவியம் ஒரு சமுதாயக் காவியமாகத் திகழ்கின்றது. இக்காப்பியத்தில் பெண்ணின் சீர்மைப் பண்பாகிய பெண்மை சிறப்பாகப் போற்றப்படுகின்றது. மனித மனங்களை மேன்மைப்படுத்தும் பெண்மைத் தன்மை உயர்வாகக் கம்பரால் போற்றப் படுகின்றது. கம்பராமாயணத்தில் தலைமக்களாகத் திகழும் பெண்டிர் அரசக் குலத்தில் தோன்றியவர்களே ஆயினும், சமுதாயம் போற்றும் உயரியப் பண்புகளைக் கொண்டு திகழ்கின்றார்கள்.

இராம காதையின் தலைவனாம் இராமனின் வரலாற்றை அறியக் காரணமாகத் திகழ்பவள் கோசல நாட்டு மன்னன் தசரதனின் பட்டத்தரசி - முதல் தேவி - கோசலை யாவாள். குலசேகராழ்வாரும் கோசலையின் பெருமையை உணர்ந்து ‘மன்னு புகழ்க் கோசலை’ என்றே பாராட்டுகின்றார்.

### பெண்ணின் சீர்மை மிக்காள்

கோசலை நல்லியல்பும், நற்பண்பும், திரிபில்லாத மனமும் கொண்டு விளங்கு கின்றாள். அன்பு நெஞ்சங் கொண்டவள்; கற்பின் கொழுந்தாகத் திகழ்பவள்: மாற்றாளின் மகனையும் தன் மகனாகக் கருதிப் போற்றும் பெருந்தகைமை கொண்டவள்; அறநோக்கும் தவவுணர்வும் கொண்டவள்; கணவன் கருத்தினைச் செவிமடுக்கும் சீர்மை கொண்டவள்; அரச குலத்தில் தோன்றாத வேட்டுவச் செம்மல் குகனையும் தன் மகனாகக் கருதும் பரந்த நோக்கினள்; போன்ற இன்னோரன்ன இனிய பண்புகள் பலவற்றைக் கொண்ட கோசலையை அயோத்தியா காண்டத்தில் கம்பர் படைத்துள்ளார்.

### கற்புச் செல்வி

“பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்”

—குறட்பா 54

என்று பெண்ணின் கற்பின் மேன்மையைச் சுட்டுவார் வள்ளுவர். கோசலையின் கற்பின் உயர்வினைக் கம்பர் இராமர் வழிப் பாராட்டுகின்றார். இராமன் காட்டுக்கு ஏகுதலை

அறிந்து கோசலை வருந்தும் வேளையில், இராமன் தாயினை ஆறுதல் படுத்தும்போது அவளை,

"அருங் கற்பினோய்" என்றும்

(பாடல் எண்-312)

"கற்புறுத்திய கற்புடை யாள்"...என்றும்

(பாடல் எண்-313)

அழைக்கும் போது, அவளின் உயரிய உன்னத கற்பு இராமனால் பாராட்டப்படுகின்றது.

பரதன் குற்றமற்றவன் என்று உணர்ந்த கோசலையைக் கம்பர்,

"குலம்பொறை கற்பினைச் சுமந்த கோசலை"

(பாடல்-901)

என்று புகழ்கின்றார்.

### அறச்செல்வி

இராமபிரான் முடிசூடப் போகும் செய்தியைத் தன் தோழியர் வாயிலாக அறிந்து கோசலை மனமகிழ்ந்து, நல்ல தவசிகளுக்குக் கன்றுடைய பசுத்திரள்களைத் தானமாகத் தருகின்றாள். அந்தணர்களுக்குப் பொன்னையும், நவரத்தினங்களையும், சந்தனத்தையும், பெண்களையும் பூமியின் கூட்டத்தையும் இவை போல்வன பலவற்றோடு அன்னம், தளிர் போன்ற ஆடைகள் போன்றனவற்றையும் அளித்துச் சிறப்புச் செய்கின்றாள்.

"...... நல்ல தவர்க் கெலாம்
கன்று டைப்பசு வின்கட னல்கினாள்" —என்றும்

(பாடல்-97)

"பொன்னும் மாமணி யும்புனை சாந்தமும்
கன்னி மாரொடு காசினி யீட்டமும்
இன்ன யாவையு மீந்தன ளந்தணர்க்கு
அன்ன முந்தளி ராடையு நல்கினாள்"

(பாடல்-98)

என்றும் கம்பர் கூறுகின்றார்.

இராமன் முடிசூடும் செய்தியினை அறிவித்த தோழியருக்கு மணி ஆரமும், நல் நிதிக் குவியல்களும் அளித்து மகிழ்ந்தாள் எனில் அவளின் அறவுணர்வு புலனாகின்றது.

### பக்திச் செல்வி

இறைவன் திருவருளை இராமன் முடிசூடலுக்காக வேண்டி நிற்கின்றான். ஸ்ரீமந் நாராயணனையே மகனாகப் பெற்ற பெருமைமிக்க அரசி, அந்நாராயணக் கடவுளைத் தன் மகனுக்காகப் பக்தியுடன் வணங்குகின்றாள்; பூசனை செய்கின்றாள்; கோயில் வலம் வருகின்றாள்.

"...... தேவர்கள் யாவர்க்கும்
ஆவியும் அறிவும் முதலாயன
மாவு லாமலர்ப் பாதம் வணங்கினாள்"

(பாடல்-95)

"என்வ யிற்றரு மைந்தற் கினியருள
உன்வ யத்ததென் றாள்..."

(பாடல்-96)

"...... என்றி றைஞ்சியவ் விந்திரை கேள்வனுக்கு
ஒன்று நான்மறை போதிய பூசனை
நன்றி ழைத்தவள் ......"

(பாடல்-97)

"...... நாயக ணான்மலர்ப் பாதத்தைப்
புல்லிப் போற்றி வணங்கிப் புரையிலா
மல்லன் மாளிகைக் கோயில் வளங்கொளாத்
தொல்லை நோன்புகள் யாவுந் தொடங்கினாள்"

(பாடல் 99)

இப்பாடல்கள் கோசலை தன்மகன் இராமனுக்காகப் பண்ணிய பக்தியின் சிறப்பினைக் காட்டுகின்றன.

## அன்புச் செல்வி

இராமன், உன்மகனும், என் தம்பியுமான பரதன் முடிசூடப் போகின்றான் என்ற செய்தியைத் தாய் கோசலைக்கு அறிவித்த போது, செவிமடுத்த கோசலை, 'மூத்தவன் இருக்க இளையவன் முடிசூடுவது முறையன்று என்ற ஒன்றினைத் தவிர மற்றவகையில் உன்னைவிட பரதன் நல்லவன். யாதொரு குறையும் இல்லாதவன் எனவே அவன் முடிசூடுவதில் தவறில்லை என்று கூறி அமைதி காணும் உள்ளம் கொண்டவள். இவளின் அன்பு வெளிப்பாடு வெளிப்படும் மொழியாக கம்பர்,

"முறைமை யன்றென்ப தொன்றுண்ட தல்லது
நிறைகு ணத்தவ னின்னினு நல்லனால்
குறைவி லன் ....."

(பாடல் 302)

மொழிகின்றார்.

## பண்புச் செல்வி

இராமன் முடிசூடவிருப்பதை அறிந்த கூனி, மனம் பொறுக்காது கைகேயியின் மனதில் பொறாமை தோன்றும் வண்ணம்

"வீழ்ந்தது நின்னலந் திருவும் வீழ்ந்தது
வாழ்ந்தனள் கோசலை மதியி னாலென்றாள்"

(பாடல் 147)

என்று கூறுகின்றாள். இதனைக் கேட்ட கைகேயி

> "......
> மன்னவர் மன்னனேற் கணவன் மைந்தனேல்
> பன்னரும் பெரும்புகழ்ப் பரதன் பார்தனில்
> என்னிதன் மேலவட் கெய்தும்வாழ்வு"
> (பாடல் 148)

என்று அவளின் உயர்ந்த வாழ்க்கைப் பண்பைப் பாராட்டிப் பேசுகின்றாள். கோசலையின் பால் உள்ள சிறந்த பண்புகளையே கருவியாக்கி கைகேயியின் மனதில் பொறாமை எனும் கனலைத் தூவுகின்றாள் மந்தரையாகிய கூனி. போற்றுதலுக்குரிய கோசலையின் பண்பு அவள் மகன் இராமன் கானகம் செல்ல வழி வகுக்கின்றது.

### சொற்காத்தச் செல்வி

கோசலை கடமை உணர்ந்த காரிகை. இராமன் காட்டுக்குச் செல்வது மனதை வருத்தினாலும், கைகேயியிடம் எதுவும் கூறி வேண்டவில்லை. பிள்ளைப் பாசத்தை ஒதுக்கித் தன் கடமையைச் செய்யக் கருதுகின்றாள். சத்தியத்தைக்சாக்க முற்படுவர் மகன் பாசம் கொண்டு வருந்துவதைச் சமுதாயம் ஏற்காது. இறக்கும் தருவாயிலும் வாக்குத் தவறியவன் என்ற பழிச் சொல் கணவனுக்கு உண்டாக்குதல் கூடாது என்று எண்ணு கின்றாள். 'இராமன் வருவான்' என்று கூறிக் கணவனைத் தேற்றுகின்றாள்.

தசரதன் கோசலையைத் தன் உற்ற தோழியாகக் கருதித் தனக்கு ஏற்பட்ட புத்திர சோகத்திற்குக் காரணமான சாபத்தினையும், முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சியினையும் கூறி வருந்துகின்றான். மன்னனின் மன வருத்தத்தினைக் கேட்டு மனங்கலங்கி, 'விதியின் விளைவு' என்று கூறி கணவனைத் தேற்றுகின்றாள். இந்நிலை,

> தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்" (குறட்பா 56)

என்ற வள்ளுவரின் வாய்மொழியின் வழி வாழ்ந்தாள் என்பதை உணர முடிகின்றது.

### நன்மனச் செல்வி

இராமன் கானகம் சென்றதை அறியாத பரதனிடம் கோசலை, "உன் தாய் கைகேயி செய்த வஞ்சகச் செயலை நீ அறிந்திலையோ" என வினவ, அச்சொல் கேட்டு பரதன் 'பொறிகொண்டு பிடிக்கப்பட்ட சிங்கம் போல பேராரவாரஞ் செய்து, குமுறி அழுது, தன் தாயின் வஞ்சகச் செயலைத் தான் அறியாததோடு, "பரதன் அறிந்தே கைகேயி இத்தவற்றினைச் செய்தாள்' என்று கோசலை ஐயங்கொண்டதாகக் கருதி, தான் தூய்மை உடையவன், கைகேயியின் சூழ்ச்சி அறியாதவன் என்பதற்கான சபத மொழிகளைக் கேட்ட கோசலை 'தூரதேசம் போனவர் திரும்பி வந்தால் அவரைக் கண்டவர் கண்களில் கண்ணீர் தோன்றுதல் இயல்பு போல, அன்பினால் அழுது அவனை ஆரத் தழுவிக்கொள்கின்றாள். நல்மனத்து பரதன் செய்கையால் கோசலையின் மார்பகத் திலிருந்து பீறிட்டுப் பால் வெளிப்படுகின்றது. பரதனைப் பார்த்து, "மன்னர் மன்னவனே! உனது குலத்துக்கு முன்னோர்களாகிய மனு போன்றவர்கள் உன்னை யொத்த தன்மையுடையவர் யாவர்?" என்று மனமுருகி நல்மனத்துடன் வாழ்த்துகின்றாள்.

**தொழத்தக்கச் செல்வி**

குகப்படலத்தில் 'சுற்றத்தார் தேவரொடும் தொழா நின்ற கோசலையைத் தொழுது நோக்கி, குகன் கோசலையை யார்?' என்று பரதனிடம் வினவ, "மூன்று உலகங்களையும் படைத்த பிரம்மனை முன்பு படைத்த திருமாலாகிய இராமனைப் பெற்றதால் பெறற்கரிய செல்வம் பெற்றவள், நான் பிறந்ததால் அச்செல்வத்தைத் துறந்த பெரியாள்" என்று மொழிகின்றான் பரதன். பரதன் கோசலையின் பெருமை யினைக் கூறிய அளவில் கோசலையின் திருவடியின் மீது நெடிது வீழ்ந்து வணங்கு கின்றான். கோசலை குகனையும் தன் மகனாக ஏற்று,

"...... நீவிர்
ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்தீர்"
(பாடல் 1077)

என்று வாழ்த்துகின்றான்.

**நிறை செல்வி :**

அயோத்தியா காண்டத்துள் கம்பர் கோசலையைக் கற்பு, தாய்மை, பெண்மைக் கான நற்பண்புகள், பொறுமை, துன்பங்கண்டு துவளாத தன்மை, கணவனும், மக்கட் செல்வங்களும் விரும்பும் தகைமை, கடமை உணர்ந்து போற்றுதல், அரசியானாலும் மக்கட் சமுதாயம் கடைபிடிக்கக் கூடிய நல்லொழுக்கத்தை மேற்கொண்டு விளங்கும் கதாபாத்திரமாகப் படைக்கின்றார். இவை அனைத்திற்கும் மேலாக இவ்வுலகிற்குக்

"கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை" (பாடல்-91)

ஒரு தெய்வத்தாயாக அயோத்தியா காண்டத்துள் நடமாடச் செய்துள்ளார் என்றால் மிகையாகாது. ●



(மேற் கோள் பாடல்கள் எண் : வை. மு. கோ. பதிப்பு)

---

## நாடக யுக்தி

'கம்பனுடைய கவிதையைப் பற்றி ஒரே வார்த்தையில் வர்ணிக்க வேண்டுமானால் அதன் சிறந்த குணம் காம்பீர்யம் என்று சொல்லலாம். கம்பன் சிருங்காரத்தை அழகாகச் சொல்லுகிறான் என்பதில் தடையில்லை. சோகம் சொல்லும் இடங்களில் எல்லாம் நம்முடைய கண்களில் இன்றும் தாரைதாரையாகக் கண்ணீர் பெருகும்படி செய்துவிடு கிறான். ஆனால் அவன் வீரத்தையும் வியப்பையும், ரௌத்திரத்தையும் தன் சொந்த மாக்கிக் கொண்டு விட்டான். இவ்வளவு ரஸபாவங்களையெல்லாம் தன் காவியத்தில் அமைத்து அதை ஒரு பெரிய நாடக அரங்கமாகவே ஆக்கிவிடுகிறான். அவன் அந்த அரங்கத்தில் நடத்தும் பாத்திரங்கள் எல்லாம் உயிர் ஓவியங்களாக நமக்குக் காட்சி அளிக்கிறார்கள். 'கம்பன் என்ற பெயரைக் கேட்ட அளவிலே தமிழ்க்கவிதா மண்டலத்தின் மகோன்னதமான உச்சியும், கற்பனை உலகத்தின் விரிவும் சக்தியும், தமிழ்நாட்டின் கலைவாழ்வின் வளமும் சுவையும், எல்லாம் ஒரு நாடக அரங்கத்திலே தோன்றுவது போலத் தென்படுகின்றன.

— தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

# சுமித்திரை

✱

பேராசிரியை திருமதி. மூ. அவையாம்பாள்

**முன்னுரை :**

கம்பனுடைய இராமாயண காவியத்தில் இரண்டாம் காண்டமாக அமைவது அயோத்தியா காண்டமாகும். இக் காண்டத்துள் மந்திரப் படலம் முதலாக திருவடி சூட்டு படலம் இறுதியாக மொத்தம் பதின்மூன்று படலங்கள் காணப்படுகின்றன. இக் காண்டத்தில் பல கதாமாந்தர்கள் இடம் பெற்றுள்ளனர். அவற்றுள் அயோத்தியா காண்டம் உணர்த்தும் சுமித்திரை பற்றிய செய்திகளை இங்கு காணலாம்.

**சுமித்திரை – அறிமுகம் :**

'சுமித்திரை' என்னும் சொல்லிற்கு நல்ல பண்பு நலன்களை உடையவள் என்பது பொருளாகும். இராமனுக்கு முடிபுனையப் போகிறார்கள் என்ற செய்தியை மங்கையர்கள் கோசலைக்குத் தெரிவிக்கின்றனர். அச் செய்தி கேட்டு மகிழ்ந்தவள் அம் மங்கையர்கட்கு பொன்னும் மணியும் வழங்குகிறாள். பின்னர் தனது தோழிபோல் திகழக் கூடிய சுமித்திரையுடன் திருமாலின் திருக் கோவிலுக்குச் சென்று வழிபடுகிறாள்.

அயோத்தியா காண்டத்தில் கோசலையின் 'துன்னு காதலளாக' சுமித்திரையை அறிமுகம் செய்கிறார் கம்பர். நாளை இராமனுக்கு முடிசூட்டு விழா என்ற செய்தி கேட்ட கோசலை மனமகிழ்ச்சி கொண்டவளாய் சுமித்திரை, சீதை, இலக்குவன் ஆகியோருடன் ஜனார்த்தனன் கோவிலுக்குச் சென்று வழிபட்டாள் என்று வான்மீகி கூறுகிறார். இராமனின் பட்டாபிஷேகச் செய்தியை அறிந்த சுமித்திரையும் கோசலையும் பேரானந்தம் அடைந்தனர் என்று துளசிதாசர் கூறுகிறார்.

வான்மீகி, கம்பர், துளசிதாசர் மூவரும் இராமனின் முடிகட்டு வைபவச் செய்தி கேட்டு மகிழ்ந்து திருமாலின் கோவில் சென்று வணங்குவதாகவே சுமித்திரையை அயோத்தியா காண்டத்தில் அறிமுகம் செய்கின்றனர்.

**இராமன் கருத்தில் சுமித்திரை :**

கைகேயி தயரதனிடம் இராமன் காடு செல்லவும், பரதன் நாடாளவும் வரம் பெறுகிறாள். இந்தச் சூழலில் வனம் செல்லத் துணிந்த இராமன் தன் தாய் கோசலை யிடம் விடைபெறச் செல்கிறான். இதனால் வருத்தமுற்ற கோசலை இராமன் காடேகு வதைத் தடுக்க தசரதன் இருக்கும் கைகேயியின் அரண்மனை நோக்கிச் செல்கிறாள். தனது தாயின் துயரத்தை எண்ணியவனாக இராமன் சுமித்திரையின் மாளிகை நோக்கிச் செல்லும் போது,

...... ...... ......புரவலன்
ஆகம் மற்று அவள் தன்னையும் ஆற்றி, இச்
சோகம் தீர்ப்பவள். (அயோ காண்டம். 1633)

என்று எண்ணுகிறான். இவ்வாறு இராகவன் நினைப்பதன் மூலம் சுமித்திரையின் பண்பட்ட மனநிலை வெளிப்படுகிறது. மேலும் எத்தகைய துன்பத்திற்கும் மாமருந்தாக அமைவது அன்பு ஒன்றே ஆகும். தயரதன் கோசலையின் சோகம் தீர்ப்பவளாக சுமித்திரை சித்தரிக்கப்பட்டுள்ளதனால் அன்பே வடிவானள் சுமித்திரை என்பதை அறிய முடிகிறது.

**சுமித்திரையின் துயரம் :**

அன்புரு கொண்டவளாய், பிறர் சோகம் தீர்க்கும் தகைமையளாய் சுமித்திரை திகழ்ந்தாலும் இராமன் மீது கொண்ட பாசத்தால் அவன் பிரிவை எண்ணிக் கலங்குகிறாள். இதனைக் கம்பர்,

"கண்டாள் மகனும் மகனும் தன் கண்கள் போல்வார்
தண்டாவனம் செல்வதற்கே சமைந்தார்கள் தம்மை
புண்தாங்கு நெஞ்சத்தனளாய்ப் படிமேல் புரண்டாள்
உண்டாய துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலாதாள் (1744)

என சுமத்திரையின் துயரநிலையை காட்சிப்படுத்துகிறார். இதன் மூலம் இராமனிடம் மிக்க அன்பு கொண்ட பாசம் மிகுந்த தாயாக சுமித்திரை விளங்குகிறாள் என்பதை உணர முடிகிறது.

**சுமித்திரையின் நுண்ணறிவுத் திறன் :**

இராமனுடன் தானும் காடு செல்ல வேண்டும் என்று எண்ணுகிறான் இலக்குவன். கைகேயி கொடுத்தனுப்பிய மரவுரியை அன்புடன் ஏற்கிறான். இருப்பினும், இராமனுடன் நீயும் காட்டிற்குச் செல் எனத் தனது தாய் சுமித்திரை கூற வேண்டும் என எதிர்பார்த்து அவளின் பாதங்களில் வீழ்ந்து வணங்குகிறான் இலக்குவன். அன்புடன் மரவுரியை ஏற்றதன் வாயிலாக அவனது உள்ளக் குறிப்பை உணர்கிறாள் சுமித்திரை.

இராமன் வனம் செல்வதை அறிந்த இலக்குவன் தானும் இராமனுடன் செல்ல எண்ணுகிறான். அதற்காக அண்ணல் இராமனிடம் அனுமதியும் வேண்டிப் பெறுகிறான். பின்னர் இராமனின் ஆணைப்படி, தன் தாய் சுமித்திரையின் இசைவினை வேண்டி மாளிகை நோக்கிச் செல்கிறான். அவ்வாறு செல்லும் காலத்தில் தாய் தன்னை இராமனுடன் காட்டிற்கு அனுப்புவார்களா? என்ற ஐயம் ஏற்படுகிறது. எனவே தனது எண்ணத்திற்கு தாய் அனுமதிக்க வேண்டும் என்று கடவுளை வேண்டுகிறான். இவ்வாறு துளசிதாசர் இக்காட்சியை விளக்குகிறார்.

இலக்குவனின் குறிப்பை சுமித்திரை உணர்வதன்மூலம் பிறர் உள்ளத்து உணர்வுகளைக் கண்டறியும் நுண்ணறிவினளாக சுமித்திரை விளங்குகிறாள் என்பதைக் காண முடிகிறது.

### சுமித்திரை இலக்குவனுக்குக் கூறிய அறிவுரைகள்

இலக்குவனின் குறிப்பை அறிந்த சுமித்திரை இராமனுடன் காட்டிற்குச் செல்லுமாறு பணிக்கிறாள். அதோடு அமையாமல் இலக்குவனை நோக்கி,

"ஆகாதது அன்றால் உனக்கு; அவ்வனம் இவ் அயோத்தி
மாகாதல் இராமன் நம் மன்னவன் வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல் சீதை என்றே
ஏகாய் இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்... (1751)

"பின்னும் பகர்வாள் மகனே இவன் பின்செல் தம்பி
என்னும் படி அன்று அடியாரின் ஏவல் செய்தி
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின் வா, அஃதன்றேல்
முன்னம் முடி..." (1752)

என்று அறிவுரை வழங்குகிறாள்.

காடு செல்ல ஆயத்தமான இராமனும் சீதையும் இலக்குவன் உடன்வரத் தசரதனையும் கோசலையையும் வணங்கி விடைபெற்றுக் கொண்ட பின்னர் சுமித்திரையை வணங்குகின்றனர். அவர்களுக்கு ஆசி வழங்கிய சுமித்திரை இலக்குவனை நோக்கிக் "குழந்தாய், நீ வனவாசம் செல்வதற்காகவே பிறந்தவன். இராமனிடத்தில் பக்தி பூண்டவனாய் இரு. அரசனாகப் பொலிந்தாலும் தவசியாக மெலிந்தாலும் உலகில் இராமன் ஒருவனே உனக்குக் கதி. இராமனைத் தசரதனாகவும். சானகியை நானாகவும், வனத்தை அயோத்தியாகவும், கருதிக் கொண்டு மனக் குறையற்றவனாகப் போய் வா" என்று அறிவுரை கூறி வாழ்த்தி வழியனுப்புகிறாள். (வான்மீகம்)

இராமனுடன் காடு செல்ல அவனுடைய அனுமதியைப் பெற்றதும் இராமனின் ஆணைப்படி இலக்குவன் தன் தாய் சுமித்திரையின் இசைவு பெறச் சென்றான். அவளும் இராமனைத் தந்தையாகவும் சீதையைத் தாயாகவும் வனத்தை அயோத்தியாகவும் கருதிக் கொண்டு அவனுடன் செல்ல ஆணையிடுகிறாள். (துளசிதாசர்)

கம்பர், வான்மீகி, துளசிதாசர் மூவரும் இலக்குவனுக்கு சுமித்திரை கூறும் அறிவுரைச் செய்திகளை மாறுபாடில்லாமல் சுட்டுகின்றனர். 'முன்னம் முடி' என இலக்குவனுக்கு அறிவுறுத்துவதன் வாயிலாக வான்மீகி, துளசியைவிட கம்பன் சுமித்திரையை தியாகத் திருவுருவாக படைத்துள்ளதை அறியமுடிகிறது.

### சுமித்திரையின் பாசத்துடிப்பு :

சொல் மாண்புடையவளாக, தியாகத்திருவுருவாக சுமித்திரை விளங்கினாலும் இராமன், இலக்குவன் பிரிவினை ஆற்ற இயலாமல் தவிக்கிறாள். இதனைக் கம்பர், "இரண்டு கன்று ஒரீஇ வெருவரும் ஆவினின் தாயும் விம்மினாள்" என்ற அழகிய உவமையின் வாயிலாக சுமித்திரையின் பாசத்துடிப்பை விளக்குகிறார்.

### கணவனை இழந்த சுமித்திரையின் அவலநிலை :

இராமன் சீதையும் இலக்குவனும் உடன்வர நாட்டுக்குச் சென்றுவிட்டான் என்ற

செய்தியைக் கேட்ட அளவிலேயே தயரதன் இறந்துபடுகிறான். இதனால் தயரதன் மனைவியர் துயரம் கொள்கின்றனர் சுமித்திரையின் அவலநிலையைக் கம்பர்,

''தோழி அன்ன சுமித்திரையும் துளங்கி ஏங்கி உயிர் சோர''

என்றுரைக்கிறார்.

**குகனின் கருத்தில் சுமித்திரை :**

கங்கை காண் படலத்தில் தனது தாய்மார்களைப் பரதன் குகனுக்கு அறிமுகம் செய்து வைக்கிறான். அப்பொழுது குகன்,

''அறம் தானே என்கின்ற அயல் நின்றாள்தனை நோக்கி ஐய அன்பின்
நிறைந்தாளை உரை என்ன...''

என்று கேட்டதற்குப் பரதன்,

''... .. நெறிதிறம்பாத் தன்மெய்யை நிற்பது ஆக்கி
இறந்தான்தன் இளந்தேவி யாவர்க்கும் தொழுகுலம்ஆம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப் பயந்த பெரியோள்
என்றான்''

என சுமித்திரையை அறிமுகம் செய்கிறான். இங்கு குகனின் நோக்கில் சுமித்திரை அறக்கடவுளாய், அன்பின் கொள்கலமாய்த் தோன்றுகிறாள்.

**முடிவுரை :**

கோசலையின் துன்னு காதலாக அறிமுகமாகும் சுமித்திரை பேசக்கூடிய இடங்கள் மிகக்குறைவு எனினும் சுமித்திரையின் பண்பு நலன்கள் முழுப்பரிமாணத்துடன் வெளிப் பட்டுள்ளது. சுமித்திரை இராமனிருக்கும் இடமே அயோத்தி, இராமனும் சீதையுமே உனது தாய் தந்தை என இலக்குவனுக்கு கூறும் அறிவுரையானது மானிட நிலையில் மட்டுமல்லாமல் கடவுளின் அவதாரமான இராமனின் தெய்வ நிலையைக் குறிப்பால் உணர்த்துவதனால் இராமகாதையின் முழுப் பொருண்மையையும் அறிய முடிகிறது. அயோத்தியா காண்டத்தில் கோசலையின் அன்புத் தோழியாக அறிமுகமாகும் சுமித்திரை அக்காண்டத்தின் முடிவில் அன்பின் கொள்கலனாக, அறக்கடவுளாக குகனால் எண்ணப் படுகிறாள். இதன் மூலம் மானுட நிலையிலிருந்து தெய்வநிலைக்கான சுமித்திரையின் படிநிலை வளர்ச்சியை விளக்குகிறார். கம்பர் இத்தகையதொரு நிலையை ஒவ்வொரு வரும் அடையவேண்டும் என்பதை குறிப்பால் உணர்த்தும் கதாபாத்திரமாகச் சுமித்திரை திகழ்கிறாள். ●



# 'கூனி'

*

## பேராசிரியர் திரு. த. திலிப்குமார்

தமிழ் இலக்கிய உலகில் கம்பருக்கு தனியிடம் உண்டு. தனது காப்பியத்தில் பாத்திரப்படைப்புகளை மிகவும் நேர்த்தியுடன் படைத்துச் சிறப்பு செய்தவர்.

அயோத்தியா காண்டத்தில் கூனியின் பாத்திரப் படைப்பை அறிமுகம் செய்யும் கம்பர் நமக்குள் அந்தக் கதாப்பாத்திரத்தின் தோற்றம், செயல்பாடு, குண நலம் எல்லாம் இப்படிக் கூறுகின்றார்.

''அந்நக ரணிவுறு மேலை வானவர்
பொன்னக ரிதுவெனப் பொலியு ஏல்வையில்
இன்னல் செ யிராவண னிழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்''. (10)

நகரத்தின் தனித்தன்மையும் அதன் சிறப்பும் கூறும் பொழுது இப்படி ஒரு நாடு வேறு எங்கும் இல்லை. அப்படிப்பட்டத் திருநாடு அயோத்தி. அந்நகரின் அமைதிக்கு பங்கம் விளைவிக்கும் வகையில் கூனி தோன்றினாள். மென்மையும் மேன்மையும் சிறப்புற அமையப் பெற்ற தசரத மன்னன் நாட்டில் கேடு செய்வதற்கு தோன்றினாள் இந்தக் கூனி என்றும், இராவணன் இராமனை அழிக்க, தீமைகளைச் சேர்தது செய்தது போல் இந்தக் கூனி தோன்றினாள்.

அவள் செயல், எண்ணம் எல்லாம் எப்பொழுதும் தீமை செய்வதுதான் தனது பிறவிப்பயன் என்று நினைப்பது போல் அவள் செயல் இருக்கும் என்று சொல்ல வந்த கம்பர் இந்தப் பாடலின்மூலம் ஒரு தோற்றத்தை நம் மனத்திரையில் கொண்டு வருகிறார்.

''தோன்றிய கூனியுந் துடிக்கு நெஞ்சினாள்
ஊன்றிய வெகுளியா ளுளைக்கு முள்ளத்தாள்
கான்றெரி நயனத்தாள் கதிக்குஞ் சொல்லினாள்
மூன்றுல கினுக்குமோ ரிடுக்கண் மூட்டுவாள்'' (11)

கூனிக்கு ஒரு சிறிதும் நல்ல எண்ணம் இல்லை, அவள் எப்பொழும் தீய எண்ணத்தை தன் மனதில் மட்டும் அல்ல தேகம் முழுவதும் சேர்த்து வைத்திருப்பவள் என்று கூறி நமக்கு உணர்த்துகின்றார்.

காப்பியத்தில் ஒரு பாத்திரத்தை நமக்கு அறிமுகப்படுத்தும் பொழுது இந்தக் கதாப்பாத்திரம் இப்படித்தான் செயல்படப் போகிறது என்பதை நமக்கு உணர்த்தும் வகையில் அமைத்துள்ளார்.

கூனியின் ஒவ்வொரு செயலும் வஞ்சகத்தால் ஆனது. மூன்று உலகமும் கெட்டுப் போக, தீய எண்ணத்தால் சிதைத்து விடுவாள். அவளது, சொல், செயல், ஆகியவை எல்லா நிலையிலும் வஞ்சகத் தன்மை உடையது என்று கூறுகின்றார்.

கம்பர் இக்காப்பியத்தில் மறைமுகமாக கூறியதுபோல தென்படுவது பெண்களுக்குப் பழிவாங்கும் உணர்வு இருக்குமோ, அப்படிப் பழிவாங்கும் உணர்வு இருந்தால் அவள் கூனிபோல் இருப்பாள் என்பதை தமது பாத்திரப் படைப்பு மூலம் வெளிப்படுத்துகிறார்.

ஒரு இலக்கியப் படைப்பு நமக்கு உணர்த்தும் செய்தி அந்த இலக்கியம் தோன்றியக் கால மக்களின் தன்மையை வெளிப்படுத்தும் அல்லது மக்கள் அப்படி இருக்க வேண்டும் என்று படைப்பாளன் நினைத்திருக்கக்கூடும்.

இராமன் தனது இளம் பருவத்தில் கூனி மீது உண்டி வில்லால் அடித்ததற்கு, இப்பொழுது பழி வாங்க நேரம் பார்த்துக் சொண்டிருந்தாள். அதற்கு ஏற்ற நேரம் இது தான் என்று முடிவு செய்தாள். அதற்கு ஏற்ற வகையில் கைகேயியை தன் கைப்பாவையாகப் பயன்படுத்துகின்றாள் என்று நினைப்பதுபோல கம்பர் தம் பாடலில் அமைத்துள்ளார்.

''தொண்டைவாய்க் கேகயன் றோகை கோயின்மேல்
மண்டினாள் வெகுளியின் மடித்த வாயினாள்
பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமிழ்
உண்டை யுண்டதனைத்தன் னுள்ளத்துள்ளுவாள்'' (12)

''எறும்பூரக் கல்லும் தேயும்'' என்ற சொல்லுக்கு இணங்க கைகேயியின் மனம் மாற்றம் அடைய தொடர்ந்து முயன்றாள். வெற்றியும் கொண்டாள்.

''ஆழ்ந்தபே ரன்பினா ளனைய கூறலும்
சூழ்ந்ததீ வினைநிகர் கூனி சொல்லுவாள்
வீழ்ந்தது நின்னலம் திருவும் வீந்தது
வாழ்ந்தனள் கோசலை மதியி னாலென்றாள்'' (14)

கூனி தன் பேச்சு வன்மையால் எதிரியைக்கூட ஈர்ப்பவள். அவள் பேசும் வார்த்தைகள் இனிப்பது போலத் தோன்றும். ஆனால் அதன் உள்ளே இருப்பது எல்லாம் நஞ்சு. மாற்றுக் கருத்து உடையவரும் மண்டியிடுவது போல் வார்த்தைக்கு வார்த்தை வண்ணம் பூசுவாள். இந்த வார்த்தை விளையாட்டில் கொஞ்சம் வளைந்து போனாள் கைகேயி. அவள் மனதும் மாற்றம் அடைந்தது.

''கைகேயி! உனக்கு இந்தத் திருநாட்டில் ஒன்றும் இல்லை. எல்லாம் இழந்தாய் உனது மாற்று மனுஷி கோசலைதான் செல்வச் செழிப்புடன் இருப்பாள். செல்வாக்கு செலுத்துவாள். நீ எதிர்பார்த்து வாழ வேண்டும்; அப்படி வாழ்வதைவிட சாவு மேல். இப்படி ஒரு வாழ்க்கை உனக்குத் தேவையா?'' என்று கூனி சொல்லிய சொல் கைகேயியின் மனம் மாற்றம் அடைவதற்குக் காரணமானது. அடிமேல் அடி விழுந்தால் அம்மியும் நகரும், என்பது போல கூனி மாற்ற முயன்றாள்.

"ஆடவர் நகையுற வாண்மை மாசுறத்
தாடகை யெனும் பெயர்த் தையலாள் படக்
கோடிய வரிசிலை யிராமன் கோமுடி
சூடுவ னாளைவாழ் விதெனச் சொல்லினாள்" (21)

"நாளை இராமனுக்கு முடிசூட்டு விழா நடைபெற உள்ளது. இப்படி நடப்பது எப்படி சரி. கொஞ்சம் யோசி."

"ஆளுமை தன்மை உள்ள ஆடவர்கள் எல்லோருக்கும் இழுக்கு. ஆண்மைக்கே மாசு ஏற்படும் தன்மையில் நடக்க உள்ளது முடிசூட்டு விழா. இதை நடக்க விடலாமா. இதைப் பொறுத்துக் கொண்டு எப்படி இந்த நாட்டில் இருக்க இயலும் என்று கூறி கைகேயியின் மனதை மாற்ற எல்லா வகையிலும் முயன்றவள். தனக்குப் பரிசாகக் கொடுத்த மணிமாலையை அணியாமல் தான் தனக்காகப் பேசவில்லை நாளை பரதன் தனித்துப் போவானே என்றுதான் பேசினேன் என்பது போல நடிக்கின்றாள்.

"தெழித்தன ளுரப்பினள் சிறுகண்டீயுக
விழித்தனள் வைதனள் வெய்து யிர்த்தனள்
அழித்தன எழுதன எம் பொன் மாலையால்
குழித்தன ணிலத்தையக் கொடிய கூனியே" (24)

தனக்குக் கிடைத்த அணிகலன் அணியாது இராமன் முடிசூட்டும் செயலை தடுப்பதில் குறியாக இருந்தாள் என்று சொல்ல வந்த கம்பர் 'கொடிய கூனி' என்று கூறுகின்றார்.

"சிவந்த வாய்ச் சீதையுங் கரிய செம்மலும்
நிவந்தவா சனத்தினி திருப்ப நின்மகன்
அவந்தனாய் வெறுநிலத் திருக்க லானபோது
உவந்தவா றென்னிதற் குறுதி யாதென்றாள்" (26)

இராமனுக்கு முடிசூட்டிய பின் சீதையும் அவளது உறவினர்களும் நிறைந்த மகிழ்ச்சியோடு இருப்பார்கள் உன் மகன் தனிமையில் சொந்தம் ஏதும் இல்லாது தனித்து இருப்பது எப்படி? கைகேயியின் தாய்மை தன்மையை உரசிப் பார்ப்பது போல் கூனி செயல் அமைந்திருப்பது போல் கம்பர் படைத்துள்ளார்.

"தூண்டு மின்னலும் வறுமையுள் தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்துனை யிரந்தவர்க் கிருநிதி யவளை
வேண்டி யீதியோ வெள்குதி யோவிம்மனோயால்
மாண்டு போதியோ மறுத்தியோ வெங்ஙனம் வாழ்தி (42)

தொடர்ந்து உனக்கு இன்னல் வரப்போகிறது. அத்துடன் வறுமையும் உன்னை வாட்டப்போகிறது. உன்னிடம் வந்து உதவி கேட்பவருக்கு உன்னால் ஒன்றும் கொடுக்க இயலாது. இப்படி ஒரு வாழ்க்கை வாழ்வதை விட மாண்டு போவது மேல். இந்த வாழ்க்கை உனக்குத் தேவைதானா? என்று கூறி கைகேயியின் மனதை மாற்றுவதில் வெற்றியும் பெறுகிறாள் கூனி.

கம்பர் இந்தப் பாத்திரப்படைப்பை நமக்கு அறிமுகம் செய்யும் போதே இப்படி யெல்லாம் தனித்தன்மை உடையது இந்தக் கதாப்பாத்திரம் என்பதை பல நிலைகளில் உணர்த்துகின்றார்.

கைகேயியை பல நிலைகளிலும் குழப்பத்திற்கு உட்படுத்தி தான் செய்ய நினைத்த செயலை செய்து முடிக்க முயலும் பொழுது கூனியிடம் கேட்கிறாள் கைகேயி. "நான் எப்படி அரசரிடம் கேட்பேன்" என்று,

"இரு வரத்தினு ளொன்றினா லரசு கொண்டிராமன்
பெருவ னத்திடையேழிரு பருவங்கள் பெயர்ந்து
திரிதரச் செய்வ தொன்றினா ற் செழுநில மெல்லாம்
ஒருவ ழிப்படு முன்மகற் குபாயமிதென்றாள்" (52)

இராமனைப் பழிவாங்க வேண்டும் என்பதும் எப்படிப் பழி வாங்குவது என்பதையும் மிகத் தெளிவாகத் திட்டமிட்டு ஒவ்வொரு செயலையும் கூனி செய்கின்றாள். அவள் உள்ளம் முழுவதும் நிரம்பி இருப்பது இராமன் முடிசூடக்கூடாது. அவன் இன்னல் பல கண்டு இறந்து போக வேண்டும் என்பதில் மிகத் தெளிவாக இருந்தாள்.

அதற்கு ஏற்ற வகையில் ஒவ்வொரு செயலையும் செய்து கைகேயியின் மனதை மாற்றுகின்றாள். இறுதியில் கூனி தான் நினைத்த செயலில் வெற்றி பெறுகின்றாள்.

பழிவாங்கும் உணர்வு உள்ளத்தில் பதிந்து விட்டால் எல்லா நிலையிலும் தன் செயலை செய்வதில் தீர்க்கமாக செயல்படும் என்பதையும் பிறர் சொல்வதை கேட்பதினால் வரும் தீங்கும் எப்படி அமையும் என்பதையும் கம்பர் 'கூனி' கதாபாத்திரத்தின் மூலம் நமக்கு உணர்த்துகின்றார். ●



நேரிழையாம் சீதை நெறிக்கற்பை நெஞ்சுருக
ஆரினி கம்பனைப்போல் ஆய்ந்துரைப்பார்? - பாரில்
கனியோ? கனியமுதோ? கற்கண்டோ? என்ன
இனியோர் கவியுலகில் ஏது?

பாவொன்று போதும் பசுந்தமிழின் பண்புக்கு
நாவொன்று போதுமோ நவில – பூவொன்றும்
நாமகளும் சிந்தை நனிமகிழ்வாள் கம்பனிடம்
பூமகளும் நிற்பாள் புரந்து

பேசுந் திறத்தையும் பீடுபெறா தாரையெலாம்
ஏசும் திறத்தையும் ஈந்திடுமே - வீசுந்தண்
தென்றல் எனவுவக்கும் செந்தமிழ்த்தாய் யீன்றபுகழ்க்
கன்றனைய கம்பன் கவி

— திருமுருக கிருபானந்த வாரியார்

# வசிட்டர்

*

பேராசிரியர் திரு. இரா. அர்ஜினன்

**முன்னுரை :**

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்னும் பொய்யாமொழியின் கருத்தை வலியுறுத்தி மக்கள் நல்லொழுக்கத்துடன் வாழ முக்கியமாக பிறன் மனை விரும்பக் கூடாத தன்மையை மக்களுக்கு எடுத்துரைக்க கவி சக்கிரவர்த்தியால் படைக்கப்பட்ட காவியமே கம்பராமாயணம்.

அயோத்தியா காண்டத்தில் மந்திரப் படலம் முதல் திருவடி சூட்டு படலம் ஈறாக பதின்மூன்று படலங்கள் உள்ளன. இங்கு குருவாக அறிவுரை பகரும் முனியாக, முக்காலத்தையும் உணர்ந்தவனாக, தம் கடமையை தன் அறிவிற்கேற்ற முறையில் செய்து வந்த கதாபாத்திரமாக விளங்குகிறார் வசிட்டர். அவரைப் பற்றி கூறுவது இக்கட்டுரையின் நோக்கம்

**வசிட்டர் சபையில் :**

இராமன் சீதையை மணந்தப்பின் அயோத்தியில் நடந்த தசரதனின் சபைக்கு வசிட்டர் விஜயம் செய்வதிலிருந்து அவரது பங்கு அயோத்தியா காண்டத்தில் இடம் பெறுகிறது.

தசரதன் செய்யும் அரசாட்சியை நன்கு செலுத்தும் ஒரு தெய்வம் என்னும்படி பிரமன், திருமால், சிவன் என்னும் மும்மூர்த்திகளோடு நால்வராக எண்ணத்தக்க வசிட்ட முனிவர் தசரதன் சபைக்கு வந்தார் என சம்பர் வசிட்டரை புகழ்கிறார்.

"பூ வரு பொலன்கழல் பொருவில் மன்னவன்
காவலில் ஆணையின் கடவுளாம் என
தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள்
மூவரில் நால்வராம் முனிவந்து எய்தினான்".

தேவர்களைப் போல முக்காலத்தை உணர்ந்தவனாக, தர்மம் தழைக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவனாக இருந்தான். தசரதன் ஆட்சியில் அவனுக்கு ஆணையிடும் ஆற்றல் உடையவன் வசிட்டன் என்று வசிட்டனின் ஏற்றம் கூறப்பட்டது. அவன் அமைச்சருள் முதல்வனும், புரோகிதனும், குலகுருவும் பிரம்ம இருடியுமாகத் திகழ்ந்தான்.

அரசபைக்கு வந்த அமைச்சர்கள் மற்றும் பலர் அரச சபைக்கு செல்வதற்குரிய முறைப்படியே அணுகி, முதலில் முடிவில்லாத அறிவினையுடைய வசிட்ட முனியைப்

பணிந்து, பின்னர் தம் அரசனாகிய தசரதனை கைக்கூப்பிக் கும்பிட்டு தம் இருக்கைகளில் ஏறி மன்னன் அருட்பார்வையைப் பெற்றனர். வந்தவர்கள் குனிந்து நிலம் தொட்டு வசிட்டனை பணிகின்றனர். நின்றவாரே தசரதனைக் கைகூப்பி தொழுதனர். இதனின்று வசிட்டனின் பெருமை வெளிப்படுகிறது.

**இராமன் குறித்து வசிட்டர் கூறுதல் :**

தசரதன் தான் துறவு கொண்டு இராமனுக்கு முடிசூட்டுகிறேன் எனக் கூறியது கேட்டு வசிட்டர் தசரதனை நோக்கி அரசனே! நின் முன்னோர் எத்தனையோ பேர் அரசாட்சி செய்து பெருமையடைந்தனர் என்றாலும் இராமனைப்போல பெருமையடைந்தவர் யாரும் இல்லை என்று புகழ்ந்து இனி நீ செய்ய வேண்டிய கடமையும் தருமமும் நீ சொன்னதே ஆகும் என்று பாராட்டினார்.

''தந்தை மகற் காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்''

என திருவள்ளுவர் தந்தை புதல்வனுக்குச் செய்யும் நன்மையாவது கற்றார் அவையின் கண் அவரினும் மிக்கிருக்குமாறு கல்வியுடையனாக்குதல் எனும் பாடல் இங்கு நோக்கத் தக்கது. இங்கு தசரதன் இராமனை கல்வியுடையவனாக ஆக்கி மக்களிடத்தில் தலைவனாகவும் ஆக்க விரும்பும் செயல் நன்று என்று வசிட்டன் புகழ்கிறான்.

மற்றும் இராமன் குறித்து பரம்பொருளே தன் திருவுள்ளத்தால் இவ்வுலகிற்கு வந்து இராமனாக பிறந்துள்ளான் எனவும் அந்த ஆற்றல் மிக்க இராமன் எல்லாப் பொருள்களையும் நோக்குவித்து காப்பாற்றி இறுதியில் அவற்றை முற்றும் அழிக்கும் திறனுள்ள பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளின் செயல்களும் திருத்தமடைய திருத்துவன் என்றான்.

''முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்(கு)
இறைஎன்று வைக்கப் படும்''

எனும் பாடல் வரிகள் இங்கு நோக்கத்தக்கது.

அதோடு அழகினை தோற்றுவிக்கும் சீதாதேவியும், மண்மடந்தையும் இனிய உயிர் போன்ற துணைவன் இவனே என்று கருதுகின்ற இராமன் உன் உயிர்க்கு எவ்வாறு நல்லவனாக இருக்கின்றானோ அவ்வாறே நிலைபெற்ற எல்லா உயிர்களுக்கும் நல்லவனாய் இருக்கின்றான் என்று இராமன்

''தமக்கென முயலா பிறர்கென வாழும் பண்புடையவன்''

என்பதைக் கூறுகிறார்.

இராமனுடைய நாமத்தைக் கூறுவதால் துன்பம் நீங்கி, புண்ணியம் விளையும் என்று கூறுகிறார். மற்றும் பெரும் கீர்த்தியுடைய சானகியோ என்றால் பொறுமையில் நில மகளினும் சிறந்தவள். [அகழ்வாரை தாங்கும் நிலம் போல], அழகில் திருமகளையும், அறிவில் கலைமகளையும், ஆற்றலில் கலைமானை வாகனமாகக் கொண்ட துர்க்கையையும்விட சிறந்தவள். அவளுக்கு கணவனான இராமனோ கண்ணைவிடச்

சிறந்தவன். அவனை படித்தவரும், சிறிதும் படிக்காதவரும் உடம்பு இயங்குவதற்கு காரணமான உயிரை விடவும் விரும்புவர். மக்களும், தேவரும், நரகரும் ஆகிய நிலை பெற்ற உயிர்களுக்கு கேடு வராமல் பாதுகாத்து அருள் புரிபவர் இராமனைப் போலச் சிறந்தவர் மற்றொருவர் இல்லை. இராமனது சிறப்பு அத்தன்மையதாக இருத்தலில் உனக்கும் செய்தற்குரிய செயலை ஆராய்ந்தால் தெய்வத் தன்மையுடைய துறவறம் மேற் கொள்வதைவிட மற்றொரு செயல் இல்லை என்று வசிட்டர் கூறினான்.

**தசரதன் கூற்று :**

இதை கேட்ட தசரதன் வசிட்ட முனிவனுடைய சிறந்த தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கி என் தந்தை போன்றவனே, என் இறைவனாகிய உனது பேரருளால் இம்மண்ணுலகினைப் போற்றிக் காத்தேன். அந்த இராமனுக்கு இவ்வாறு அரசு புரிதல் தகுதியுடையதாகும் எனக் கூறினான்.

**இராமன் செயல் :**

தசரதன் ஆணையால் சுமந்திரனால் அழைக்கப்பட்டு வந்த இராமன் தொன்று தொட்டுவரும் முறைப்படி பெரிய தவ முனிவனாகிய வசிட்டனைத் தொழுதுபின் தயரத மன்னன் திருவடிகளை வணங்கினான். பின்பு தசரதன் இராமனிடம் அரசாட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டும் என்று கூறியப் பின்னர், அரசர்களுக்கு ஓலை அனுப்பி பின்பு வசிட்டனை நோக்கி சித்திர வேலைப்பாடமைந்த பெருமையுடைய முடியை இராமனுக்கு நன்றாகச் சூட்டுதற்கு வேண்டுவனவற்றை முறைப்படி அமைத்திடுக என்று சொன்னான். அது கேட்ட வசிட்டர் மகிழ்ந்து தேரில் ஏறி வேதியர் கூட்டத்தோடு சென்றார்.

**வசிட்டன் இராமனுக்கு உறுதி கூறுதல் :**

முடிசூட நல்ல நாள் பார்த்தபின் வசிட்டரை இராமனுக்கு உறுதி கூறும்படி தயரதன் வேண்டினான். ஆசிரியனாக இருந்து கற்பித்த வசிட்டர் இராமனுக்கு உறுதி கூறினான். இராமனது அரண்மனைக்கு வந்த வசிட்டனை இராமன் வரவேற்றான். தளர்ச்சியில்லாத தவத்திற் சிறந்த புண்ணியனாகிய வசிட்டன் இராமனை நோக்கி உன் தந்தை நானிலம் அரசாட்சியை நாளைக்கு தருவான் என்று சொன்னான். பின் இராமனை நோக்கி நான் சொல்ல வேண்டிய நன்மைப் பொருள் ஒன்று உள்ளது அதை கவனித்துக் கேட்டு அழுத்தமாக பின்பற்றுவாயாக என்று இராமனுக்கு சொல்லத் தொடங்கினான்.

திருமால், சிவபெருமான், பிரமன், பஞ்ச பூதங்கள், சத்தியம் ஆகிய எல்லா வற்றையும் காட்டிலும் மேம்பட்டவர் வேதியர் ஆவர். அவர்களை பேண வேண்டுமென்று கூறினான். மற்றும் அந்தணர்களின் கடமையைக் கூறி அத்தகையோரின் திருவடி இணைகளை முடிமேல் சூடிக் கொண்டு புகழ்ந்து துதித்து இனியமொழிகளைக் கூறி அவர்களை உபசரித்து அவர்கள் ஏவிய பணிகளை இருந்து செய்வாயாக என்று அந்தணரிடம் நடந்து கொள்ளும் முறையை கூறினார்.

ஆற்றல் படைத்த முத்தேவரும் தெளிந்த நல்ல தருமமும் நேரிய மனமும், இரக்கமாகிய கருணையும், நன்மையை விளைவிக்கும் என்றும் கூறினார். மற்றும் சூது முற்பட வேட்டம், கடுஞ்சொல் மிகுதண்டம், சூது பொருளீட்டல்கள், காமம் ஆகிய பெருங்

கேட்டினை விளைவிக்கும் செயல்கள் உன்னிடம் இல்லை. ஆயினும் குற்றம் என்று சொல்லப்படும் அனைத்தையும் ஒருவன் அடைவதற்கு சொல்லப்பெறும் மூலக் காரணம் என்று ஆய்ந்து அறிவாயாக.

யாரோடும் பகை கொள்ளாமல் இருத்தல், சண்டை இல்லாமல் போகும், புகழ் குன்றாது நிறையும், அவனுடைய படை கெடாது என்றும் கூறினார். மற்றும் நாள் தோறும் வருவாய் பெருக்கி, ஐம்புலன்களை அடக்கி வலிமையும் மன உறுதியும் உடையவராய் இருக்க வேண்டும் என்றார்.

மும்மூர்த்திகளைப் போல தோள்வலி பெற்ற அரசராக இருந்தாலும் அமைச்சர் சொல்வழி அரசாட்சியைச் செய்தல் ஆண்மையாகும். எல்லாவற்றையும் விட மேம்பட்டு நிற்பது அன்பே ஆகும். மற்றும் அறத்தை விட்டு விலகாது அருளினும், சத்தியத்திலும் நிலைபெற்று நின்றவற்க்கு யாகங்கள் செய்ய வேண்டியதில்லை என்றும் கூறினார். நல் அரசன் இன்சொல் கூறுபவனாகவும், கொடைத்திறன் உள்ளவனாகவும், ஆராய்ச்சி உடையவனாகவும், முயற்ச்சி உடையவனாகவும், தூயவனாகவும், சிறந்தவனாகவும், வெற்றி உடையவனாகவும், ஆராய்ந்து அறியும் நேர்மையில் சிறிதும் அகலாதவனாகவும் இருத்தல் அவனுக்கு அழிவு உண்டாக்காது என்று கூறினார்.

> "இன் சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
> தான்கண் டனைத்திவ் வுலகு",

> "சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து
> ஒருபாற் கோடாமை சான்றோர்க் கணி".

எனும் குறட்பாக்கள் ஒப்பு நோக்கத் தக்சது.

மன்னன் நல்லொழுக்கத்திற்குப் படாதவகைகளை நீக்கி, நடுநிலைமையோடு அமைச்சர்கள் ஆராய்ந்துரைத்த பொரூதை கருதுபவனாய் இருக்க வேண்டும். மற்றும் முனிவர் கூறியத்தை சம்பாதித்து கொள்ளுதல் மன்னர்க்கு பெரும்படை ஆகும். பெண் களால் உண்டாகின்ற காமநோய் மட்டும் இல்லையானால் கெடுதி என்னும் சொல்லே இல்லையாகும். நரகத் துன்பமும் இல்லை என்று வசிட்டர் இராமனுக்கு அறிவுரைகளைக் கூறினார்.

**வசிட்டன் இராமனுக்கு சடங்குகள் இயற்றல் :**

மெய்ப்பொருள் உணர்வில் நெருங்கியவனாகிய வசிட்டன் திருமாலின் அம்சமான இராமனுக்கு பல ஏனைய நீதிகளை சொல்லி அறிவு கற்பித்து திருமாலினது திருக் கோயிலை சென்றடைந்தான். அரவணையில் அறிதுயில் அமைந்த அண்ணலைச் சென்றடைந்து நால்வேத முறைப்படி நன்மையுடைய தீர்த்தங்களால் நீராட்டி சடங்குகள் முடியச் செய்து தருப்பைப் புல்லைப் பரப்பி அதன் மேல் எழுந்தருளச் செய்தான். இவ்வாறு சடங்குகள் நிறைவேற்றப்பட்ட செய்தியை வசிட்டன் தசரதனுக்குத் தெரிவித்தான்.

**பரதனை அழைக்க சுமந்திரனை ஏவுதல் :**

மறுநாள் காலை பெரிய தவத்தைச் செய்த வசிட்ட முனிவன் இராமனுக்கு முடி சூட்டுவதற்கு மங்கலப் பொருட்களை பொருத்தமுற எடுத்துக் கொண்டு அந்தணர்கள் வேதம் ஓதி வர பழைய வாயில்களில் உள்ளவர்கள் நெருக்கத்தை நீக்கி விலகிக்கொள்ள

முடிசூட்டு மண்டபத்திற்கு எழுந்தருளினான். வந்தவர் கங்கையாறு முதலாக குமரியாறு ஈறாக உள்ள புண்ணிய தீர்த்தங்களின் மங்களகரமான நீரையும், நான்கு கடல்களின் நீரையும் குடங்களில் நிறைத்து வைத்து, அக்கினியால் செய்ய வேண்டிய ஓமம் முதலிய சடங்குகளுக்கு பொருந்திய எல்லாவற்றையும் தக்கவாறு செய்து வீர சிம்மாசனத்தையும் உரிய இடத்தில் அமைத்து மேலும் செய்ய வேண்டியவற்றையும் செய்தான். பிறவி நோய் நீங்கும்படி தவம் செய்து அந்நிலையில் வழுவாமல் நின்ற வசிட்ட முனிவர் சுமந்திரனை நோக்கி தசரத மன்னனை அழைத்து வரும்படி கூறினான்.

### தசரதனின் துன்ப நிலை அறிதல் :

கைகேயி வரம் பெற்றது முதலிய நிகழ்ச்சிகளை அறியாத வசிட்டனை அங்கிருந்த அரசர்களும், முனிவர்களும் கோசலையின் கூக்குரலுக்கான காரணம் அறிய அனுப்பி வைக்கின்றனர். இவ்விடம் வந்த வசிட்டன் மன்னவன் இறக்கவில்லை ஆனாலும் இனி சாவாமல் இருப்பவனும் இல்லை, நினைவு இழந்து மூர்ச்சித்தான் என்று தன் மனத்தில் கருதி துன்பத்தில் வருந்துபவளாகிய கோசலை, துயர்க்குரிய காரணத்தைச் சொல்லுதர்க்கு இயலாள் எனக் கருதி தன்னை முன் வந்து வணங்குகின்ற கைகேயியை, தாயே, சக்கர வர்த்தியின் நிலைக்கு காரணம் என்ன எனக்கேட்டு அறிந்து கொள்கிறான். காரணம் அறிந்த வசிட்டன் மன்னனை தன் கைகளால் மண்ணிலிருந்து தூக்கி, அறிவாளனே சோர்வடையாதே அந்தக் கைகேயி நின் அன்பு மகனாகிய இராமனுக்கு அரசாட்சியைத் தருவாள். அதனால் இவ்வருத்தத்தை இப்பொழுதே ஒழிப்பாயாக என்று பலமுறை சொல்லி வேண்டி நின்ற வசிட்டன் தசரதனுக்கு குளிர்ச்சியுடைய பனிநீரைக் கலந்து விசிறியால் மென்காற்று உண்டாகும்படி செய்து, இன்சொல் கூறி சோகம் தணிவிக்க மன்னன் சற்றே மூர்ச்சி தெளிந்து "இராமா, இராமா" என்று பிதற்றுகின்ற தயரதனுக்கு உயிர்ப்பு நிலை வந்தது. அதைக்கண்ட வசிட்டன், தூயனே! துன்பத்தை நீக்கிக் கொள்க, இராமனே இனி இந்நாட்டை ஆட்சி செய்வான். மாட்சிமை இல்லாத வார்த்தையாகிய வரத்தைக் கேட்ட கைகேயி தானே இராமனுக்கு அரசை திருப்பித் தருவாள். இராமன் அரசை மீண்டும் மேற்கொள்ளாது போவானாயின் நாங்களும் இருக்கப் போகிறோமோ, அதனால் மனம் அழியாதே, என்றான்.

### தயரதன் வசிட்டனை வேண்டுதல் :

ஆறுதல் மொழிகளை கூறிய வசிட்ட முனிவனை நோக்கி, தசரதன், ஆசார்யத் தலைவனே, கொடிய வினையுடைய யான் மேல் இறந்துபடுவதற்கு முன்னால் அந்த இராமனை முடிசூடும்படி செய்து காட்டுக்கு போவோம் என்று நினையாதபடி செய்து என் வாக்கும் இழிவாகிய பழி மேற்கொள்ளாதப்படி காப்பாற்றுவாயாக என கூறினான்.

"ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்"

எனும் சிலம்பு வரிகள் நோக்கத் தக்கது.

### வசிட்டன் அறிவுரையும், கைகேயி மறுத்தலும்

வசிட்ட முனிவன் கைகேயியின் முகத்தை நோக்கி பொன்னெனச் சிறந்தவளே இனி உன் மகனாகிய பரதனுக்கு அரசாட்சியையும் மற்றவர்களது உயிர்க்கு உயிர்ப் பையும் உன்னுடைய நாயகனான தசரதனுக்கு உயிரையும் கொடுத்து பழி நீங்கிய தூய்மை பொருந்திய புகழை அணிகலனாக அணிந்து கொள்வாய் என்றான்.

**கைகேயியின் கூற்று**

அரசன் சொன்ன சொல் தவறினாலும், நான் சொல்லிய சொல்லிருந்து தவற மாட்டேன் என்று கைகேயி கூறியதும், வசிட்டன் கைகேயியை நோக்கி கணவன் இறந்து படுவான் என்றும் உலகம் இக்கருத்தை ஏற்றுக்கொள்ளாது என்றும் இம்மையில் பழிச் சொல் நின்பால் தங்கி ஓங்கும் என்றும், மறுமைக்குப் பாவமும் இதனால் உண்டாகும் என்றும், உன் கருத்தை நீக்கி கொள்வாயில்லை. நான் சொல்லுகின்ற ஒன்றையும் உணர்வாய் அல்லை. நான் இனிமேல் உனக்கு சொல்கின்ற வார்த்தையில் என்னப் பயன். "நீ செய்யும் செயல் நேர்மையானது அல்ல" என்று கடிந்துரைத்தான்.

மற்றும் இரக்கம் இல்லாமல் தயரதனது உயிர் உடலை விட்டுச் செல்லும் துன்பத்தையும் அறியாமல் புண்ணிற் புகும் நெருப்போ, விடமோ என்று கருதும்படி பேசுகிறாய், நீ ஒரு பெண்ணா அல்லது நெருப்பா அல்லது என்றும் அழியாத பேயோ! நீ கொடியவள் இந்த மண்ணோடு உனக்கு என்ன உறவு இருக்கிறது, உனக்கு வர இருக்கும் பழியோ மிக வலிது என்றுகூறினான்.

"கணவன் உயிரும் கருதாமல் செயலிழைக்கும் பெண்களுக்கு இந்த உலகத்தோடு உறவு இல்லை" என்ற கருத்து வெளிப்படுகிறது. பெண்களுக்குக் கணவன்தான் உலகம் என்பதும் வெளிப்படுகிறது. மற்றும் புகழையும் உயிரையும் எரிக்கும் சுொடு நெருப் பானவளே! தயரதன் இராமனைக் காட்டிற்குச் செல் என்று சொல்வதற்கு முன்னாலேயே நீதான் சொன்னாய். அந்த இராமனோ உயர்ந்த காட்டில் கொடிய வழியில் போவதையோ, புகுவதையோ ஒழியான். உன்னைப்போல் கொடியவர்கள் இல்லை. இதைக்காட்டிலும் கொடிய செயல் வேறு ஒன்றும் இல்லை என்றும் கூறினான்.

இதனின்று இராமன் காட்டிற்குப் போவது உறுதி என்பதை வசிட்டன் உணர்ந் திருந்தான் என்பது புலனாகிறது.

**கைகேயி, பரதன் இருவரையும் தயரதன் துரத்தல் :**

கைகேயியைப் பலவாராக வைதுரைத்த தசரதன், வசிட்டனிடம் முனிவா, இவளை நான் கைவிட்டேன், அரசனாக முடி சூடுவதற்கு வருகின்ற இவள் மகனாகிய அந்தப் பரதனையும் என் மகன் என்று கருதேன். அப்பரதனும் எனக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களுக்கு உரியவனாகான் என்று கூறினான்.

**மன்னனைத் தேற்றி வசிட்டன் சொன்னது :**

ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் புலம்பி உயிரும் இன்றோடு போகப் பெற்றான் என்கின்ற நிலை அடைந்து அழிந்த தயரத மன்னனை நோக்கி, வேந்தே சோர்வு அடையாதீர் இராமனை இன்றைக்குக் காடு செல்லாதபடி நாட்டு மக்களோடு சேர்ந்து தடுப்பேன் என்றான். அதைக்கேட்ட தயரதன் வசிட்டன் போய்ச் சொன்னால் இராமன் வனம் போகாமல் தங்குவான் என்று கருதி, நினைவிழந்தான். அந்த அளவிற்கு வசிட்டன் மீது தயரதன் நம்பிக்கை யுள்ளவனாக இருந்தான். அதோடு கோசலையும், வசிட்டனோடு இராமன் திரும்பி வந்தாலும் வருவான் என்ற சொல் மேலும் வசிட்டனின் மதிப்பை உயர்த்துகிறது.

**வசிட்டன் அரசவை அடைதல் :**

இராமனது முடிசூட்டு விழாவினை முன்னிட்டு மன்னர்கள் நெருங்கியிருந்த அத்தாணி மண்டபத்துக்கு வசிட்டன் வந்து சேர்ந்தான். அவரைக் கண்ட வாள் உடைய

அரசர், வசிட்டனைப் பார்த்து மனம் தெளிந்த மாமுனியே எம் தந்தை போல்வனே, முடிசூட்டு விழாவின் தடையையும், அழுகை ஒலிக்கான காரணத்தையும் தெரிவிப்பாயாக என்றனர்.

### வசிட்டன் நடந்தவை உரைத்தல் :

கைகேயி இரண்டு வரங்களைத் தசரதன்பால் பெற்றுக்கொண்டாள். ஒன்றால் இராமன் காட்டிற்குச் செல் என்று சொல்ல அரசனை உடன்பட வைத்தாள். இன்னொன்றால் பரதன் இப்பூமியைக் காப்பாற்றும் அரசுரிமையை எய்தியவன் ஆனான். இராமன் ஒருமுறையாகக் காடு சென்று தங்குவான் என நடந்த நிகழ்ச்சியைக் கூறினான்.

### வசிட்டன் சுமித்திரை மாளிகையை அடைதல் :

அரச சபை மண்டபத்திலிருந்து இராமனிடத்து அன்புடையோனாய் சுமித்திரை மாளிகையின் கண் அடைந்தான். இராம இலக்குவர்கள் தலையால் வணங்க வசிட்டனும் துன்பம் என்னும் பெரிய கடலில் இறங்கத் தொடங்கினான். வசிட்டன் இராமஇலக்குவர்களின் முகத்தையும், மனத்தையும், கண்ணாலும், நெஞ்சத்தாலும் நோக்கினான். மேல் ஏறிய துயரத்தால் தன்னையும் மறந்தான். இவ்வெவ்வினை கைகேயி கொடுக்க அவளால் உண்டாகியதும், அன்று வேறொரு வகையில் சத்துவகுண வடிவனாகிய இராமன்பால் வரக்கடவதும் அன்று, எந்தச்செயல் இப்படி நடைபெற்றதோ? யாருடைய மனக்கருத்தால் நடந்ததோ, பிற்காலத்தில் நன்கு விளங்கும் என்று மனத்துள் சொல்லிக் கொண்டான்.

### வசிட்டன் இராமனைத் தடுத்தல் :

இராமனை நெருங்கி வந்து நீ அரண்மனையை விட்டு நீங்கி உயர்ந்த மலை வழியில் செல்லக் காணுவான் எனில், தசரதன் வாழமாட்டான் என உரைக்க, இராமன் முனிவனை நோக்கிக் கட்டளையைச் சிறமேற் கொண்டு செல்தல் எனது கடமையாகும். அத்தயரதனது துன்பத்தைப் போக்கி அகற்றுவித்தல் உனது கடமையாகும். இது நீதியும் ஆகும் என்பதிலிருந்து இராமன் வசிட்டனிடம் வைத்துள்ள நம்பிக்கை வெளிப்படுகிறது. இராமன் கூறியது கேட்ட வசிட்டன் இராமனை நோக்கி எல்லையில்லாக் காட்டைச் சேர்வாய் என்று உன்னைப் பார்த்து அரசன் சொன்னானில்லை, அந்த வார்த்தையைச் சொன்ன கைகேயிக்குத் தசரதன் ஆராயாமல் இந்த வரத்தைத் தருவேன் என்று ஏற்புக் கொண்டது உண்டு, அவ்வளவே, என்று கூறினான். அதற்கு இராமன் இதற்கெல்லாம் சாட்சியாக இருந்த நீ இதனை விளக்குகிறாயே என்று வசிட்டனை நோக்கிக் கூறினான். இதைக் கேட்டு ஒரு வார்த்தையும் வசிட்டன் கூறவில்லை. பின் இராமன் வசிட்டனை வணங்கி அரண்மனை மதிலின் வாயிலில் போய்ச் சேர்ந்தான்.

### சுமந்திரனிடம் இராமன் கூறியது :

சுமந்திரனிடம் பலவற்றைக் கூறிய நகர் நீங்கிய இராமன் சுமந்திரனை நோக்கி நீ வசிட்டனை அனுகி, நிரம்ர என் வணக்கம் முதலிய வார்த்தைகளைச் சொல்லி அவ்வசிட்ட முனிவனோடு என் தந்தையை அடைந்து என் மனக்கருத்தை தெரிவிப்பாயாக என்று சொன்னான். அதோடு வசிட்டமுனிவனைக் சொண்டு நெறியில் நின்று அந்தணர்களுக்கும், தேவர்களுக்கும் நன்மையான செயல்களைச் செய்வாயாக என்று என் தம்பி பரதனுக்குச் சொல்லி என்னைப் பிரிதலால் உளதாகும் தனிமைத் துன்பத்தையும் நீக்குக என்று இதமாகச் சொல்வாய் என, சுமந்திரன்பால் இராமன் செய்திகள் கூறி அனுப்பினான்.

**சுமந்திரன் வசிட்டனைக் காணுதல் :**

ஐந்து நாழிகைப் பொழுதில் அயோத்தி நகரத்தை அடைந்து வசிட்டனின் பாதத்தில் வணங்கினான். வசிட்ட முனிவர் வனத்தில் நடந்தவையெல்லாம் கேட்டறிந்து மனத்தில் துக்கம் கொண்டு வருந்தி இனி வரப்போவதை எல்லாம் உணர்ந்தவனாய் ஐயோ ! அரசன் இறந்துபோவான் என்றான். பின் வசிட்டன் சுமந்திரனோடு தயரதனது அரண்மனைக்குப் போனான். திரும்பி வந்த வசிட்டனைக் கண்டு தயரதன் மன மயக்கம் நீங்கியவனாய் இராமன் திரும்பி வந்தானோ என்றான். அதற்கு முனிவன் வரவில்லை என்று சொல்ல முடியாதவனாய்ச் சும்மா இருந்தான். முனிவன் முகம் இராமன் வந்திலன் என்பதை உணர்த்தியது. அதனால் அரசன் சோர்ந்தான்.

**சுமந்திரனால் செய்தி அறிந்து வசிட்டன் வந்து வருந்தல் :**

சுமந்திரன் தயரதன் இறப்பைத் தெரிவிக்க அங்கு வந்து, அரசன் துடிக்கும் காட்சியைக் காணச் சகியாமல் அப்பால் சென்ற வசிட்ட முனிவன் ஊழ்வினை செய்த செயலை உள்ளத்தாலும், கண்ணாலும் நோக்கி வருந்துவான் ஆனான். அங்கே வந்த வசிட்டன் வரத்தைக் கொடுத்து மகனைப் பிரிந்த கொடுமையைத் தயரதன் நீங்கினான் என்று நினைத்து நினைத்து மனம் தளர்பவனாய் வருந்தினான்.

பின் தயரதன் இறந்த பின்னர் செய்தற்குரிய கடமைகளைச் செய்தற்கு உரிமையுடைய குமாரர்கள் இங்கே இல்லை. கைகேயியின் மகனாகிய பரதன் அயோத்திக்கு வந்து சேர்ந்த பிறகு செய்து முடிப்போம் என்று கருதி தயரதனை எடுத்துக் கடல்போல் மிகுந்த தைலத்தினிடத்தில் கொண்டு சேர்த்தான். வசிட்டனிடத்தில் தயரதன் பரதன் உரிமைக்கு ஆசான் என்று கூறியிருந்தும் வசிட்டன் பரதனுக்காகக் காத்திருக்கிறான். ஏனெனில் தற்போது பரதனே கோசல நாட்டுக்கு அதிபதி. சக்கரவர்த்தி வராமல் அரசாங்கம் சம்மந்தமான எதுவும் வேறு யாரும் செய்ய இயலாது என்பதும் அடுத்து செயற்குரிமை படைத்தவர் சத்துருக்கனன் ஆயினும் பரதன் வராமல் சத்துருக்கனன் வரமாட்டான் என்பதும் கருதியே வசிட்டன் அவ்வாறு கூறினான் என்பதும் உய்த்துணரப் படுகிறது.

பின் தூதுவர்க்கு ஓலை கொடுத்து ஏவி பரதனை அழைத்து வருக எனச் சொல்லி அனுப்பினான். ஆனால் கடிதத்தில் கோசல அவலங்கள் ஏதும் கூறவில்லை. இதுதான் வசிட்டன் இராஜதந்திரமோ! பின்பு சேனாதிபதியருள் ஒருவனாகிய சுமந்திரனை இப்பொழுது செய்வதற்குத் தகுந்த செயல்களைச் செய்து நாட்டை உன்னிப்பாகக் கவனித்துக் கொள்க என்று சொல்லி, தனது தருமத்தை நடத்துவதற்குப் பொருந்திய தவச்சாலையை அடைந்தான். பின்னர் உண்மை உணர்ந்த நகரினர் வருத்தத்தை வசிட்டன் சொல்லுவதற்கு முடியாத பல சமாதானங்களையும் சொல்லி மக்கள் துடிப்பைப் போக்கினான்.

**சத்துருக்கனன் கோசலையை வீழ்ந்து வணங்கலும், வசிட்டன் வருதலும் :**

அயோத்தி நகரம் வந்த சத்துருக்கனன் நினைக்க மனம் கரைந்து கரைந்து அன்பு மிகுந்த தாயாகிய கோசலையின் திருவடிகளில் விழுந்து பரதன் சொல்லிய தன்மை போலவே தொழுது அழுது சொல்லி மயங்கினான். இத்தகைய சமயத்தின்கண் வசிட்ட முனிவன் அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான்.

**பரதன் வசிட்டனை வணங்கல் :**

அயோத்தி நகரம் வந்த பரதன் அங்கே வந்த வசிட்ட முனிவனின்

திருவடிகளில் விழுந்து என் தந்தையாகிய தசரதன் எவ்விடத்தான்? சொல்வீராக என்று மனம் கெட்டு மயங்கினான். சொல்லுவதற்கு வகையறியாத அந்த வசிட்டனும் பரதனைத் தழுவி அழுதான். பின்னர் தந்தைக்கு நீர்க்கடன் செய்யச் செல்க என்று கோசலை கூற, பரதன் கோசலையின் திருவடிகளை வணங்கி வசிட்டனோடு சென்று தன் உயிரை அர்ப் பணித்து அந்த தருமத்தைக் காப்பாற்றிய தயரதனது திருவுருவத்தைப் பார்த்தான்.

**கடன் செய்ய எழுந்த பரதனை வசிட்டன் தடுத்துரைத்தல் :**

தந்தைக்கு ஈமக்கடன் செய்க என்று ஈமப் பள்ளியில் இருந்தோர் சேட்டுக் கொண்ட சமயத்தில் கடன் செய்ய எழுந்த பரதனை வசிட்ட முனிவன் தடுத்து, தயரதன் நின் அன்னை செய்த தீமையால், நெருங்கிய துன்பத்தால் நின்னையும் உயிரோடிருந்த அப்போதே மகன் அல்லன் எனக் கைவிட்டு இறந்தான். அதனால் நீ உரிமைக்கு ஆகாய் என்று கூறினான்.

> "மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும் மகன்
> என்று உன்னேன் முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு"

எனும் பாடல் வரிகள் நோக்கத் தக்கது.

வசிட்டன் சொல் கேட்ட பரதன், அஞ்சி நடுங்கி மூர்ச்சித்தான். பின் வசிட்டனை நோக்கி, தாமரையில் தோன்றிய பிரமதேவனது புதல்வனாகிய வசிட்டனே! சூர்யகுலத்து முன்னோர்களாகிய குற்றமற்ற அரசர்கள் தாம் செய்த அறத்தின் முறைமையால் தேவர் களாயினர். நான் பிறந்து சிறுவனாக இருக்கும்போதே வீணாகப் போய்விட்டபடி என்னே! என அழுதான்.

**வசிட்டன் சத்துருக்கனனைக் கொண்டு இறுதிக்கடன் செய்வித்தல் :**

நால்வேத வழியில் தான் நிலைப்பெற்று நின்று எல்லாவற்றையும் செய்கின்ற தன்மையுடையவனாகிய வசிட்டன் மனம் வருந்தித் துயரில் மூழ்கியுள்ள பரதனுக்குப் பின் பிறந்த தம்பியாகிய சத்துருக்கனனால் அப்பொழுது தயரதனுக்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்குகளை செய்து முடித்தான்.

**வசிட்டனும் மந்திரக் கிழவரும் பரதனை வந்து அடைதல் :**

எய்தன எய்தற்பாலதாய சிறந்த பெருந் தவத்தைச் செய்து முடித்த வசிட்டன் தயரதனுக்குரிய சடங்குகள் முழுவதும் நிரம்புமாறு செய்துதவி முப்புரிநூல் அணிந்த வேதியர் அனைவரும் தன்னைத் தொடர்ந்து வர, பரதன் அரண்மனையில் தோன்றினான்.

அரச குலத்தில் மரபு முறைகளை ஆராய்ந்து உணர்ந்த, வேத வழியில் செய்யப் படும் தவங்களை செய்துள்ள, வேதத்தில் சிறந்த வசிட்ட முனிவனும் பரதன் உள்ள அவ்விடத்தில் இருக்கின்றார் என்றறிந்து மந்திரக் கிழவர்கள் விரைந்து அரசவைக்கு வந்து நெருங்கி அன்பினால் இரங்கும் மனம் உடையவராய்ப் பரதனை வணங்கினான்.

**சுமந்திரன் குறிப்பாக முனிவனை நோக்குதல் :**

வசிட்ட முனிவனும், மந்திரக் கிழவரும் அறிஞரும் சூழ இருந்தபோது அரசர்க் குரிய சிறந்த பொருள்களை நன்கு உணர்ந்து நிறைவேற்றும் கொள்கைப் பிடிப்பு உடைய அறிவால் நிறைந்த மனம் உடைய பொன்னால் இயன்ற பெரிய தேரைச் செலுத்தலில்

திறன்வாய்ந்த சுமந்திரன் எனும் பெயருடையவன், எல்லாம் முழுதுணர்ந்த வசிட்ட முனிவனை தன் மனக்கருத்தை வாயில் உறைக்க வேண்டாது அது தோன்றும்படி நேரே பார்த்தான். அதாவது பரதனை அரசு ஏற்கச் செய்யும் தன் கருத்தைக் குறிப்பால் பார்வையால் அறிவித்தான் என்பதாகும். சுமந்திரனின் கருத்தை அறிந்த வசிட்ட முனிவன் இந்த அரசாட்சியைப் பாதுகாப்பாய், இத்தரணி தாங்குதல் நின் கடனாகும் என, பரதனுக்கு விளங்கும்படி எடுத்துரைக்கலானான்.

**வசிட்ட முனிவன் பரதனுக்கு அரசின் சிறப்பை உணர்த்தல் :**

குற்றமற்ற குணத்தை உடைய பரதனே! அந்தணர், முனிவர், முதிர்ந்த பெரியோர், அரசர்கள், உன்னிடத்து வந்து சேர்ந்த செயல், அரச நீதியையும், அரச தர்மத்தையும் நிலை நிறுத்தவே. ஆகவே இச்செயலை மனதின் கண் நினைத்துக் கொள் வாயாக. அறம் என்று சொல்லப்படுகின்ற ஒப்பற்ற ஒரு பொருளை உலகிற்குத் தந்து நிலை நிறுத்தல் மிகவும் அருமையான செயல் என்பதனை அறிவாய். இவ்விடத்தில் இவ்வறம் இம்மை, மறுமை ஆகிய இரண்டையும் பொருந்தியதாகும். இவ்வறம் தெளிவு பெற்ற மனம் உடைய மேலோர் செய்யும் செயலாகும். ஆகவே ஆராயும் பொழுது வளமை பொருந்திய வன்மையான வாளையுடைய அரசனைப் பெறாத உலகம் விரும்பப் படுகின்ற சூரியன் இல்லாத பகலையும் விண் மீன்களோடும் தெளிந்த வெண்மையான சந்திரன் இல்லாத இரவையும் உள்ளே பொருந்திய உயிர் இல்லாத உடலையும் ஒக்கும்.

மற்றும் தேவலோகத்திலும் பிறர்க்குத் தீமையே செய்து திரிகின்ற பெருவலி படைத்த அசுரர்கள் தங்கியுள்ள நாடுகளிலும் எவை எவை உலகம் என்று பெயர்பெறுமோ அவைகள் எல்லாம் தம்மைக் காக்கின்ற அரசர்கள் இல்லாமல் இருத்தலை பார்த்திலோம். ஆகவே முறைமையை நன்கு ஆராய்ந்து ஒரு படித்தாக இறுதிவரை பார்த்தால் பிரமனால் படைக்கப்பட்டவையாகிய நிலத்திலும், விண்ணிலும் நிறைந்து விளங்கும் பேரியல்போடு நிலைத்து நிற்பன, இயங்குவன, தலைவரைப் பெற்றிராத பொருள்கள் எவையும் காண்கிற்றிலோம். மற்றும் சிறந்த புகழைப் பெற்ற உன் முன்னோர்கள் இன்று வரை யிலும் இந்தப் பூமியைக் காத்தார்கள். இப்போது தமக்கொரு துன்பம் நீங்கிப் பாதுகாப் பார் இல்லாமையால் கடலின் கண் உடைந்த கப்பல் தத்தளிப்பது போன்றதாகும்

மற்றும் பரதனே உன் தந்தையாகிய தயரதனோ இறந்தான். உன் தமையனாகிய இராமனோ கானகம் புகுந்தான். இந்த அரசு உனக்குக் கிடைத்திருப்பதும் உன் தாயாகிய கைகேயியின் வரத்தால் ஆகும். நீ அழிவற்றதாகிய இந்தக் கோசலத்தரசை ஏற்று நடத்துக. நீ அரசு ஏற்பது எங்களது எண்ணம் என்று ஆராய்ந்து சொன்னான்.

வசிட்டன், வரவேண்டியவர்கள் எல்லாரும் வந்து சேர்ந்து இராமனைச் சுற்றி இருந்த பொழுதில் துன்பம் அருந்திய வெற்றி நம்பியாகிய இராமனது முகத்தைப் பார்த்து இராமனே? பொருந்திய நிலைபெற்ற உயிர்களுக்கு மரணம் ,சனனம் இரண்டும் இயல்பே. துறவற நெறியில் சேர்தலும், அறத்தாற்றின் இல்வாழ்க்கை நடத்தலும் அல்லாமல் வெளியே வேறு ஒரு துணையும் இல்லை என்கின்ற செய்தியை மறந்து விட்டாயோ எனவும், நிலையில்லாதனவாகிய பிறப்புகள் அளவில்லாத கோடிக்கணக்கானவை. அவை இன்பத்தாலும், துன்பத்தாலும் உண்டாகப் பெற்றவை. நூல்களில் கூறப்பெற்றவற்றை நன்கு பார்த்து அறிந்த பின்பு கொடிய யமனிடத்தில் கண்ணோட்டம் இருக்கின்றது என்று

கருதக் கூடாது எனவும், பிறக்கும்போதே இறக்கும் தன்மை உடைய உயிர் அறுபதாயிரம் ஆண்டுகள் புகழோடு ஆண்டு பின்னர் இறப்பதற்கு மகிழ வேண்டுமே அன்றி வருந்துதல் கூடாது என்றான். மற்றும் எல்லாவற்றுக்கும் மூலப்பொருளாய் வந்து அருளுகின்ற முப்பரம் பொருள் ஆனாலும் காலதத்துவம் என்கின்ற ஒரு வலையைக் கடத்தல் இயலாது. மற்றும் ஐம்பூதங்களும் அழியும் என்ற பொழுது இவற்றைவிட எளிய முதற் பொருளாகிய உயிர் அழிந்து வருவதற்கு வருந்துதல் வேண்டாம் என்றான். மற்றும் புண்ணியம் என்கின்ற நல்ல நெய்யில் காலமாகிய வலிய திரியில் விதி என்கின்ற நெருப்பினால் கருத்தோடு ஏற்றப்பெற்ற உயிர் வாழ்க்கை என்கின்ற தீபம் நெய்யும், திரியுமாகிய புண்ணியமும் விதியும் ஒழிந்தால் அணைந்து போவதற்கு சந்தேகம் இல்லை.

உன் தந்தையும் திருமால் உலகத்தில் சென்று சேர்ந்து ஒளி பெற்றான். ஆகவே மகனாகிய நீ தந்தைக்குச் செய்வதாகிய நீர்க்கடன் எல்லாம் செலுத்துவாயாக என்றான்.

**நீர்க்கடன் முடித்த இராமனுக்கு வசிட்டன் கூறுதலும் இராமன் உரையும் :**

இராமனை ஆட்சிப் பொறுப்பை ஏற்குமாறு கேட்ட பரதனுக்கு இராமன் தன் கருத்தினைக் கூற, பின் பரதன் அதற்குப் பதில் உரைக்கத் தொடங்கிய போது வசிட்டன் பரதனை விலக்கி மொழிகிறான்.

வள்ளல் தன்மையுள்ள இராமனே என அழைத்து முன்னைய சூரிய குலத்தார்களுடைய செயல்களை எல்லாம் ஐயம் திரிபின்றி அகத்தே உணர்ந்து சொல்லத் தொடங்கினான். சூரிய குலத்தில் தோன்றிய அரசர்களுள் முறைமை தவறியவர் இன்று வரையிலும் இல்லை. நான் உன்னை வளர்த்து, கல்விகள் மிகப்பல கற்பித்து இன்று என்னுடைய கட்டளையை மறுக்காமல் உனக்கு வலிமையுள்ள நாட்டினை அடைந்து நன்றாகக் காப்பாற்று என்று கூறினான், தன்னை அரசாட்சி செய்யுமாறு வேண்டிய வசிட்டனுக்கு, இராமன், பெரியோர்கள், ஆசிரியர், தாய், முதலியோர் இவர்களிடத்தில் ''செல்வேன்'' என்று சம்மதித்தப்பின், அந்த வார்த்தையை முடியாது என்று மறுக்கத்தக்க தன்மை இல்லை என்று கூறினான். இதைக் கேட்ட வசிட்டன் இனிமேல் சொல்லுதற்குரிய ஒரு நீதியை அறிந்தோமில்லை என்று கருதிப் பேசாமலிருந்தான். பின் அவ்விடம் சென்ற அனைவரும் நாட்டிற்குத் திரும்பினார்.

**முடிவுரை :**

இங்ஙனம் வசிட்டமுனி அயோத்தியாக் காண்டத்தில் தசரதன் சபையில் தோன்றி முடிசூட்டவிருக்கும் இராமனுக்கு அறிவுரை நல்கி, இராமனைக் காட்டிற்கு அனுப்பிய கைகேயிக்கு அறிவுரை நல்கியும், தசரதனுக்கு 'ஆறுதல் மொழி கூறியும், காட்டிற்குச் செல்லவிருந்த இராமனைத் தடுக்க முயற்சித்தும், பரதனைக் கேகய நாட்டிலிருந்து வரச் வழைத்தும், தைலத்திலிருந்து எடுத்த தசரதனுக்கு ஈமச்சடங்குகளை பரதன் செய்யாமல் தடுத்துச் சத்துருக்கனனைச் செய்ய வைத்தும், பின் பரதனோடு இராமனை அழைத்து இராமனை ஆட்சிப்பொறுப்பை ஏற்கும்படி வேண்டியும், அதை இராமன் ஏற்காததால் அயோத்திக்கு திரும்பும் வசிட்டனின் பங்கு அயோத்தியா காண்டத்தில் ஒரு குலகுருவாக இந்திரியங்களை வசப்படுத்தியவனாக முக்காலத்தையும் அறிந்தவனாக, நான்கு வேதங்களை உணர்ந்தவனாக, இராஜ தந்திரியாக விளங்கினான் என்பதில் ஐயம் ஏதும் இல்லை.



# "துரிசு இலாத் திருமனத்தான்" பரதன்

✵

பேராசிரியர் திரு. க. முருகேசன்

முன்னுரை

உலகம் முழுவதையும் தன் புகழால் அகப்படுத்திக் கொண்ட ப்க்தி வெள்ளப் பெருக்காக விளங்குவது இராமாயணம், வற்றாத நதிகளைப் போன்று அந்நதிகளின் வளத்தைப் போன்று இப்பாரத மண்ணில் இராமாயணம் செழிப்பாகவும் சிறப்பாகவும் விளங்கிக் கொண்டிருக்கின்றது. மண்ணின் பண்பாட்டுக் காட்சியாகவும் நல்வழிகாட்டியாக நெறிப்படுத்தும் கலங்கரை விளக்கமாகவும், மேகக்கூட்டங்களை விலக்கி வைத்துவிட்டுத் தண்ணொளியைத் தான் வியாபிக்கும் வெண்மதியாகவும் திகழ்கின்றது இராமாயணம். ஆறு காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள இக்காவியத்தில் அயோத்தியா காண்டம் இரண் டாவது காண்டமாகும். இறைவனை நினைந்து நினைந்து மந்திரத்தில் தொடங்கிப் போற்றினால் அதன் பயனாக அவனது திருவடிகளைச் சரணடைய முடியும் என்ற கருத்தினைப் புலப்படுத்தும் வகையில் இக்காண்டம் அமைக்கப்பட்டுள்ளது.

அயோத்தியா காண்டத்தில் இடம்பெற்றுள்ள பாத்திரங்களில் பரதன் இன்றியமை யாத இடத்தைப் பெற்றுள்ளான். மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் கூனியின் வாயிலாக பரதன் காட்டப்படுகின்றான். வயதில் மூத்தவனுக்கு அரசுரிமை என்பதனை வைத்து, ''தயரதன் இருக்கும்பொழுதே அவனை விட இளையவனான இராமனுக்கு மணிமுடி சூட்டிவைக்கப் படும் என்ற போது இராமனைவிட இளையவனான பரதனுக்கு ஏன் மணிமகுடம் அளிக்கப் படக்கூடாது'' என்று கூனி வினவுமிடத்துப் பரதன் சுட்டப்படுகின்றான். மணிமகுடம் தரித்து அரசாள்வதற்குத் தகுதி பெற்றிருந்தாலும், அரசின் மீது கடுகளவும் பற்று வைக்கா தவன் பரதன். இதுவே பரதனுக்குப் பெருஞ்சிறப்பாகக் கூறப்படுகிறது.

'பள்ளிபடைப் படலத்தில்' தூதுவர் சென்று பரதனைச் சந்திக்கின்றனர். அப்போது தன் தந்தை திருமுடியோனின் நலத்தை வினவிப் பின் இராமபிரான், இலக்குவன் ஆகி யோரின் சுகத்தை வினவ, அவர்களும் நலம்தான் என்ற உரையைக் கேட்டவுடனே தாழ் தடக் கைகளைத் தூக்கித் தன் தலைமேல் வைத்து இராமலக்குவர்கள் உள்ள திசையை நோக்கி வணங்கினான் என்கிறார் கவிச்சக்கரவர்த்தி. ''தலையின் ஏந்தினன் தாழ்தடக் கைகளே'' என்று சுட்டுமிடத்து இராம இலக்குவர்களைத் தெய்வமாக எண்ணிப் போற்றும் பரதனின் அருள் உள்ளமும்; பொன்திணிந்த தடக்கையால் திருமுகத்தைத் தன் தலைமேற் கொண்டு போற்றும் நிலையில் பரதனின் அன்புள்ளமும்: மன்னன் சார்பாக வந்து சேர்ந்த திருமுகத்தின்பால் காட்டும் மதிப்பைத் தெளிவாக்கும் மதிப்புறு உள்ளமும் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன.

### அறத்தின் நாயகன்

பரதன் இராமபிரானைக் காணப்போகின்றோம் என்ற ஆவல் மேலீட்டால் பக்தியால் உடலும் உயிரும் மகிழ மயிர்க் கூச்செறிகின்றான். 'ஒன்றன் மதுரச் சுவைக்கு அதிசயம் அளிப்பார் மயிரினைச் செவ்வன் நின்றன' (தொல். மெய். உரை 14) என்ற பேராசிரியர் கூற்று இவ்விடத்து எண்ணத்தக்கது. தெய்வத்தைக் காண விழைவோர் நாற்பொழுதைப் பற்றிச் சிந்தியார்; அத்தன்மையில்,

> ''தழுவு தேரிடைத் தம்பியொடு ஏறினான்
> பொழுதும் நாளும் குறித்திலன் போயினான்''

பரதன் புறப்பட்டுச் சென்றதாகக் காட்டுகின்றார் கம்பர். ''மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' ஆதலால் மன்னனை இழந்த கோசல நாடும் உயிரற்ற உடல் போலக் காட்சி யளித்தது. அழகு அழிந்து, பொலிவிழந்து, ஒளியிழந்தக் காட்சியைக் காண்கின்ற பரதன் 'சென்று கேட்பது ஓர் தீங்கு உளது ஆம்' என்று எண்ணி பெருமூச்சு விடுகின்றான்.

அயோத்தியில் கொடிகளை இழந்து சொடைமுரசு ஒலி அவிழ்ந்த நகரத்தையும், பரிசிலர் பரிசில் பெறாது நிற்றலையும், தானம் பெறாத நிலையும், இசையும், இயக்கமும் அற்றுப் போய்க் கிடக்கும் அழகு குன்றிய வீதிகளையும் காண்கின்றான் பரதன். தன் இளையவனான சத்துருக்கனை நோக்கி,

> ''மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?
> என்ன தன்மை? இளையவனே''

என்று கேட்கின்றான். அதற்கு அரசிளங்கோளரி சத்துருக்கன்,

> ''சூல்தடங் கருங்கார் புரை தோற்றத்தான்
> சேல்தடங்கண் திருவொடும் நீங்கிய
> பால் தடங் கடல் ஒத்தது பார் என்றான்''

அதாவது ''கற்ப முடிவுக் காலம் வரையும் வாழக் கூடிய சிறப்புடைய இந்நகரின் திருமகள் இந்நகர்விட்டு அடியோடு சென்றுவிட்டாள். இக்கொடிய தன்மைக்குக் காரணம் அதுவே'' என்று உரைக்கின்றான்.

### அந்தமில் பெருங்குணத்தான்

பரதன், தந்தை தயரதனை அரண்மனையில் தேடுகையில், கைகேயி அழைக்க, தன் தாயைச் சென்று வணங்கினான். தன் தந்தை தயரதன் எங்கே? என்று கேட்க நடந்தவற்றை எடுத்துரைக்கும் கைகேயி 'அவர் பரமபதத்தை அடைந்துவிட்டார்' என்று சொல்லிமுடிக்க ''ஐய்யோ நான் செத்தேன்'' என்று அலறிக் கைகளை விரித்துக் கொண்டு கீழே விழுகின்ற காட்சியில் பரதனின் கள்ளங்கபடமற்ற வெள்ளை உள்ளம் கவிச்சக்கர வர்த்தியால் காட்டப்பட்டுள்ளது. துயரம் மிகைப்பட்ட பரதன்,

> ''எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்
> அந்தம் இல் பெருங்குணத்து இராமன்; ஆதலால்
> வந்தனை அவன் கழல் வைத்தபோது அலால்
> சிந்தை வெங் கொடுந் துயர் தீர்கலாது என்றான்''

என்று தன் துன்பம் தீர்வதற்கு இராமபிரானின் திருவடிகளை 'அந்தம் இல் பெருங்குண முடைய திருவடிகளை' வணங்குவதுதான் வழி என்று சுட்டுகின்ற இடத்தில், தன்னை இராமனுக்காக மகன் — அடியான் — தம்பி ஆகிய மூன்று நிலைகளில் ஆட்படுத்திக் கொள்கின்ற அன்புசான்ற "அந்தமில் பெருங்குணத்தான்" ஆக பரதன் காட்சியளிக் கின்றான். வள்ளுவரின்,

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது"

என்ற வாக்கினை இங்கு ஒப்புநோக்குவது சிறப்பு.

"வாக்கினால் வரம் தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடை; போக்கி பார் உனக்கு
ஆக்கினேன் அவன் அது பொறுக்கலாமையால்
நீக்கினான் தன் உயிர் நேமி வேந்து"

என்று தான் முன்பு தயரதனிடம் பெற்றிருந்த இருவரங்களில், மைந்தனை வனத்திற்குச் செல்லச் செய்தேன்: மற்றொன்று பரதனாகிய உனக்கு உலக ஆட்சியைச் செய்து வைத்தேன் என்கிறாள் கைகேயி. இவற்றைக் கேட்ட பரதன் மிகுந்த சினம் அடைந்ததும் வானவர்கள் அஞ்சினர்; அவுணர்கள் துஞ்சினர்; சூரியன் மறைந்தான்; கூற்றுவனும் அஞ்சி தமது கண்ணை மூடினான்.

"துடித்தன கபோலங்கள் சுற்றும் தீச்சுடர்
பொடித்தன மயிர்த் தொளை புகையும் போர்த்தது
மடித்தது வாய் நெடுக மழைக் கை மண் பக
அடித்தன ஒன்றொடு ஒன்று அசனி அஞ்சவே"

என்றவாறு, சினத்தின் அறிகுறிகளாகிய ஏழும் பரதனின் மெய்யில் தோன்றியதாம். தனக்காகத் தன் தாய் செய்த இச்சூழ்ச்சியை எண்ணி எண்ணித் தவித்த பரதன், அவளைக் கடிந்து இராமனுக்கு அஞ்சித்தான் தன் தாயைக் கொல்லாமல் விட்டான் என்பதை,

"கொடிய வெங் கோபத்தால் கொதித்த கோளரி
கடியவள் தாய் எனக் கருதுகின்றிலன்
நெடியவன் முனியும் என்று அஞ்சி நின்றனன்"

என்ற வரிகளில் குறிப்பிடுகின்றார் கம்பநாடன்.

கைகேயியைக் கொல்லாமல் விட்டதற்கு இராமனின் மேல் பரதன் வைத்திருந்த பக்தியும் அன்பும் காரணமாகின்றன, கைகேயியை 'அரவு' 'அறநெறிக்குக் கோள்', 'மாயீர்', 'பேயீர்', 'கணவன் உயிர் உண்டீர்', 'கன்றும் தாயும் போல்வன கண்டும் கழியீர்' என்று பலவாறு இகழ்ந்தும் தாயின் கொடுமை மிகுதியினைச் சுட்டியும் பழித்தான். பரதன் பழிக்கு அஞ்சும் பண்பு உள்ளம் கொண்டவனாகவும், இராமனின்பால் அன்பிரக்கம் கொண்டவனாகவும் விளங்குகின்றான். கைகேயி செய்த பழிக்கு, "நின்பிழை உண்டோ? பழி உண்டோ? என்றேனும் தான் என்பழி மாயும் இடம் உண்டோ?" என்று வருந்திப் பழிக்கு அஞ்சும் பண்பாளனாகக் காட்டப்படுகின்றான். கைகேயி செய்தவை அனைத்தும்

தான் செய்ததாக; அரசை ஏற்க இருப்பவனாக; இவ்வுலகம் தூற்றும் என்று எண்ணும் பாத்திரமாகவும் ஒரு பரிசுத்த விக்கிரகம் போன்றும் படைக்கப்பட்டுள்ளான்.

அறிவிற் சிறந்தார் சொல்லும் நல்லுரைகளை எடுத்துரைத்து மறந்தாய் செய்தாய் ஆகுதி என்று தான் அறியாமல் செய்துவிட்டதாக எண்ணுவாய் என்று அறிவுறுத்தும் பரதன், தனக்குப் பழியைத் தேடிக் கொடுத்த தாயைத் திருத்த ஒரு வழிகாட்டும் விளக்காகவும், தனக்கு ஏற்பட்டுள்ள பழிக்குப் பிராயச்சித்தம் தேடிப் பெருந்தவம் புரியும் உள்ளமாகவும் காட்சி தருகின்றான்.

தன்னை ஈன்ற தாய் செய்த சூழ்ச்சியின் பயனாக நீங்காத பெரும் பாவத்தைப் பெற்ற பரதன், தன்னிடம் அன்பாக இருந்த கோசலை, "கேகயர் கோமகள் இழைத்த வஞ்சனையை முன்னமே அறிந்திலை போலும்" என்று கேட்டது மட்டுமின்றி "மன்னர் மன்னவா" என்று விளிக்கின்ற நிலையில் குற்றமற்ற பரதனுக்கு நரக வேதனையைக் கொடுத்தது.

'தீய செயல்களைச் செய்த தீயவர்கள் செல்லும் நரக கதிக்குத் தானும் செல்வேன் ஆகுக' என்கின்றான். தீயவர்கள் செயல்களைச் சொல்லும் பரதன். தன்னையே அச் சூழ்நிலைக்கு ஆளாக்கிச் சூளுரைக்கின்றான்.

"கன்று உயிர் ஒய்ந்து உகக் கறந்து பால் உண்டோன்
மன்றிடைப் பிறர் பொருள் மறைத்து வவ்வினோன்
நன்றியை மறந்திடும் நயம் இல் நாவினோன்
என்று இவர் உறு நரகு என்னது ஆகவே"

என்றும், "தீயன கொடியவள் செய்த செய்கையை நாயினேன் உணர்ந்து அதற்கு உடன்பட்டு வரம்பெறுதலும். இராமன் காட்டுக்குச் செல்லுதலும் நடந்திருக்குமாயின் இத்தன்மைகளை யான் அடைவேனாக" என்றும் பரதன் சூளுரைப்பதிலிருந்து நல்லறங்கள் பலவற்றை எடுத்துரைக்கின்றார் கம்பர். அந்த நல்லறங்களைக் காட்டும் நல்லற மூர்த்தியாகத் திகழ்கின்றான் பரதன்.

### புலன்களை வென்றவன் :

தன் கண்முன்னால் பொருளை வைத்துக்கொண்டு எவன் அதன் மேல் ஈர்ப்பு இல்லாமல் புலன் அடக்கம் செய்து விடுகின்றானோ, அவன் மனிதருள் தலைவனாக விளங்கக் கடவன். பரதனுக்கு எதிரில் சீர்கொண்ட அரசியல் செல்வம் இருக்கின்றது; மனைவி எதிரே இருக்கின்றாள்; எல்லாவிதமான சுகபோகங்களும் நிறைந்துள்ளன. ஆனால் பரதனோ, 'என்னுடைய அண்ணன் அங்கே அடகு, கனி முதலியவற்றை உண்டு காட்டில் வாழ, யான் மட்டும் வெண்சோறு உண்பேனோ?' என்று எண்ணுகின்றான். அதாவது உண்மையான புலனடக்கத்தைக் கைக்கொண்டவன் பரதன். ஒன்றும் கிடைக்-காத காட்டில் வாழ்ந்த இலக்குவனுடைய புலனடக்கத்தைக் காட்டிலும், அனைத்தையும் கண்எதிரே வைத்துக் கொண்டு அவற்றைத் தொடமாட்டேன் என்று மனஉறுதியுடன் வாழ்கின்ற பரதனின் புலனடக்கத்தைக் உயர்த்திக் காட்டுகிறார் கம்பர். பரதனை அழித்துவிடுவதாக சூளுரைத்து இந்திரசித்தன் புறப்பட்டவிடத்து இராமன் பரதனை எண்ணி ஐயப்பட இலக்குவன்வழி பரதனின் ஆளுமையை, ஆற்றலமிக்க பரதன், தவவலிமையும் பெற்றிருப்பதால் அவனை வெல்ல இந்திரசித்தனால் முடியாது என்று இளையவன் எடுத்துரைக்கக் காட்டுகின்றார் கம்பர்.

**மன்னர் மன்னவன் :**

பரதனின் களங்கமற்ற உள்ளத்தை உணர்ந்த கோசலை அவனை ஆரத் தழுவிய காட்சியைக் கம்பர் அழகாக வடிக்கிறார்,

> "தூய வாசகம் சொன்ன தோன்றலை
> தீய கானகம் திருவின் நீங்கிமுன்
> போயி னான்தன் முன்போந் துளான்என
> ஆய காதலால் அழுது புல்லினாள்"

என்ற வரிகளில் அரசைத் துறந்து கானகம் சென்ற இராமனே திரும்பி வந்து கோசலையைத் தழுவிக் கொள்வதாகவே எண்ணி, ஆனந்தக் கண்ணீர் சொரிய அணைத்துக் கொண்டாள் கோசலை. குணங்களால் இராமனுக்கும் பரதனுக்கும் வேற்றுமை இல்லை என்பதை உணர்ந்தாள். இவ்விடத்தில் அவள் பரதனை,

> "முன்னை நும்குல முதலுளோர்கள்தாம்
> நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?
> மன்னர் மன்னவா என்று வாழ்த்தினாள்
> உன்ன உன்ன நைந்து உருகி விம்முவாள்"

என்று முன்னோர்களது அரச வாழ்வைச் சுட்டிக் காட்டி அரசை ஏற்கத் தூண்டுகையில் கம்பர் கோசலையை நற்பண்புகளின் உறைவிடமாகவே காட்சிப்படுத்துகின்றார். கோசலையினாலேயே பரதன் "மன்னர் மன்னவா" என்றும் அழைக்கப்படுகின்றான்.

தன் உயிரையே அர்ப்பணித்துத் தருமத்தைக் காத்த தயரதனின் பழமையான அறத்திருவுருவத்தைக் கண்ட பரதனின் நிலையை,

> "மண்ணின்மேல் விழுந்து அலறி மாழ்குவான்
> அண்ணல், ஆழியான், அவனி காவலான்.
> எண்ணெய் உண்ட பொன் எழில் கொள்மேனியை
> கண்ண நீரினால் கழுவி ஆட்டினான்"

என்கிறார் கம்பர். தைலத்தில் கிடந்த தந்தையின் பொன்னுடலை, தன் கண்களிலிருந்து திரண்டுவரும் கண்ணீரினால் கழுவித் தூய்மை செய்து மூழ்கச் செய்த காட்சியில் தந்தையின் பிரிவுத் துயரில் பரதனின் துயரம் சுட்டப்பட்டுள்ளதுடன், தயரதன் தன்னை மகனல்லன் என்று உரைத்த செய்தியைக் கேட்டபோதே பரதன் "இறந்து போயினான் ஆண்டு, அது மறந்து வேறு ஒரு மைந்தன் ஆம் கொலாம்" என்றவிடத்தும் பரதனின் துயரம் ஆறாகப் பெருக்கெடுக்கின்றது.

'அன்னை தன் வரத்தில் பெற்ற அரசினை ஏற்று நடத்துக' என்று வசிட்ட மாமுனி சொன்னதைக் கேட்டு அஞ்சினான் பரதன். ஒடுங்கிய உயிர் உடையவனாய் மூவுலகுக்கும் ஓர் முதல்வன் இருக்க யான் மகுடம் சூடி அரசனாக வாழ மாட்டேன்' என்று மறுத்தான். அறத்தை வலியுறுத்தும் பாத்திரமாக விளங்குகின்ற பரதன், மூத்தவன் இருக்க இளையவன் அரசு புரிவது அறமாகாது என்று துணிகின்றான். இவ்விடத்தில் அரசவையோர் பரதனைப் புகழும்போது,

"ஆன்ற பேர் அரசனும் இருப்ப ஐயனும்
ஏன்றனன் மணிமுடி ஏந்த; ஏந்தல் நீ
வான் தொடர் திருவினை மறுத்தி மன் இளந்
தோன்றல்கள் யார் உளர் நின்னின் தோன்றினார்?"

என்று பாராட்டுகின்றனர். பெருமைசான்ற தயரதன் வாழ்நாளில் இருக்கின்றபோதே இராமன் முடிசூட்டிக் கொள்ள ஒப்புக் கொண்டான். ஆனால் பெருமைமிக்க பரதன் அரசச் செல்வத்தை ஏற்க மறுத்த நிலையை மன்னவன் இல்லாத போதும் அவன் ஆணையாலும் அரசை ஏற்க உடன்படாத பரதனைப் போல் உலகில் எவரும் தோன்ற வில்லை என்று இராமனையும் பரதனையும் ஒப்பிட்டுக் காட்டுகின்றார் கம்பர்.

**இராமனை நிகர்த்த தமையன் :**

குகனை இராமபிரான் அன்பினால் துணைவனாகத் தழுவிக் கொண்டதை அறிந்த பரதனின் உள்ளம் உவகையால் நிறைகின்றது. இன்துணைவன் இராகவனுக்கும் இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்' என்று குகனை அறிமுகப்படுத்தி வைக்கும் பரதன் தன் தமையனாகக் கொண்டமையால்தான் தமையனைத் தம்பி சென்று காணுதல் பொருந்தாது ஆகையால் யானே சென்று காண்பேன் என்று கூறிப் புறப்பட்டுச் செல்கின்ற இடத்தில் பரதனின் அன்புள்ளம் வெளிப்படுகின்றது. பரதனின் தவக் கோலத்தைக் கண்ட குகன், இராமனுக்குப் பரதன் தீங்கு செய்ய வந்துள்ளதாகக் கருதிய தன் பேதமையை எண்ணி, 'எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு' என்று கூறிப் பெருமிதமடைகின்றான். மலர் இருந்த அந்தணனும் தனை வணங்கும் உருவ மாகப் பரதனைப் படைத்துள்ளார் கம்பர். அயோத்திக்கு மன்னன் இராமன் தான் என்பதில் அசையாத நிலைகொண்டுள்ள பரதன், மன்னனைக் கொணர்வேன் என்று கூறுகின்றான். இராமன் நாட்டில் இருப்பினும், காட்டில் இருப்பினும் அவர்தான் அரசன் என்பதை அவனது சொற்கள் உறுதிப்படுத்துகின்றன. தான் காடு தேடி வந்த நோக் கத்தைப் பரதன் கூறக்கேட்ட குகனுக்குப் பரதன் பரதனாகவே காட்சி அளிக்கவில்லை, அவனை,

"ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ
தெரியின் அம்மா"

என்று வியந்து போற்றுகின்றான். ஆயிரம் இராமர்களுக்கும் மேம்பட்டவனாகப் பரதனை எண்ணிய குகன், இராமன் காலில் விழுந்து வணங்குவது முறையேபோல், பரதனின் காலிலும் விழுந்து வணங்குகின்றான். தாயும் தந்தையும் சேர்ந்து அளித்த அரசை வெறுத்து ஒதுக்கிய பரதனின் மேன்மையை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது. பரதனின் உயர்ந்த குணங்களைப் பாராட்டும் நோக்கில் **'ஆயிரம் இராமர்'** என்று குகனே இராமனை அளக்கும் பொருளாய் வந்து நிற்பதை உணரலாம். இராமனிடத்து எத்தகைய நல்ல குணங்களைக் கண்டு குகன் அன்பு செலுத்தினானோ, அதே நல்ல குணங்கள் அனைத்தையும் பரதனிடமும் கண்டு பரதனை இராமனாகவே மாறுபாடில்லாமல் எண்ணுகின்றான்.

"சுழித்து நீர்வரு துறை ஆற்றை, சூழ்படை
கழித்து நீங்கியது என கள்ள ஆசையை
அழித்து வேறு அவனி பண்டு ஆண்ட வேந்தரை
இழித்து மேல் ஏறினான் தானும் ஏறினான்"

என்ற பாடல்வழி மண்ணாசை கொண்டு இதுவரை ஆண்ட மன்னர்கள் அனைவரையும் வெற்றி கொண்ட பரதன் மற்ற அரசர்களைவிட மேம்பட்டுக் காட்டப்படுவதுடன், குணத் தாலும் பொருட்செல்வத்தின் மீது பற்றற்ற தன்மையாலும் மேல் ஏறினான் என்றும் காட்டப்படுகின்றான். ஒழுக்கம் பற்றி வேதங்களில் எடுத்துரைக்கப்படும் அனைத்தும் ஒழுக்கங்களும் பரதனின் ஒழுக்கமாக அமைவனவே. இராமன் வேதத்தின் வித்தாக விளங்கும் பரம்பொருள். தன்னை யார் என்று எண்ணாது, வேதங்களின் முழுவடிவமாக பரதன் உள்ளான் என்று கூறுவதிலிருந்து பரதனிடம் இராமன் கொண்ட அன்பின் ஆழத்தை உணரமுடிகின்றது.

பரதன் போர் தொடுக்க வருகின்றான் என்று எண்ணி இலக்குவன் போர்க் கோலம் பூண்டு வீரவுரை ஆற்றுவது அறிந்து, இராமன் பரதனின் அன்புநிலையைக் கூறித் தெளிவுறுத்துகின்றான்.

"தொழுது உயர் கையினன் துவண்ட மேனியன்
அழுது அழி கண்ணினன் அவலம் ஈது என
எழுதிய படிவம் ஒத்து எய்துவான் தனை
முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினான்"

என்று 'அவலம் இதுதான்' என்ற படிவத்தை ஒத்துள்ள பரதனைக் காட்டி அவனது போர்க்கோலத்தைக் காண்பாயாக என்கின்றான். இத்தகைய ஒழுக்கமுடைய பரதனை இலக்குவன் அறிந்து உணராமைக்குக் காரணம், அந்த இலக்குவன் இராமனின் மேல் வைத்துள்ள அளவுகடந்த அன்புதான் என்கின்றபோது, பரதனின் சிறப்பினைத் தெளிவாக்குகின்றார் கம்பர். 'காதல் மீக்குழிக் கற்றவும் கைகொடா' என்ற தொடருக்குரியவனாக இலக்குவன் நிலை உளது. அன்பு முதிர்ந்தவழி அறிவு தொழிற்படாது என்பதைக் கம்பர் காட்டியுள்ளார்.

**பெருமகன் :**

என்மீதுகொண்ட அளவில்லாக் காதலாலும், அரசாட்சியை எனக்குத் தருவதற் காகவும் பரதன் வருகின்றான் என்று இராமன் கூறுகின்றவிடத்து, பரதனைப் 'பெருமகன்' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றான். மிக உயர்ந்த அறத்தின் வடிவினன் நல்லொழுக்க மாகிய செம்மையின் உரைகல்லாக விளங்குபவன் பரதன், தர்மத்தின் தேவதையாக நேர்மையின் ஆணியாக, பரதன் உள்ளான் என்று கூறுகிறான்; 'பெருமகன்' என்னும் சொல்லாட்சி மற்றொரு இடத்தில் சீதை இராமனைச் சுட்டப் பயன்படுத்தப்படுவது சிந்திக்கத்தக்கது. அருளால்தான் அறம் வளரமுடியும். அறத்தின் பயனும் அருளே ஆகும். அருளில்லாதவன் அறம்செய்தல் இயலாது என்பதை பரதனின் கூற்றிலிருந்து உணர்த்தும் கம்பர் இராமனுக்குக் கிடைக்க வேண்டிய அரசபதவியைத் தான் ஏற்றுக் கொள்வது அறம் தின்றலுக்குச் சமமாகும் என்ற பரதனின் கூற்றிலிருந்து உறுதிப் படுத்துகின்றார்.

தயரதன் ஏவல்வழி பரதன் அரசாள்வது அறமே என்று பரதனுக்கு இராமன் எடுத்துரைக்கின்றான்.

"முன்னர் வந்து உதித்து உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பு இலாநீ பிறந்த பார்
என்னது ஆகில் யான் இன்று தந்தனென்
மன்ன போந்து நீ மகுடம் சூடு"

என்று யான்தர நீ முடிசூடு என்று இராமனைப் பணிகின்றான் பரதன். பழிக்கு அஞ்சும் இராமன் வாய்மையை உணர்த்தி தந்தையின் வாய்மையைக் காத்தலே அறமாகும் என்பதை உணர்த்துகின்றான்.

"அனையதேல் ஆள்பவர் ஆள்கநாடு; நான்
பனிபடர் காடு உடன் படர்தல் மெய்"

என்றுரைத்து இராமனோடு காட்டிலேயே உறைவதாகக் கூறுகின்றான் பரதன் இராமன் பரதனை அரசாளுமாறு முதலில் சொல்லவும் மறுக்கின்றான் பரதன். பின்பு இராமன் உடன்படுகின்றான்.

"பதினான்கு ஆண்டுகள் கழிந்ததும் அயோத்திக்குத் திரும்பி வந்து அரசை ஏற்கவில்லையெனில் மிக்க நெருப்பில் வீழ்ந்து விடுவேன் இது உறுதி உன்மேல் ஆணை" என்று கூறும் நிலையில் பரதனின் உறுதியைக் கண்ணுற்ற இராமன் அன்பினால் உருகினான் என்கிறார் ஆசிரியர். எல்லா உலக இன்பங்களையும் அளிக்கவல்ல இராமனின் இரண்டு திருவடி நிலைகளையும் (பாதுகைகள்) 'செம்மையின் திருவடித்தலம் தந்தீக' என்று வேண்டிப்பெற்று, அத்திருவடிகளையே தனக்கு மணிமகுடமாச் சூட்டிக் கொள்கிறான்.

"பாதுகம் தலைக்கொடு, பரதன் பைம் புனல்
மோது கங்கையின் கரை கடந்து முந்தினான்
போது உகும் கடிபொழில் அயோத்தி புக்கிலன்
ஓது கங்குலில் நெடிது உறக்கம் நீங்கினான்"

இரவும் பகலும் ஓயாது அழுத கண்ணை உடைய பரதன் அயோத்தியின் புறத்தே உள்ள நந்திக் கிராமத்தில் இராமன் திருவடிநிலையால் செங்கோல் முறை செய்ய, மனத்தால், ஐம்பொறிகளை, இன்பம் நுகராதவாறு அடக்கித் தாங்கியிருந்தான்.

**அரசிளங்கோளரி சத்துருக்கன் :**

இராமன் காடு செல்லவும், தயரதன் இறந்துபடவும் காரணமாகிய கூனியைச் சத்துருக்கன் துன்புறுத்தப் பற்றினான்.

"மந்தரைக் கூற்றமும் வழிச் செல்வாரொடும்
உந்தியே போதல் கண்டு இளவல் ஒடி ஆர்த்து
அந்தரத்து எற்றுவான் அழன்று பற்றலும்
சுந்தரத் தோளவன் விளக்கிச் சொல்லுவான்"

பரதன் அவனைத் தடுத்து "முறைமை சிதைய சூழ்ச்சி செய்த தாயாகிய பாவியைக் கண்ட துண்டமாக வெட்டி வீழ்த்தியிருப்பேன். ஆனால் என் தலைவனாகிய இராமன்

தன்னைத் தம்பியல்லன் என்று விலக்கிவிடுவார் ஆதலால் விட்டுவிட்டேனே தவிரத் தாய் என்ற பாசத்தால் அல்ல என்று எடுத்துரைத்து வேதநூல்களில் தேர்ச்சி பெற்ற சத்துருக்கனைக் குற்றம் இல்லாதவனைச் சாந்தப்படுத்துகின்றான் பரதன்.

"ஆதலால் முனியும் என்று ஐயன் அந்தம் இல்
வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்
கோது இலா அருமறை குலவும் நூல் வலாய்
போதும் நாம் என்று கொண்டு அரிதின் போயினான்"

"வேதம் வல்ல நீர் ஓர் அடிச்சியின் பொருட்டுச் சினம் கோடல் தகுதி அன்று" என்று சத்ருக்கனை பரதன் அமைதிப்படுத்துகின்றான்.

**நிறைவுரை :**

பரதன் தன் அண்ணன் இராமபிரான் மீது கொண்ட மாளாக் காதலால் உயிர் துறக்கவும் எண்ணுவதால், அஞ்சா அருள் நலம் பூண்டவனாகவும் அறத்தின் ஆழியாகவும் காட்டுகின்றார் கம்பர். உடன்பிறந்தாரைக் காத்தல். பழிச்சொல் நீக்கல், சரிநிகர் சமானமாய் அனைவரையும் எண்ணுதல் போன்ற அறங்களின் வடிவமாக பரதனைக் கம்பர் படைத்துள்ளார். புலன்களை வென்ற வெற்றிவீரனாகவும், வேதநெறி கூறும் அறவடிவினனாகவும், இராமன் கண்ட பெருமகனாகவும், அறத்தின் நாயகனாகவும், இராமனை நிகர்த்த தமையனாகவும் பரதன் விளங்குகின்றான். சத்துருக்கன் இக் காண்டத்தில் அதிகம் பேசப்படவில்லை. இருப்பினும் அவனையும் பரதனைக்கொண்டு இனங்காண வைத்திருப்பது கம்பனது கவிதா மேதை. ●



## 'மேதைக் கம்பன்'

"தற்காலத்தில் விரிந்து வளர்ந்துவரும் மேனாட்டு இலக்கிய ஆய்வுக் கலையின் அளவைகளுக்கும் எஞ்சாத கலைச் செல்வம் கம்பரது படைப்பு"

"கம்பரின் தோற்றம் தமிழிலக்கிய வரலாற்றில் ஒரு புதிய பாதையைக் காட்டிற்று. ஆழ்வார்களும், நாயன்மார்களும் தோற்றுவித்த பக்திப் பெருவெள்ளம் தணியத் தொடங்கிய போது, அப்பக்தி உணர்ச்சியைக் காவியத்தின் வாயிலாக மக்கள் உள்ளத்தில் கிளர்ந்து எழச் செய்தவர் கம்பர்".

"இராமனும் சீதையும் உலகில் எல்லா நாட்டிலும் எக் காலத்திலும் வாழ்ந்து வரும் மக்களால் போற்றிக் கடைபிடிக்கத் தகும் இலட்சிய வடிவாய் அமைந்த பாத்திரங்கள்".

"கம்பராமாயணத்தில் கம்பரது தமிழிலக்கியப் புலமை, பிறமொழிப் பயிற்சி, கற்பனை வளம், காவிய இன்பம், சொற்களை ஆளும் ஆற்றல், கருத்துக்களை நயம்பட விளக்கும் முறை, கவிதையை உருவாக்கும் பாங்கு, சந்தங்களை அமைக்கும் திறன் முதலிய புலமைக் கூறுகள் கற்போர் உள்ளத்தைக் கவர்கின்றன".

—செல்வி ஜாஸ்மின் ஆசிர் (கேரளா)

# இலக்குவன்

*

பேராசிரியை திருமதி. தி. மைதிலி

இராமாயணத்தில் இராமனை விட்டு நீங்காத பாத்திரங்கள் இரண்டு. ஒன்று சீதை; மற்றொன்று இலக்குவன். இராமனை உருவத்தால் பிரிந்தவளாயினும் உள்ளத்தால் ஒரு போதும் பிரியாதவளாய் இராம நாமத்தையே தாரக மந்திரமாய்க் கொண்டு கூவிக் கொண்டிருந்த பூங்குயில் சீதையென்றால் தன் உடல், பொருள், ஆவி மூன்றையும் இராமனுக்காகவே அர்ப்பணித்த ஓர் ஒப்பற்ற கர்மவீரன் இலக்குவன் எனலாம். அவனது பாத்திரப் படைப்பை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**இராமனுக்காய் சீற்றம் கொள்ளும் தன்மை :**

அயோத்தி வேந்தன் தசரதன் புதல்வர் நால்வரையும் இராம இலக்குவர், பரத சத்ருக்கனர் என்றே உலகம் வழங்குகிறது. சுமித்திரையின் மைந்தர்கள் இலக்குவனும் சத்துருக்கனனும் இங்ஙனம், இராம பரதர்களுடன் சேர்த்து இரட்டையராக அழைக்கப் படுதல் நோக்கத்தக்கது. தோற்றம், அறிவு, ஆற்றல் பாசம், நேசம் இவற்றில் இவர்களிருவரும் ஒருவருக்கொருவர் குறைந்தவர் அல்லர். விஞ்சி நிற்பவரே. அதிலும் **'இளைய பெருமாள்'** என்ற பெருமைக்குரிய இலக்குவன் மூத்தோன் இராமன்பால் காரணகாரியமற்ற அன்பையும், பாசத்தையும் பொழிந்தவன். அன்பிற்காகவே அன்பு செலுத்தும் ஆண்டவன்போல் எல்லையற்ற தூய அன்பை இராமன் மீது செலுத்தியவன். இதனால் தான் இராமனுக்கு இன்னலிழைப்பவர் அந்தத் தேவனேயாயினும் அன்பு வெறி கொண்டு இலக்குவன் கோபாக்கினியாகவே மாறிடுவான். இராமன் ஒருவனால் மட்டுமே ஞான நன்னீர் தெளித்து அதனை தணித்தல் இயலும். இதற்குச் சான்றாய் இக் காண்டத்தில் இரண்டு நிகழ்ச்சிகள் பின்னிக் காட்டப்பட்டுள்ளன.

மந்தரையின் சூழ்ச்சியால் மனம் மாறிய கைகேயி கணவன் தயரதனிடம் தன் மகன் பரதனே நாடாள வேண்டும்; இராமன் காடாள வேண்டும் என்ற வரம் கேட்டாள். வரங்களே சாபங்களானாற் போல கைகேயி பெற்ற இவ்வரத்தால் இராமனது முடிசூட்டு விழா தடைப்பட்டது. விழாக்கோலம் பூண்ட அயோத்தி மாநகரமே துயர்க்கோலமாயிற்று. இச்செய்தி கேட்ட இலக்குவன் 'யாவராலும் மூட்டாத காலக்கடைத் தீயென மூண்டெழுந்தான்'. கண்களில் ஊழித் தீப்பொறி சிந்த, நெற்றியில் புருவமேற, உடல் வியர்வைத் துளிகளைப் பொழிய, உடலில் உள்ள மூச்செனும் பெருங்காற்று வெளிப்படவும் வானத்துக் கதிரவனும் தோற்கும்படி அக்கினிப் பிழம்பாய் நின்றான். போர்க் கோலம் கொண்டு நகரின் நடுவில் சுற்றித் திரிந்து யாவரையும் கதிகலங்கச் செய்தான். அப்போது இராமன் இலக்குவனின் சீற்றத்தைப் போக்க வருகின்றான்.

“காறக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும்,
ஆறக் கனலாற்றுமோர் அஞ்சன மேகமென்ன”

எனக் கவிஞர் இராமனின் வரவை இங்கே வருணிப்பது போற்றற்குரியது. இராமன் மீது வைத்த பேரன்பால் பொங்கிய இலக்குவனின் சினத் தீயைத் தணிக்க ஞான வடிவான இராமன் வந்தான்; அவன் வரவு பொங்கியெழும் நெருப்பையணைக்க இடையறாது மழை பொழியும் கார்மேசம் வந்ததுபோல் அமைந்தது என்று கூறுவது இளவலின் அபரிமிதமான பாசத்தை, அதற்கும் மேலான தூய அன்பை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது. பேச்சு சாதுரியமுடைய இராமன் வரும்போதே, என்றுமே சினங்கொள்ளாத ‘நீ இன்று சினங் கொண்டதேனோ’ என இலக்குவனது அறவுணர்வைத் தூண்டி சிந்திக்க வைக்கின்றான். ஆனால் இலக்குவனது அறவுணர்வுக்கு முன் அண்ணல் இராமன் மீது அவன் கொண்ட அன்புணர்வே வெளிப்படுகிறது.

“மெய்யைச் சிதைவித்து நின்மேல் முறை நீத்தநெஞ்சம்
மையிற் கரியாள் எதிர் நின்னையம் மௌலி சூட்டல்
செய்யக் கருதித் தடைசெய்குறர் தேவரேனும்
துய்யைச் சுடு வெங்கனில் சுடுவான் துணிந்தேன்”

என்று பதிலுரைக்கின்றான். ‘நினது முடிசூட்டு விழாவிற்குத் தடை செய்பவர் தேவரே என்றாலும் எதிர்க்கத் துணிந்தேன்’ என்கிறான். தடைகளையெல்லாம் உடைத்து, எதிர்ப் போர் யாவரையும் வென்று பதினான்கு உலகங்களையும் நின்னையே ஆளச் செய்வேன் என்றும் ஈரேழ் புவனங்களுக்கு இராமனே தலைவனாய் விளங்குதல் வேண்டும் என்ற தன் ஆசைக்கனவையும் கோபத்திடையே வெளிப்படுத்துகின்றான். உலகியலில் அண்ணன் பெறும் பெருவாழ்வு தான் தன் வாழ்வு, ‘அதுவே தன் உயிர் மூச்சு என்று கருதும் இது போன்ற தம்பியரை காவியத்தில் மட்டுமே சந்திக்க முடியும். ஒரு வேளை என்றாவது நடைமுறை வாழ்விலும் சந்திக்க நேர்ந்தால் வாழ்த்தக்கூடத் தோன்றாது. வணங்கவே தோன்றும்.

வனத்திற்கு உன்னை போகுமாறு பணித்தவர் நம்மைப் பெற்ற தந்தையே என்றறிந்து வருந்துவதோடு அவ்வருத்தத்திலேயே மூழ்கி நிற்காமல் உன்னைக் காப்பதையே எனது கடமையாகக் கொண்டேன். இமைகளே கண்களைக் குருடாக்குவது போல், வேலியே பயிரை மேய்ந்தாற்போல் உனக்குத் தீங்கு செய்தவர் பெற்றதாயினும் மேலாய்ப் போற்றி வளர்த்த கைகேயித் தாயும், அவள் சொற்கேட்டு கானகம் செல்கவென கட்டளை பிறப்பித்த தசரதத் தந்தையுமே என்றறியும்போது அதனைக் கணமும் பொறுக்க லாற்றாது சினங்கொண்டு அவர்களை எச்சரிக்கைச் செய்யத் துணிந்தேன். அரண்மனையில் மெல்லணை மேல் துயின்ற உனக்கு கல்லணைமேல் உறங்கும்நிலை வந்துற்றதே! அதனைத் தடுப்பதே என் கடன்! அன்றேல் இறந்து படுதலே மேலானது எனக் கருதியே சீற்றத்தின் இறுதியில் நிற்கின்றேன் என்றான். உன் துன்பத்தைக்கண்ட பின்னும் என் னுயிர்போற்றி வாழும் இழிவுடையவன் நானன்று என்று பேசும் இலக்குவனது பேச்சுக்கள் அவனைப் பாசத்தின் பிறப்பிடமாகவே, அன்பின் ஊற்றாகவே, பரிமளித்துக் காட்டுகிறது.

“நதியின் பிழையன்று நறும் புனலின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழையன்று மகன் பிழையன்று மைந்த
விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்டது என்றான்”

என்று இராமன் நிகழ்வுக்கு ஊழே காரணம், ஊழது வலிமையை மாற்ற முடியுமா? எனக் கேட்டு வினவியபோது,

'விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டியென்றான்'

எனப் பதிலிறுப்பது இராமனது துயர்துடைப்பதில் இலக்குவனுக்கிருந்த ஆர்வத்தையும், ஈடுபாட்டையும், புலப்படுத்துகின்றது. எந்த இராமனுக்காய் பொறுமையிழந்தானோ அதே இராமனின் அறிவும், அன்பும் கலந்த சொற்களில் கட்டுண்டு நிற்கின்றான். மும்மதநீர் பொழிந்துவரும் மதயானையொன்று மந்திரத்திற்கு கட்டுண்டு நிற்பதுபோல் இலக்குவன் சீற்றம் தவிர்ந்து நின்றான். பரதன் இந்நாட்டையாண்டுபெறும் செல்வம் பொருட்செல்வமும், பதவிச் செல்வமுமே ஆகும். ஆனால் கானகம் போய் தவமிருந்து, தவமுனிவரின் அருட்செல்வத்தைப் பெறுதலன்றோ பெருஞ்சிறப்புடையது. கோபத்தால் அறிவு மயங்கி உடன் பிறந்தவனையும், தந்தையையும், தாயையும் கொல்ல நினைத்தல் தகுதியன்று. அவர்கள் குற்றமற்றவர் என்பதை எண்ணுக என்றும் கூறி இலக்குவனை சாந்தப்படுத்துகின்றான் இராமன். சினமாறிய இலக்குவன் அப்போதும் இராமன்மீது பேரன்பால் ஆற்றாமை மீதூர பெருவீரனாகிய யானிருந்தும் இராமனைக் காடு செல்லாத வாறு தடுத்து அரசு கட்டிலில் அமர வழி செய்ய இயலவில்லையே என்ற பொருளில் வறிதே வில்லினைச் சுமக்கப் பிறந்தேன்! வெகுண்டென்னை என்று தன்னையே நொந்து கொள்ளும் போது இலக்குவனுக்காய் நாமும் வருந்துகிறோம்.

இலக்குவன் சீற்றங்கொண்டு நிற்கும் மற்றொரு இடமும் இக்காண்டத்தில் உண்டு. சித்திரகூட மலையில் தங்கியிருந்த இராமனை தரிசித்து மன்னிப்புக் கோரி இராச்சியத்தை ஒப்படைக்க தவக்கோலத்தில் பரதன் அயோத்தியினின்று புறப்பட்டான். அவனுடன் சேனைகளும், மக்களும் புறப்பட்டனர். இப்பெரும் சேனைப் பரிவாரங்களுடன் பரதன் வரவை தொலைதூரத்திலிருந்து கண்ட இலக்குவன் போர்க் கோலம் கொண்டவனாய் கூறிய அம்பு ஒன்றால் இப்படைக்கடலை முறியடித்து முப்புரம் எரித்த தேவன் போல் யான் விளங்குவேன் என்று முழங்கினான். ஆனால் இராமனோ நிலை பிறழா ஒழுக்க முடைய பரதன் அயோத்தியரசை என்னிடம் ஒப்படைக்க அன்புடன் வருவான். அறக் கடவுள் போன்ற அவன் என்னைக் காணவே வருகின்றான்! இதனை நீ உணர்வாய் என்று உண்மையை உரைத்து இலக்குவனது ஆத்திரத்தை அகற்றினான். பரதன் அருகில் வரவர அவனது தவக்கோலத்தைக் கண்ட இலக்குவன் தனது வில்லும், தவறுக்காய் வருந்தி வடிக்கும் கண்ணீரும் நிலத்திடை வீழ ஆத்திரம் நீங்கி தெளிவுடன் நின்றான். இங்ஙனம் இராமன் மீது கொண்ட பேரன்பு அவனது அறிவை மறைத்து கோபமும், ஆத்திரமும் கொள்ள வைத்ததுண்டு. ஆனால் உண்மையை உணர்கையில் ஒரு குளிர் மேகமாய் மாறும் தன்மையும் அவனிடத்தில் உண்டு. இது குறித்தே 'கோபம் உள்ள இடத்தில் தான் குணமும் உண்டு' என்ற உலகியல் மொழி எழுந்தது போலும்.

**வனத்திற்கு இராமனுடன் செல்ல விரும்புதல் :**

இராமனைப் பிரிய விரும்பாத இளவல் அவனது சொற்களுக்கடங்கி தன் சீற்றத்தைத் தவிர்த்துக் கொண்டான். சினமாறிய அவனுடன் இராமன் சுமித்திரையைக் காண வருகின்றான். அங்கு இடம் பெறும் உவமை குறிப்பிடத்தக்கது. 'அளப்பருந் தானும், தன் பாக நின்ற பொன்மானுரியானும் தழீஇ யெனப் புல்லி' என்பதே அவ்வுவமை. இலக்குவனுக்குச் சினத்தால் உவமை கூறப்பெற்ற உருத்திரமூர்த்தி தற்போது நிறத்தால் இங்கு உவமையாகிறார். சினமாறிய இலக்குவன் பொன்மனச் செம்மலாய் அண்ணல்

இராமனுக்காய் கோபத்தை மட்டுமன்றி தன் வாழ்க்கைச் சுக போகங்களையும் துறக்கச் சித்தமாய் இருக்கும் தியாகசிந்தையும், இராமன்பால் நின்றுருகும் அன்பு சிந்தையும் கொண்டு நிற்கும் தன்மை போற்றற்குரியது. வனமேகும் தன்னைப் பிரிந்து வருந்தும் தாயாருக்கும், தந்தைக்கும் துணையாய் நின்று உதவுக என இராமன் கூறியபோது இலக்குவன் இராமனின் பிரிவைப்பொறுக் லாற்றது உயிர் போகும் நிலையை அடைந்-தவனாய் 'ஈண்டுனக்கு அடியனேன் பிழைத்தது யாதெனா' என்று பிரியும்படி தான் செய்த தவறு யாதென வினவுகிறான். மகன் இராமனை வனம் ஏகுக என்று சொல்லிப்பிரிந்த பின்னும் இரக்கமற்றவனாய் உயிர் வாழும் தயரதன் போல் தானும் இரக்கமற்றவன் என்று எண்ணி இங்ஙனம் கூறினாயோ? எனத் தேம்பி 'நீருள வெனின்உள மீனும் நிலமும் பாருளவெனின் உளயாவும்; நானும் சீதையும் ஆருளர் எனில் உளம்? நின் திருவாய் திறந்து கூறிடுவாய்' என்று இராமனின் பிரிவைப் பொறுத்து வாழும் சக்தி தனக்கில்லை என்பதை அழகுடன் வினாவிலேயே விடையாய்ப் பொதிந்து வைத்து விடுகின்றான்.

### தாய் சொற் போற்றல் :

இராமனுடன் கானகம் செல்ல முடிவெடுத்த இலக்குவன் தாய் சுமித்திரையிடம் விடைபெற்றுச் செல்ல வருகின்றான். மறுப்பேதும் இதற்கு அவள் சொல்லி விடுதல் கூடாது என்பதற்காய் வரும்போதே 'உடன் ஏகென எம்பிராட்டி சொன்னால் அதுவே துணையாமென' விண்ணப்பித்தவனாய் தாயின் பொன்மயமான திருவடியில் பணிந்து வணங்கினான். தூய தொண்டனாகிய இலக்குவனைப் பெற்ற தாயல்லவா சுமித்திரை! அவளிடமிருந்துதானே அத்தொண்டுள்ளம் அவனிடம் பரிணமித்திருத்தல் வேண்டும். இலக்குவனது விருப்பத்தை உணர்ந்தவள் போல் தியாகமும், தொண்டுள்ளமும் மிகுந்த அவள்,

> ''ஆகாத தன்ற லுனக் கவ்வன மிவ் வயோத்தி
> மாகாதலின் இராமன் அம்மன்னவன் வைய மீந்தும்
> போகாவுயிர்த் தாயர் நம் பூங்குழற் சீதையன்றே
> ஏகாயினி இவ்வயின் நிற்றலும் ஏதமென்றாள்''

என்று கூறுவது நம்மை மெய் சிலிர்க்க வைக்கிறது. தொடர்ந்து அவள் இராமன் பின் தம்பியென்றபடி செல்லாதே; குற்றவேல் புரியும் ஒரு பணியாளனாகச் செல்க. மீண்டும் அவன் அயோத்தி நகர் வந்தால் வருக; அன்றேல் அவனுக்கு முன் நீ உன் வாழ்க்கையை முடித்துக் கொண்டுவிடு' என்று கூறுவது இராமனிடம் சுமித்திரை வைத்துள்ள அன்பினையும், அதே அளவு அன்பை இலக்குவனும் இராமனுக்காக தன் உள்ளத்தில் பெற்றிருக்கும்படி அவனை வளர்த்திருக்கும் பாங்கையும் உணர்த்தி மகிழ வைக்கின்றது. இராமனிட்ட கட்டளைகளை நிறைவேற்றும் ஒரு தூய தொண்டனாகவே தன் மகன் வாழ வேண்டும் என்ற அன்னையின் ஆணையை நிறைவேற்றும் உத்தமனாகவே இங்கு அவன் காட்சியளிக்கிறான். உத்தமத்தாய் சொல்லியனுப்பியதுபோல் கானகத்திற்குச் செல்லத் தொடங்கிய நாள் முதலாய் சீதையை அன்னையாகவே போற்றி வணங்குகிறான்.

சத்ரபதி சிவாஜியின் வரலாற்றில் ஒன்றை நாம் இங்கு நினைவு கூறுவது அவசியமாகிறது. வீரசிவாஜியின் தாய் ஜீஜிபாய் சிறுவயதுமுதல் அவருக்கு நல்ல நீதிக்கதைகளைச் சொல்லிவந்ததோடு எந்தப்பெண்ணையும் தாயாய்ப் போற்றுதல் வேண்டும் என்று ஆடவருக்கு இருக்கவேண்டிய நன்னெறியினையும் போதித்து வந்தாள்.

ஒரு முறை பகைவர்கள் வீரசிவாஜியை வீழ்த்த பேரழகி ஒருத்தியை பல்லக்கில் கொணர்ந்து அவர்முன் நிறுத்தியபோது 'தாயே! நின்னை வணங்குகிறேன் என்று அவளைப் போற்றித் துதித்தாராம் அவர். இச்செயல் கண்டு பகைவர்கள் வெட்கித் தலைகுனிந்தனராம். அவ்வரலாற்றை இங்கு இலக்குவனுக்கும் ஒப்பிடலாம்.

**தூய தொண்டாற்றல் :**

கங்கைக் கரையில் இராமனும் இலக்குவனும், சீதையும் குகனின் நாவாய்க்காக காத்து நின்றபோது இரவு வந்துற்றது. தருப்பைப் புல்லால் ஆன பாயலில் அண்ணனும், அன்னையும் உறங்க இலக்குவன் அவர்களைக் காவல் செய்யும் பணியாளனாய் வரி வில்லேந்தி காலை வரும் வரை இமைக்கவும் மறந்தவனாய் விழிப்புடன் அவர்களைக் காத்து நின்றான் எனும் போது அவன் தூய தொண்டனாகிறான். இப்பணிகளை தன் கடமையாய் மட்டும் எண்ணிச் செய்யவில்லை. தமையன் மீது கொண்ட பேரன்பினால் அவனுக்குத் தொண்டாற்றும் வாய்ப்பு கிட்டியதே என்ற மகிழ்ச்சிப் பெருக்குடன் கருத்தூன்றிச் செய்தான்.

இராமனும், சீதையும் எவ்வித குறையுமின்றி இருக்க மெய்வருத்தம் பாராது, பசி வருத்தம் பாராது கடினமாய் உழைத்து அழகியதோர் பர்ணசாலையொன்றை இளவல் அமைத்துத்தந்து அருந்தொண்டாற்றியது இங்கு குறிப்பிடத்தக்கது. குறிய தூண்களை நிறுத்தி அவற்றின்மீது நீண்ட மூங்கில்களை ஒழுங்குபட வைத்து தேக்கிலைப் படலையால் மூடி மறைத்து, அதன் மேல் பூக்கள் மிக்க நாணல் புல்லால் கூரை வேய்ந்து, நெடிய மூங்கில்கள் சூடி மதிலமைத்தான். மயில் தோகையால் மேற்கட்டியமைத்து கூரைகளின் அடிவாரத்தில் நீண்டு தொங்கும் புல், தழை முதலியவற்றை கொய்து இள மூங்கில்களால் அரண் செய்து புதிய பூக்களை அழகு பெறச் சிதறி இராமனும், சீதைய இனிதே வைக வசதியான பர்ணசாலையை இயற்றினான் இலக்குவன். இதன் அழகை கவிஞர்

'மாய நீங்கிய சிந்தனை மாமறை
தூய பாற்கடல் வைகுந்தந் சொல்லலாம்
ஆய சாலை யரும்பெறல் அன்பினால்
நேய நெஞ்சின் விரும்பி நிரம்பினான்'

என்று போற்றுகிறார். அரண்மனையில் குறையேதுமின்றி இனிதிருந்த வள்ளலுக்கும் வாய்த்த மனையாள் சீதைக்கும் கானகத்தில் ஒரு சிறு குறையும் இருத்தல் கூடாது என்று கவனமாய்ப்பார்த்துப் பார்த்துப்பண்ணிய அப்பர்ணசாலை சாதாரண குடிலல்ல; இலக்குவன் இராமன் மீது கொண்ட நேசத்தாலும் பாசத்தாலும் பின்னப்பட்ட அன்புச் சாலை, அதியச் சோலை என்றே கூறினும் மிகையாகாது. இலக்குவனின் கைத்திறம் கண்டு பர்ண சாலையமைக்கும் நேர்த்தியை எங்கு நீ கற்றனை என்று வினவிப் பாராட்டியதோடு தனக்காக இளவல் இங்ஙனம் கடுமையாய்ப் பாடுபட நேர்ந்ததே என வருந்தியும் 'இடருனக்கு இழைத்தேன் நெடுநாள்' என்றான் இராமன். அதற்கு இலக்குவன் 'அரசு நிலை நீங்கித் தவநிலை மேற்கொண்ட நின் கோலத்தை நான் கண்டதே துன்பம். மற்றுனக்குப் பணி செய்யும் பேறு நான் பெற்ற பேரின்பம் என்று கூறுவது அவனது பண்பட்ட தொண்டுள ளத்தைக் காட்டுவதாகும்.

**அவதார மகிமை :**

இராமன்பால் இலக்குவன் கொண்ட எல்லையற்ற அன்பிற்கு, அவ்வன்பின்

அடிப்படையில் இராமனுக்கு இன்னலிழைப்பார் மேல் அவன் கொண்ட சினத்திற்குத்தகுந்த காரணமுண்டு. அக்காரணமாவது அவன் திருமாலவன் பள்ளிகொண்டிருக்கும் ஆதி சேடனின் அவதாரமேயாகும். இராமனது முடி சூட்டு விழாவிற்குத் தடையாய் நின்ற தந்தை மீதும், தாய்மீதும் கோபங் கொண்டு நின்ற இலக்குவனது தோற்றத்தை வருணிக்கும் பாடலில் இவ்வுண்மையைக் காணலாம்.

'கண்ணிற் கடைத்தீயுக நெற்றியில் கற்றை நாற
விண்ணிற் சுடருஞ் சுடர் நாணமெய் நீர் விரிப்ப
உண்ணிற்கும் உயிர்ப்பெனும் ஊதை பிறக்க நின்ற
அண்ணற் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்'

என்ற பாடலே அது. மற்றும் தாய் தந்தையரை முனிதல் அறமென்று என இராமன் அறிவுறுத்திய போது, 'எனக்கு நற்றாதையும் நீ! தனி நாயகன் நீ! வயிற்றில் பெற்றாயும் நீயே' என்று இராமன் ஒருவனே தனக்கு எல்லா இன்றியமையா உறவுகளாய் நிற்பவன் என்று இலக்குவன் கூறுவது திருமாலைத் தாங்கி நிற்கும் ஆதிசேடனாகிய அவதார புருஷனே அவன் என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

### பக்தியின் மொத்த உருவம் :

பக்தியின் இலக்கணமாகப் பேசப்படும் பற்பல கருத்துக்களுக்கு இணங்க இராம பக்தியைச் செலுத்தி வந்தவன் இலக்குவன் எனலாம். 'பக்தி என்ற உள்ள நெகிழ்ச்சியில் பரிபூரணமாக ஈடுபட்டுவிட்டால் எல்லாம் ஈசுவர சாந்நித்தியம் பெற்று விடுகின்றது' என்று கூற்றிற்கேற்ப இலக்குவன் தாய், தந்தை, தமையன், தலைவன், தோழன், ஆண்டான் ஆகிய எல்லாருமாக இராமனையே கொண்டு கணமும் அவனை விட்டுப் பிரியாமல் மனத்தாலும் மொழியாலும் காயத்தாலும் சேவைகள் பலவற்றைச் செய்து இராம பக்தியிலேயே தன்னை ஐக்கியப் படுத்திக் கொண்டவன். 'பக்தியின் லட்சணம் ப்ரவசம்' ஞான மார்க்கத்தில் சமாதி எப்படியோ அப்படியே பக்தி மார்க்கத்திலும் பரவசம் ஜீவன் முக்தி நிலைக்கு அடையாளம்' என்பர். இதற்கேற்ப இராமனுக்குச் சேவை செய்வதிலும், உள்ளம் முழுவதும் அவன் நினைவாய் வாழ்வதிலும் பரவசப்பட்டவன் இலக்குவன். 'அடியவனாக அவன் பின் செல்' என்ற தாயின் கட்டளையை சிரமேற் கொண்டு இராமனுக்குத் தொண்டாற்றவில்லை அவன். எவருக்குமே கிட்டாத அரிய வாய்ப்பாகவே அதை எண்ணி மகிழ்ந்து உள்ளம் முழுதும் அதில் ஈடுபட்டு தொண்டுகள் செய்தது இதற்குச் சான்று.

பக்தியில் சாந்தம், தாஸ்யம், சகியம், வாத்சல்யம், மதுரம் என்ற அநுபவங்கள் உண்டு. சாந்தமென்பது நினைப்பு. தாஸ்யம் என்பது பணி செய்வது. சகியம் என்பது தோழமை பாராட்டுவது. வாத்சல்யம் என்பது அன்பை குழந்தை போல் காட்டுவது. மதுரம் என்பது காதலி போல் இன்பம் பெறுவது. இவற்றில் இலக்குவன் தாசானு தாசனாய் இருந்து சேவை செய்தவன் என்பதை இக்காண்டம் உணர்த்துகின்றது. பால் பொங்குவது என்பது என்ன? பாதிப் பாத்திரத்தில் இருந்த திரவமான பால் முழுப் பாத்திரத்திலும் பரவி எல்லோருக்கும் புலனாகும் அற்புதச்செயலேயாகும். பக்தியும் அதுபோல் ஆடல், பாடல், கோபம், தாபம், சேவை ஆகிய மெய்ப்பாடுகளால் புறத்தே புலனாகும். ஆம். இராமன் மேல் கொண்ட எல்லையற்ற பக்தியே பல சமயம் இலக்குவனின் சீற்றத்திற்குக் காரணமாயிற்று எனலாம். இராமனுக்கு இன்னலிழைப்பவர்

யாவராயினும் அவர்களைக் கணமும் சகித்துக் கொள்ள முடியாத இலக்குவனின் எல்லையற்ற பக்தியின் வெளிப்பாடே அவனது கோபம், தொண்டு, இராமனை ஒரு போதும் பிரிய மனமின்மை, அண்ணலின் சொற்களுக்குக் கட்டுண்டு நிற்றல் என்றால் அது மிகையன்று, மற்றும் மனம், வாக்கு, மொழி ஆகிய முக்கரணங்களால் செய்யப்படும் தன்னலமற்ற தூய சேவையே பக்தியாகும். நாட்டிற்கு இங்ஙனம் சேவை செய்தால் அது தேசபக்தி என்றும் குருவிற்கு இங்ஙனம் சேவை செய்தால் அது குருபக்தி என்றும் இறைவனுக்கு இங்ஙனம் சேவை செய்தால் இது இறை பக்தி என்று போற்றப்படும். இலக்குவன் இங்ஙனமாய் மானிட வாழ்வில் நிற்கும் இறைவனாகிய இராமனுக்குச் சேவை செய்தவன் ஆதலின் அவனை ஓர் ஒப்பற்ற பக்திமான் எனலாம்.

இவ்வாறு அயோத்தியாகாண்டம் இலக்குவனை இராமன் மீது பேரன்பு கொண்டு உருகும் எழில் உருவாய், பாசத்தின் பிழம்பாய், தாய் சொற் போற்றும் நல்ல புதல்வனாய், சேவை செய்யும் சிறந்த அடியவனாய், இணையற்ற பக்திமானாய்க் காட்டி இப்பாத்திரத்தை நம் உள்ளங்களில் நீங்கா இடம் பெறச் செய்கிறது



## கம்ப ராமாயணச் சிறப்பு

உலகத்துப் பல பிரபல மொழிகளில் உள்ள மிகச் சிறந்த காவியங்களுள் ஒன்று வான்மீக இராமாயணமென்பர். வான்மீகி முனிவரது 'உரையின்படி நான் தமிழ்ப் பாவினால் உணர்த்திய'தென்று கம்பர் வான்மீகத்தின் வழிநூலாக இயற்றிய ராமாயணம், அழகிலேயன்றி* அளவிலும் வான்மீகத்தினும் சிறந்து விளங்குகின்றதென்று இரண்டு நூல்களையும் ஒப்பு நோக்கி ஆராய்ந்தோர் சிலர் கூறுவர். இதனை வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லார் எல்லாரும் ஒப்புக் கொள்ளினும், வான்மீகத்துக்கு இழுக்கு அன்று; பெருமையேயாம்; தந்தையினும் மகன் சிறப்புடையனாதால், தந்தையின் சிறப்பைக் குறைபாது, (அத்தகைய புத்திரனுக்குப் பிதாவாம் பெருமையால்) அதிகப்படுத்துவதாமாதலால். தந்தையின்றேல், மகன் இன்மை போல, வான்மீகமின்றேல், கம்பராமாயணமு மின்றாம். தக்கவன் ஒருவன் அடைந்த பிதிரார்ச்சிதச் சொத்து, அவனாற் கழித்தற்பாலன கழிக்கப்பட்டும், சீர்திருத்தற்குரியன சீர்திருத்தப் பெற்றும், நூதனமாகச் சேர்க்கத் தக்கன சேர்ப்புண்டும், எல்லா வகைகளிலும் மேன்மையுற்று விளங்குவதுபோல, முதல் நூலாகிய வான்மீகத்தினும் வழி நூலாகிய கம்பராமாயணம் சிறந்து விளங்குகின்றது. இவ்வாறு கூட்டவும் குறைக்கவும் மாற்றவும் பெற்ற பகுதிகளிலே, பல, நூலினிமையை அதிகப் படுத்துவனவாம்; வேறு பல, வான்மீகர் கால நாகரிகத்துக்கு இசைய அவர் கூறியவைகள் கம்பர் கால நாகரிகத்துக்கு ஏலாதனவானதனால் பிந்திய காலத்திற்குப் பொருத்தமாக மாற்றப்பெற்றனவாம்.

— திரு. வெ. ப. சுப்ரமண்ய முதலியார்

*வான்மீகம் 24,000 சுலோகங்களை யுடையது; கம்பராமாயணம் 12,000 விருத்தங்கள் உள்ளது; ஆயினும் சுலோகங்களின் குறுமையையும் விருத்தங்களின் நெடுமையையும் நோக்கக் கம்பராமாயணமே அளவிற் பெரிதாம்.

# குகன்

*

பேராசிரியர். திரு. போ. மணிவண்ணன்

இராமாவதாரத்தில் அவதாரப் புருஷன் இராமனால் மிகவும் நேசிப்புக்குள்ளானவன், குகன். கங்கைக்கரையின் வேடுவர்களுக்கு அரசனாகத் திகழ்ந்தவன். அவனது பாத்திரம் அயோத்தியா காண்டத்தில் எப்படிப் படைக்கப்பட்டுள்ளது என்பதைப் பார்ப்பேரம்.

இந்தப் பரந்த உலகில் பல்வகைப்பட்ட மாந்தர்கள் இருக்கிறார்கள். மிகக் கடுமையான புறத்தோற்றம் உடையவர், மிக இனிய பண்புடையவராய் இருத்தலும்; மிகவும் விரும்பத்தக்க புறத்தோற்றம் உடையவர் மிகக்கேடான பண்பாடு உடையவராய் இருத்தலும் உண்டு. இவ்வகையில் குகன் புறத்தோற்றத்தைப் பார்ப்போம்.

மிக நெடிய உயரம். மையை உடல் முழுதும் பூசினாற் போல கரிய வண்ணம். விடமுடையபாம்புகளும் நடுங்கும் பார்வை. இப்பார்வையை,

'நச்சு அராவும் நடுக்குறு நோக்கினான்'

என்கிறான் கம்பன். முகத்தில் எப்போதும் கோபமே கொழுந்து விட்டு எரிகிறதாம். இதை,

'சீற்றம் இன்றியும் தீயெழ நோக்குகின்றானாம்'

என்கிறான் கம்பன். குகனது மார்பைக் கூற வந்த கம்பநாடன்,

'கண் அகன் தடமார்பு எனும் கல்லினான்'

என்ற வரியில் மார்பு இருக்க வேண்டிய இடத்தில் மார்புக்குப் பதிலாக கல் இருந்தது என்று கரடு முரடான மார்பைக் கவிதையில் செதுக்கியுள்ளான்.

குன்றம் போன்ற திரண்ட தோள். அதில் நாண் ஏற்றப்பட்ட வில்லின் முகவரிகள் வரிவரியாய் உள்ளன. அசைந்து நடக்கையில் சொம்பு, பறை போன்ற வாத்தியக் கருவி களின் அச்சம் விளைவிக்கும் சப்தம் ஒலிக்கும். இடுப்பில் 'காழகம்' என்னும் அரைக்காற் சட்டை. உடையை இறுக்குவதற்குப் புலிவால் கச்சை. முழங்கை வலியமயிர் பனை மரத்தை நினைவு கூர்கிறது என்று கூறுகிறான் கம்பன்.

இப்படியான வெறுக்கத்தக்க புறத்தோற்றத்தைக் கொண்டுள்ள குகன் ஒருவகை யான முரண் அணியுடன் கம்பனால் அறிமுகம் செய்து வைக்கப்படுகிறான்.

கங்கைக் கரையில் இராமன் வனம்புகும் கோலத்துடன் தங்கியிருக்கிறான். அவனைச் சுற்றி அந்தணர்களும், முனிவர்களும், யோகிகளும் நிறைந்துள்ளார்கள். புறத் தூய்மையுடனும் அகத் தூய்மையுடனும் அவர்கள் திகழ்கிறார்கள். அவர்களின் முகத்தூய்மை போலவே தங்கியுள்ள இடமும் தூய்மையாக விளங்குகிறது. நறுமணம் கமழும் இராமன் இருப்பிடத்தில் திடீரென மீன் நாற்றம் வீசுகிறது. வியப்புடன் அனைவரும் திரும்பிப் பார்க்கிறார்கள். இலக்குவன், குகனது வருகையையும் குகனது குண நலனையும் எடுத்துரைக்கிறான்.

> "......
> கொற்றவ! நின்னைக் காணக் குறுகினன் நிமிர்ந்த கூட்டச்
> சுற்றமும் தானும் உள்ளம் தூயவன் தாயின் நல்லான்
> ஏற்றுநீர்க் கங்கை நாவாய்க்கு இறைகுகன் ஒருவன்"

என்ற பாடல் மூலம், 'உள்ளம் தூயவன்' என்ற வரி குகனின் அகவழகைப் பறைசாற்றுகிறது. வெறுக்கத்தக்க புறவழகு கூட விரும்பத்தக்கதாகி விடுகிறது. எவ்வித எதிர் பார்ப்பும் இல்லாமல் அன்பைப் பொழிகிறவள் தாய். ஆனால் இங்கு குகன் 'தாயின் நல்லான்' என்று பாராட்டப்படுவதன் மூலம் அவனது அன்புள்ளத்தை உணர முடிகிறது.

வேடர்களுக் கெல்லாம் அரசனாக இருக்கிறான் என்று கூறாமல் 'இறை' என்று இலக்குவனால் குறிப்பிடப்படுவதிலிருந்து குகன்

> "முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப்படும்"

என்ற வள்ளுவனின் வாய்மொழிக்கேற்ப வணங்கப்படுவதை; மக்களிடம் செல்வாக்கு கொண்டிருப்பதை அறியலாம்.

முதன் முதலில் இலக்குவன் குகனைப் பார்த்து 'நீ யார்'? என்று கேட்டதற்கு

> "தேவா! நின்கழல் சேவிக்க வந்தனன்
> நாவாய் வேட்டுவன் நாயடியேன்"

என்று பதிலிருத்தமையிலிருந்து வேடர் குலத் தலைவனின் பணிவும் பளிச்சிடுகிறது.

இவ்வாறு குகனது பாத்திரப் படைப்பு புறத்தோற்றத்திற்கும் அகப்பண்பிற்கும் நேர் முரணாய் உள்ள பாத்திரப் படைப்பாக விளங்குகிறது. பலாப்பழத்தைப் போல புறப் பகுதி முள்ளாகவும், சுரசுரப்பாகவும் காட்சி தருகிற குகன்; வெறுப்பை ஏற்படுத்துகிற குகன்; இனிய பலாச்சுளைகளைப் போல பண்பில், குணத்தில் தித்திப்பை ஏற்படுத்துகிறவனாகத் திகழ்கிறான்.

பிற பாத்திரங்களின் மூலமாக குகன் பாத்திரம் எவ்வாறு செதுக்கப்பட்டுள்ளது என்பது ஒரு முழுமையானப் பார்வையாகும்.

> "உள்ளம் தூயவன்"
> —இலக்குவன்

"தாயின் நல்லான்"
—இலக்குவன்

"கங்கை நாவாய்க்கு இறைவகன்"
—இலக்குவன்

"நாம் ஓர் ஐவர்கள்"
—இராமன்

"என்னுயிர் அனையாய் நீ"
—இராமன்

"இளவலுன் இளையான்"
—இராமன்

"நன்னுதலிதவள் நின்கேள்"
—இராமன்

"யாதினும் இனிய நண்ப"
—இராமன்

"இன்துணைவன் இராகவனுக்கு"
—பரதன்

"இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தோன்"
—பரதன்

"தந்தையினும் களிகூரத் தழுவினான்"
—கம்பன்

"...................... தகவுடையோர்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்"
—கம்பன்

"உங்கள் குலத் தனி நாதற்கு உயிர்த்துணைவன்"
—சுமந்திரன்

இராமன், இலக்குவன், பரதன், கம்பன், சுமந்திரன் போன்றோரின் கூற்றிலிருந்து குகன் பன்முகப்பட்ட பாத்திரமாகப் பட்டை தீட்டப்பட்டிருப்பதைக் காண்கிறோம். குகன், அண்ணனாக, தம்பியாக, நண்பனாக, தோழனாக, துணைவனாக, தந்தையாக, தாயாக, அரசனாக, இறைவனாக பாவிக்கப்பட்டிருக்கிறான்.

குகனை, இலக்குவன், அண்ணனிடம் (இராமன்) அறிமுகம் செய்துவைத்தபிறகு குகன் மரியாதை நிமித்தமாய் நிற்கிறான். இராமன் 'இருத்தி' என்று அன்புக் கட்டளை இட்டும் உட்காரவில்லை. நின்று தன் மரியாதையைத் தெரிவிக்கும் பண்பாட்டை

"இருத்தி ஈண்டு" என்ன லோடும்
இருந்திலன்; எல்லை நீத்த
அருத்தியன்......"

என்ற இப்பாடல் எடுத்துக்காட்டுகிறது.

புதிதாக வந்தவர்களுக்கு விருந்து உபசரிக்கும் பண்பாட்டை மறவாதவனாய் நாவாய் மறவன் திகழ்கிறான்.

"தேனும் மீனும்
அமுதினுக்கு அமைவ தாகத்
திருத்தினன் கொணர்ந்தேன்; என்கொல்
திருவுளம்? ......."

மீனையும், தேனையும் 'உண்டருள்க' என்று சொல்லியிருந்தால் கட்டளையிடுவதைப் போலிருக்கும் என்பதை உணர்ந்து 'என்கொல் திருவுளம்?' என்றான் குகன். இவனது பேச்சில் அன்பின் ஆழமும், வஞ்சகமற்ற மனப்பாங்கும் நன்கு வெளிப்படுகின்றன. 'என் கொல் திருவுளம்?' என்ற அடக்கமான வினாவில் குகனது நயத்தகு நாகரிகமும் வியத்தகு பண்பாடும் வெளிப்படுகின்றன. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம். குகனது மனப்பான்மையை விளக்க சில சொற்களே போதுமானவையாய் அமைந்துவிட்டன.

சில வினாடிப் பொழுதுகளில் இராமன் நெஞ்சிலும் குகனின் நெஞ்சிலும் நட்பின் விதைகள் ஆலமாய் அவதாரம் எடுத்தன. குகன் தந்த உணவை இராமன் உண்ணா விட்டாலும் முழுமையாக ஏற்றுக் கொண்டதாகக் கூறியதால் அந்த அங்கீகாரத்தில் ஆனந்தமும் அன்பும் வேர்விட்டது, குகனுக்கு.

இராமன் குகனைப் பார்த்து, 'ஐயா, நாளை நாங்கள் இக்கங்கையாற்றைக் கடந்து செல்ல இருக்கிறோம். ஆதலின், உன் சுற்றத்தாரோடும் உன்னுடைய ஊருக்குச் சென்று, நாளை காலை இவண் நாவாயுடன் வந்து சேர்க' என்று கூறினான். இவ்வார்த்தையைக் கேட்டதும், குகன் பேசுகிறான்.

"............ காதலான் உணர்த்துவான் இப்
பார்குலாம் செல்வ! நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன்யான் இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன் ஆனது ஐய! செய்குவன் அடிமை" என்றான்.

மணிமுடி அரசகோலத்தில் காட்சி தர வேண்டிய இராமன் தவக்கோலத்தில் காட்சி தருவதை எண்ணி குகன் கண்ணீர் வடிக்கின்றான். இக்கோலத்தை கண்டு நான் என் கண்களைப் பிடுங்கி எறிந்துவிடாமல் இருக்கிறேனே என்று மிகுதியாய் வருந்துகிறான். 'சாவில் சாதல்', 'நோவில் நோதல்' நண்பர்கட்கு இலக்கணமாய் கூறுவர் நல்லோர். அதுபோல் இராமனது துயரத்தில் பங்குகொள்ளும் நல்லநண்பனாய் குகன் திகழ்வதால் இராமனை நீங்கி தன்னூர் சென்று மகிழ மறுகின்றான் குகன்.

"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின் நோய்
தன்னோய்போற் போற்றாக்கடை?"

என்ற வள்ளுவன் வாய்மொழிக்கேற்ப பிறர் துன்பத்தைத் தன்துன்பமாய்க் கருதும் பண்பட்டவனாய் குகன் திகழ்கிறான். கல்வியறிவு இல்லாதவனாயினும் உண்மையறிவு உடையவனாய் விளங்குகிறான்.

குகனின் கண்களின் மூலம் குகனது ஈரமான அன்பை உணர்ந்து கொண்ட இராமன்

''யாதினும் இனிய நண்ப! இருத்தி ஈண்டு எம்மொடு''

என்றான். அந்த அன்பை உதட்டில் உச்சரிக்காமல் விழிகளில் உச்சரித்தான் இராமன். 'வாயால் வெளியிடாத அன்பே மிக உயர்ந்தது' என்ற பழமொழிக்கு ஏற்ப அன்பு தாழுடைத்து கண்ணீரில் தெரிவித்தான். 'யாதினும் இனிய நண்ப' என் றவிளியிலே எவ்வளவோ அன்பைச் சொரிந்துவிடுகிறான், இராமன். அன்பில் இன்புற்ற குகனும் காவல் மேற்கொண்டான்.

குகனொடு பயணித்து மறுகிரையிலிறங்கிய இராமன் 'சித்திரக்கூட மலைக்குச் செல்லும் வழி யாது?! என்று கேட்டதும் குகன் கீழ்க்கண்டவாறு பேசுகிறான்.

''நெறியிடு நெறிவல்லேன்; நேடினென் வழுவாமல்
நறியன கனிகாயும் நறவு இவை தரவல்லேன்;
உறைவிடம் அமைவிப்பேன்; ஒருநொடி வரைஉம்மைப்
பிறிகிலென் உடன்ஏகப் பெறுகுவன் எனின் நாயேன்''

செல்வதற்கு அரிய வழிகளையும் செல்லக்கூடிய வழிகளாக்கிடும் வன்மை உடையவன் என்று கூறுவதின் மூலம் நல்ல வழிகாட்டியாய் விளங்குகிறான். உணவு, உறைவிடம், காவல் மூன்றுக்கும் தான் ஏற்பாடு செய்வதாய் சொல்லும் குகன் 'ஒருநொடி வரை உம்மைப் பிறிகிலென்' என்பதனால் அவன் இராமஇலக்குமணரை அடைக்கலப் பொருளாக்‌ கொண்டு அளவுகடந்து நேசிக்கும் பான்மை விளங்குகிறது.

தன்னை அழைத்துச் செல்வதால் ஏற்படும் நன்மைகளை குகன் கீழ்காணும் பாடலில் பட்டியலிடுகிறான்.

''கல்லுவென் மலையேனும் கவலையின் முதல்யாவும்:
செல்லுவென் நெறி தூரம்: செறிபுனல் தரவல்லேன்;
வில்இனம் உளென்; ஒன்றும் வெருவலென்; ஒருபோதும்
மல்லினும் உயர்தோளாய்! மலரடி பிரியேனா''

எதற்கும் அஞ்சேன்; 'அனேக வில் வீரர்களை உடையேன்' என்பதில் பெரிய படைக்குத் தளபதியாகத் திகழ்வதை உணரமுடிகிறது. இராமன் நாடாளவேண்டிய அரசன். குகன் காடாண்டுகொண்டிருக்கும் அரசன். 'மலரடிபிரியேன்' என்று பேசுதால் குகனால் இராமன் வழிபாட்டிற்கு உரியவனாய் வணங்கப்படுவது தெளிவாகிறது. இராமன் குகனின் அன்பில் நனைந்து விடுகிறான்.

குகனுடைய தூய அன்பு, இராமனை, இரகுகுலத்தான் என்பதை மறக்கச் செய்து விட்டது. குகன், நாவாய் வேட்டுவன் குலத்தில் பிறந்தவன் என்பதையும் மறக்கச்

செய்தது. வேறுபாடுகள் அனைத்தையும் மீறித் தோன்றும் இந்த அன்பு வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்ட இராமன் குகனை அன்பு பாராட்டுகிறான்.

"......
என்னுயிர் அனையாய் நீ; இளவலுன் இளையான்; இந்
நன்னுத லவள்நின்கேள்; நளிர்கடல் நிலமெலாம்
உன்னுடையது; நான் உன் உரிமையின் உளென்"

ஜனகன் மகளும் தசரதன் மருமகளும், தன் மனைவியும் ஆகிய சீதையை வேட்டுவக் குகனுடைய தோழியாக்கிவிடுகிறான் இராமன். அதோடல்லாமல் உன் எவல்பட ஆள்கின்றேன் என்று சொல்லி குகனை உயர்த்திப் பேசுவதிலிருந்து இராமன் நெஞ்சில் இப்பாத்திரம் முக்கிய இடத்தை ஆக்கிரமித்திருக்கிறது என்று அறியமுடிகிறது.

இராமன் தன்னுடன் பிறந்த சகோதரர்களில் ஒருவராகக் குகனையும் சேர்த்துக் கொள்கிறார். அந்த அங்கீகாரத்தை

"முன்புளம் ஒருநால்வேம். முடிவுளது என உன்னா
அன்புள இனிநாம்ஓர் ஐவர்கள் உளரானோம்"

இவ்வாறாய் வெளியிடுகிறான். உடன்பிறந்த சகோதரர்கள் மூன்று. நீ உடன்பிறவாச் சகோதரன் என்று பேதம் பேசாமல் 'ஒருதாய்ப்பிள்ளைகள்' என்ற உணர்வில் இராமன் குகனது பந்தத்தை, ரத்தபந்தத்துக்கு இணையாகக் கருதியவை தெரிகிறது.

குகனும் இராமனும் பழகிய முறையிலிருந்து தூய்மையானதும் பயன் கருதாததும் ஆழமானதும் ஆன அன்பிற்கு இதுவே கலங்கரை விளக்கமாய் விளங்குகிறது. இராமனைத் தன்னைப் போன்ற மனிதனாகவே மதித்து எவ்விதப் பலனையும் எதிர் பாராமல் அவனிடம் அன்பு பாராட்டியது குகனிடம் நாம் காணும் சிறப்பு. அம்மூவரையும் மிகவும் இளையவர்களாகவே கருதியமையால், ஒருதாய் பிடிவாதம் செய்யும் குழந்தையிடத்துக்காட்டும் பரிவையே குகனும் அவனிடத்துக் காட்டினான்.

"அன்பு இலார் எல்லாம் தமக்குஉரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

ஆதலால் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தன்னால் அன்பு செய்யப்பட்ட இராமனிடம் ஒப்படைக்கத் தயாராய் இருக்கிறான். இராம காதையில் வரும் பாத்திரங்கள் அனைத்திலும் குகனுடைய அன்பு ஒப்புயர்வு அற்றதாய் விளங்கக் காண்கிறோம்.

அயோத்தி மீண்ட பரதன் இராமனுக்கு உற்றதை அறிந்து வருந்தி வருகிறான். பரதன் வருகையை அறிந்த குகன் வஞ்சனையால் அண்ணனை மாய்க்க வந்துள்ளான் என்று யூகித்துக் கொண்டு சினம் கொள்கிறான்.

"கட்டிய சுரிகையன்; கடித்த வாயினன்;
வெட்டிய மொழியினன்; விழிக்கண் தீயினன்;
கிட்டியது அமர்!' எனக் கிளரும் தோளினாள்"

இராமன் மீது கொண்ட அன்பால் வீரம் இவ்வாறு வெளிப்பட்டுள்ளது. தன் அடைக்கலப் பொருளைப் பாதுகாக்க வேண்டுமென்ற நாகரீகம்தான் இதற்குக் காரணம். மேலும் படைகளுக்கும்

"எலியெலாம் இப்படை; அரவம் யான்!" என
ஒலியுலாம் சேனையை உவந்து கூவினான்"

இவ்வாறு ஆணையிட்டு விடுகிறான். குகனின் கோபத்தைக் கம்பன் வல்லெழுத்துக்களை அதிகம் பயன்படுத்தி ஓசையிலேயே எடுத்துக்காட்டுகிறான்.

கங்கைக் கரை வேடர்தலைவன் குகன் எதிர்க்கரையில் பரதன் சேனையோடு வருவதைப் பார்த்து, பரதன் இராமனைக் கொல்லவே வந்துள்ளான் என யூகித்த குகன் தன் கோபம் கொப்பளிக்க தன் சேனையிடம்,

" . . .
வஞ்சனையால் அரசெய்திய மன்னரும் வந்தாரே!
......
உஞ்சுஇவர் போய்விடின் "நாய்க்குகன்" என்று எனை ஓதாரோ

இவ்வாறு பேசுகிறான். 'இடுக்கண் களைவதாம் நட்பு' என்று குறள்மொழிக்கேற்ப குகன் திகழ்கிறான்.

வனம்வந்த இராமன் குகனுடைய எல்லையில் இருக்கிறான். குகனது விருந்தினனாகி, சகோர்தரனாகி, நண்பனாகிவிட்ட இராமனைக் காப்பது குகனின் கடமை. இந்நிலையில் கம்பன் குகனை

"நாடுகொடுத்த என் நாயகனுக்கு இவர்நாம் ஆளும்
காடுகொடுக்கிலர் ஆகி எடுத்தது காணிரோ"

என்றும் பேசவைக்கிறான். நாடாண்ட இராமனுக்கு அயோத்தி அரசைக் காடாண்ட குகன் மீட்டுத்தர விரும்புகிறான் என்று நயம்பட உரைக்கிறான் கம்பன்.

பரதனின் படைபலத்தை நன்கு அறிந்த குகன் இரண்டு காரணங்களால் அவர்களை வெல்ல முடியும் என்று நினைக்கிறான். ஒன்று, பரதன் தன்னுடைய எல்லையைத் தாண்டி குகனது எல்லையில் இருக்கிறான். மற்றொன்று

'ஆழநெடுந்திரை ஆறு கடந்து இவர் போவாரே

என்பதுவுமாகும். 'சகோதரன்' என்று இராமன் சொன்ன சொல் பொய்த்துவிடக்கூடாது என்பதால் தன்னம்பிக்கையுடன் சோதரனுக்காகக் களம்புகுந்தான்.

பரதன் போருக்காக வரவில்லை என்பதை உணர்ந்து கொண்டபின் கோபம் தணிகிறான் குகன். குகன் தன் அண்ணனாகிய இராமனுக்கு எல்லாமாக இருக்கிறான் என்பதை உணர்ந்த பரதன் கூதூகலிக்கிறான். இருவரும் ஒருவரை ஒருவர் அன்பைப் பகிர்கிறார்கள்.

"வந்து எதிரே தொழுதானை வணங்கினான்; மலர் இருந்த
அந்தணனும் தலைவணங்கும் அவனும் அவன் அடி வீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத் தழுவினான் தகவுடையார்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சிந்தையான்"

இதில் எதிர்ப்பட்ட பரதனை குகன் வணங்குகிறான். பரதன் குகனது காலில் விழுந்து வணங்குகிறான். பிரம்மன் வணங்கத்தக்க பெருமையை உடைய பரதன் குகனது காலில் விழுந்து வணங்கியதிலிருந்து குகன் புகழின் உச்சிக்கே போகிறான். ஏனெனில் இராமன் தலைமைச் சிறப்புடையவனாகிறான். 'ஆயிரம் இராமர்கள் சேர்ந்தாலும் ஒரு பரதனுக்கு ஒப்பாக முடியாது' என்று குகன் பேசும்போது இராமனைவிட பரதன் தூக்கிநிறுத்தப் படுகிறான். உச்சிப்புகழ் பரதன், குகன் உள்ளங்காலில் விழுந்ததால், குகனே இராமனைக் காட்டிலும், பரதனைக் காட்டிலும் பெருமைக்குரியவனாகிறான்.

மன்னனாக முடிசூடமறுத்து, மரவுரிதரித்து அண்ணனே ஆளட்டும் என்று அழைக்க வந்த பரதனிடம் அமைச்சனான சுமந்திரன் குகனை அறிமுகப்படுத்துகையில்,

"கங்கை இருகரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள் குலத் தனிநாதற்கு உயிர்த்துணைவன் உயர்தோளான்
......
கொங்கு அலரும் நறுந்தண்தார்க் குகன் என்னும் குறிப்புடையான்"

இவ்வாறு கூறுகிறான். குகனைப்பற்றி சுமந்தரன் தந்த குறிப்புகளில் மிகச் சிறந்தது 'இராமனுக்கு குகன் உயிர்த்துணைவன்' என்பதுதான். இந்த ஒரு குறிப்பே பரதனை அவன் பக்கம் கொண்டு சேர்த்தது.

தசரதனின் காதல் தேவியர் மூவரோடு, பரதனையும் தன் படகில் ஏற்றி துடிப்போடும் துடுப்போடும் கங்கையாற்றை நாவாய்வலவன் கடந்துகொண்டிருக்கையில் பரதன், குகனை, தன் தாய்மார்களிடம்

"இன்துணைவன் இராகவனுக்கு; இலக்குவற்கும்
இளையவற்கும் எனக்கும் மூத்தான்"

இவ்வாறு அறிமுகம் செய்துவைக்கிறான். உடன் பிறவாச் சகோதரனென்று தம் உறவில் விரிசலை விளைக்காமல் 'அண்ணன்' என்று அடையாளம் காட்டியதன் மூலம் இரத்த பந்தங்களுக்கு இணையாக குகன் நேசிக்கப் பட்டிருப்பதைப் பார்க்கமுடிகிறது.

நாடாள வேண்டிய இராகவன் காடாண்டு கொண்டிருப்பதைக் கண்டு, வருத்தம் கொண்டு கானகம் வந்தான் பரதன். வனவாசத்திற்குக் காரணமான சுயநலக்காரியான தன்தாயை (கைகேயி) மிகக் கடுமையாக அறிமுகம் செய்துவைக்கிறான் பரதன். குகனோ மனம் வேறுபடாமல் தாயென வணங்கினான்.

"என்னக் கேட்டு அவ் இரக்கம் இலாளையும்
தன் நற் கையின் வணங்கினன் தாய்என"

கூறுகிறான் கம்பன். இராமனோடு பழகிய குகன் தம்பியர்களையும் இராமன் போன்றவர் எனக்கருதி பழகுகிறான். தாயையும் அவ்வாறே கருதி வணங்கினான். நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம் எனக் கண்டுகொண்டான் கள்ளங்கபடமில்லா குகன்.

அயோத்தியா காண்டத்தில் குகன் பாத்திரம் கம்பனால் மிகச்செம்மையாகச் செதுக்கப்பட்டுள்ளது. அன்புகொள்வதில்; இனிமையாய்ப் பழகுவதில்; பணிவாய்ப் பேசுவதில்; இரக்கம் கொள்வதில்; துன்பத்தில் பங்கெடுப்பதில்; அஞ்சாதநெஞ்சத்தில்; கள்ளங் கபடமில்லா வெள்ளை உள்ளத்தில்; நயத்தக்க நாகரீகம் வேண்டுவதில்; உயிருக்குயிராய் பழகுவதில்; புகழெனின் உயிரையும் கொடுப்பதில்; பழிக்கு அஞ்சுவதில்; பகையை விரட்டுவதில்; உடல், பொருள், ஆவி மூன்றையும் பிறருக்காக அர்ப்பணிப்பதில் என்று பக்குவப்பட்ட ஒரு பாத்திரமாய் குகன் பளிச்சிடுகிறான். தாயாய், தந்தையாய், நண்பனாய்; தோழனாய், துணைவனாய், சகோதரனாய் வேடமேற்று நடிக்காமல் நிஜமாகவே வாழ்ந்து காட்டியிருக்கிறான்.

"கம்பன் புகழ் வாழ்க !
கன்னித் தமிழ் வாழ்க !!"



## கம்ப ராமாயண ரசனை

கம்ப ராமாயணத்தில் உள்ள ரசனைச் சுவை மிகவும் உயர்ந்தது. ரஸிகருடைய அறிவுக்கு அறிவுக்கு அது அமுதமாக நிற்கின்றது. கம்ப ராமாயணத்தின் ரசனைச் சுவையை உணராமல் மற்றச் சுகங்களை மாத்திரம் உணருகிறவர்கள் அதன் சுவையில் செம்பாதிக்கு மேல் இழந்துவிடுகிறார்கள். ராமாயணத்தின் அழகை விஸ்தரிக்கிறவர்கள் ஒவ்வோர் பாகத்தின் அழகை, சிற்சில வேளைகளில் ஒவ்வோர் செய்யுளின் அழகைத்தான் எடுத்துக் காட்டுகிறார்கள். ராமாயணத்தை ஓர் சிற்பியால் சமைக்கப்பெற்ற அரண்மனையாகப் பாவித்து, அவ்வரண்மனையின் ஒவ்வோர் அவயவத்துக்கும் மற்ற அவயவங்களுக்கும் உள்ள பொருத்தத்தையும் அவயவங்களுக்கும் அரண்மனையின் சமக்ர அமைப்புக்கும் உள்ள பொருத்தத்தையும் வியக்தீகரித்து எடுத்துக் காட்டும் விமரிசனங்கள் இதுவரையில் வெளிவரவில்லை.

— அமரர். வ. வே. சு. ஐயர்

# அமைச்சர்கள்-மன்னர்கள்

*

திரு சு. முரளி

உண்மையான கவிதையில் இதயம் மலர்கிறது; கற்பனை மலர்கிறது; மொழித் தளம் மலர்கிறது: மானிட ஆர்வப் மலர்கிறது; உணர்ச்சி மலர்கிறது; சிந்தனை மலர் சிறகடித்துப் பாய்ந்து செல்கிறது என்று கோல்ரிட்ஜ் ஷேக்ஸ்பியரைப் புகழ்கிறார். ஆனால் கம்பன் கலைக் கோயிலில், தெய்வமே மானுடமாக வந்து வாழ்ந்து காட்டிய பெருமையால் நம் இதயம் மலர்கிறது! உணர்ச்சி மலர்கிறது! உண்மை புரிகிறது! அதனால்தான் பாரதி, யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவன் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை! உண்மை வெறும் புகழ்ச்சியில்லை என்று போற்றினார். பன்மொழிப் புலமை வாய்ந்த பாரதி உலக மகா கவிகளைக் கற்றறிந்து ஒப்பு நோக்கி, கம்பன்தான் உலகப் பெரும் புலவர்களில் பெரும் புலவன் என்று மதிப்பிடுகிறார். மேலும்

> "கன்னனோடு கொடை போயிற்று உயர்கம்ப
> நாடனுடன் கவிதை போயிற்று"

என்று தெளிவு படுத்துகிறார். ஆதி காவியமான வடமொழியில் இராமாயணத்தைச் சொன்ன மூவருள் முதல்வரான வான்மீகி தனது நாவினால் சொன்ன கதை :

> "சரிதம் ரகுநாதஸ்ய சதகோடி ப்ரவிஸ்தரம்
> ஏகைகமஷரம் பும்ஸாம் மஹா பாதக நாசனம்"

என்னும் பெருமை பெற்றது, ஆம்! ரகுநாதனுடைய சரிதத்தைச் சொல்லும் நூறுகோடி ஸ்லோகங்களில் வரையப் பட்டுள்ள இராமாயணத்தின் ஒவ்வொரு எழுத்தும் நம் கொடிய மகாபாவங்களைப் போக்கக் கூடியது.

வான்மீகி இராமாயணத்தை கோஸ்வாமி துளசிதாசர் என்ற மகான் ஹிந்தி மொழியில் தோஹா, சௌபாயி என்ற இருவகை எளிய சந்தங்களில் இயற்றி சாதாரண மக்களும் படித்து அனுபவிக்க வகை செய்தார். தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய திராவிட மொழிகளில் பெருங்கவிஞர்களும் மராத்தி, குஜராத்தி, வங்காளி முதலிய வடநாட்டு மொழிகளில் மாமேதைகளான கவிஞர்களும் எழுதி இந்திய நாடெங்கிலும்—உலகம் முழுவதிலும் ஸ்ரீராமபிரானின் தெய்வீக வரலாற்றைப் பரப்பினார்கள். கம்பன் தமிழ் மரபில் தந்தான். இக்கட்டுரையில் கம்பராமாயணத்தில் உள்ள இரண்டாவது காண்டமான அயோத்தியா காண்டத்தில் இடம்பெறும் அமைச்சர்கள், அரசர்கள் குறித்துக் காண்போம்.

அயோத்தியா காண்டம் அயோத்தியில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுவதால் இப்பெயர் பெற்றது. இதில் மந்திரப் படலம் முதலாகத் திருவடி சூட்டுப் படலம் ஈறாக மொத்தம் பதின்மூன்று படலங்கள் உள்ளன. தயரதன் இராமனுக்கு முடிசூட்டுவது குறித்து அமைச்சர்களோடு கூடி ஆராய்ந்த செய்தியைக் கூறுகிறது மந்திரப் படலம். மந்திரம் என்பதற்கு ஆலோசனை என்பது பொருள். தயரதன் அரசவையை அடைந்தான். தன் அமைச்சர்களை அழைத்தான். வசிட்டன் முதலான மாண்புகள் நிறைந்த அமைச்சர்கள் வந்து சேர்ந்தனர். தயரதன் தான் துறவு மேற்கொள்ளவும் இராமனுக்கு முடி சூட்டவும் விரும்புவதாகக் கூறினான். அவன் கருத்தினை ஏற்று வசிட்டன் இசைவாகப் பேசினான். அது கேட்டு தயரதன் மகிழ்ந்தான். ஏனைய அமைச்சர்களின் கருத்தும் அதுவேயாக இருத்தலைச் சுமந்திரன் தெரிவித்தான். தயரதன், சுமந்திரனை இராமனை அழைத்து வரப் பணித்தான். அவனும் இராமன் அரண்மனைக்குச் சென்று அவனைக் கண்டு செய்தி தெரிவித்தான். இராமன் தேர் ஏறித் தயரதனிடம் சேர்ந்தான். தயரதன் இராமனை அரசேற்க வேண்டினான். இராமன் அதற்கு இசைந்தான். இருவரும் தத்தம் இருப்பிடம் சேர்ந்தனர். தயரதன் மன்னர்களுக்கு ஓலை போக்கினான். பின்பு மன்னர்களிடம் தன் கருத்தைத் தெரிவித்தான். அவர்களும் அக்கருத்தினை ஏற்று அதற்குரிய காரணங்களை எடுத்துரைத்தனர். தயரதன் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்திவிட்டு முடிபுனைய நாள் குறிக்க சோதிடரோடு தனி மண்டபம் அடைந்தான். இச்செய்திகளே மந்திரப் படலத்தில் கூறப்பெற்றுள்ளன.

**வசிட்டன் வருகை:**

தயரதன் ஆட்சியில் அவனுக்கு ஆணையிடும் ஆற்றல் உடையவன் மாமுனி வசிட்டன். அவன் அமைச்சர்களுள் முதல்வன்; புரோகிதன்; குலகுரு; பிரம்மரிஷி; தேவர்களான நான்முகன், திருமால், சிவபிரான் என்று சொல்லப்பெறும் மூவர்களோடு சேர்த்து நால்வராக எண்ணப்படுகிற பெருமை பெற்றவன் என்பதை

> "பூவரு பொலன் கழல் பொரு இல் மன்னவன்
> காவலின் ஆணைசெய் கடவுள் ஆம் என
> தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள்
> மூவரின் நால்வர்ஆம் முனிவந்து எய்தினான்." (1317)

எனக் கம்பன் அழகாகச் சொல்கிறான். தயரதன் மந்திர ஆலோசனைக்கு அழைத்ததும் முதலில் வசிட்டரே வருகிறார். பின்னர் அமைச்சர்கள் வந்து அவரையும் மன்னனையும் வணங்கிவிட்டு தத்தம் இருக்கையில் அமர்ந்த அறுபதினாயிரம் அமைச்சர்களின் குண நலன்களைத் தொகுத்து கூறுகிறான் கம்பன்.

**அமைச்சர் மாண்பு:**

அறுபதினாயிரம் அமைச்சர் என்று சொன்னது ஓர் எண்ணிகைக்காக. தயரதன் ஆட்சி புரிந்த காலம் அறுபதினாயிரம் ஆண்டு. (182) அவன் மனைவியர் அறுபதினாயிரவர். (1779) சனகன் அவைக்கு வில்லைத் தூக்கிவந்த வீரர் அறுபதினாயிரவர். (668) என்று கம்பர் குறிப்பிடுவது கவிப்போக்கு எனக் கொள்ளலாம்.

அமைச்சர் பலர் இருப்பினும் அவர்கள் குணநலன் ஒன்றாகவே இருந்தது. இதனை,

"குல முதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பலமுதல் கேள்வியும் பயனும் எய்தினார்
நலம் முதல் நலியினும் நடுவு நோக்குவார்
சலம் முதல் அறுத்து அருந் தருமம் தாங்கினார்" (1318)

என்பார் கம்பர்.

அமைச்சர்கள் குடிப் பிறப்பு, கல்வி கேள்விச் சிறப்பு, நடுவுநிலைமை, சினமின்மை ஆகிய அரும்பண்புகளுடன் திகழ்ந்தனர்.

அமைச்சர்க்கு அழகு வரும்பொருள் உரைத்தல் அல்லவா? அத்தகு பண்பும் உடையவர் என்பதை

"உற்றது கொண்டு மேல்வந்து
உறுபொருள் உணரும் கோளார்"

என்னும் வரிகளால் அறியலாம்.

இதனையே வள்ளுவரும்

"மதிநுட்பம் நூலோ முடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை"

என்று கூறியுள்ளார்.

அரசனுக்குக் கேடு ஊழ்வினையால் ஒருகால் வந்தாலும் அதனை மாற்ற வல்ல விடா முயற்சித் திறம் உடையவர்கள் அமைச்சர்கள்.

வள்ளுவப் பெருந்தகையின்

"ஊழையும் உட்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

என்ற குறள்வழி வாழ்பவப் என்பதை அறியலாம்.

நற்குடிப் பிறப்பினால் வந்த சிறப்பினையுடைய பெரியவர்கள். கற்றற்கு அரிய நுண்ணிய நூல்களையும் கற்றுத் தேர்ந்தவர்கள், மானத்தை நோக்குமிடத்தில் கவரி மானைப் போன்ற தன்மையுடையவர்கள் அமைச்சர் பெருமக்கள்.

மானம் — எந்நாளும் தன்னிலையில் தாழாமையும் ஊழால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம். கவரிமான் இமயமலை போலும் குளிர் மிகுந்த மலைப் பகுதி களில் வாழும் ஒருவகை மான். அந்த மானின் உடலிலிருந்து மயிர் உதிர்ந்தால் அது குளிர் தாங்காது மாண்டுவிடும். அதுபோலத் தம் புகழுக்கு இழுக்கு நேரும் காலம் வந்துழி உயிர் வாழார்; அழிவர். அத்தகு சிறந்த பண்பு பெற்றவர் அக்கால அமைச்சர்.

"மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர் நீப்பர் மானம் வரின்"

என்னும் குறளையும் ஒப்பு நோக்கலாம்.

வினை செய்வதற்கு ஏற்ற காலத்தையும் இடத்தையும் அதற்குரிய கருவிகளையும் அறிந்து தாம் படித்த அரச நீதி நூல்களின் கருத்துகளோடு ஒப்பிட்டு தெய்வத்தையும் நினைத்து அரசியல் அறத்தைப் பெருக்கிய மேலோர்கள், ஒழுக்கத்தையும் புகழ் அடைதற்குரிய செயல்களையும் ஆராய்ந்து நற்பயன்களை அரசனுக்குக் கொடுக்கும் தன்மையுடையவர்களாய் விளங்கினர்.

வான்புகழ் வள்ளுவரும் அமைச்சு என்னும் அதிகாரத்தில்

"கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு"

என்று கூறுகிறார்.

அமைச்சர் இவ்வாறு காலமறிந்து இடமறிந்து நூலறிந்து அரசியல் அறத்தை மன்னனுக்குச் சொல்லும் வன்மை உடையவராய் இருத்தல் வேண்டும்.

அவ்வாறு தான் சொல்லக் கருதியதைக் கூறுமிடத்து மன்னன் சீற்றம் கொண்டாலும், உயிருக்கு அழிவு நேர்ந்தாலும், உண்மையே சொல்லி முக்காலமும் உணர்ந்து பேசும் ஆற்றல் மிக்கவராய் விளங்கினர்.

"நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லை இல் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்
ஒல்லை வந்து உருவன உற்ற பெற்றியின்
தொல்லை நல்வினை என உதவும் சூழ்ச்சியார்"

என்பது கம்பர் வாக்கு.

"நோய் நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

மருத்துவரின் இயல்பு. அதுபோல் மன்னனுக்கு அமைச்சர்கள் மருத்துவர்களைப் போன்று இருந்தனர் என்று கம்பர் கூறுகிறார். அரசனின் ஆட்சி நலமுடன் திகழச் செய்வதற்குரியவற்றைத் தேர்ந்து தெளிந்து செயற்படுத்தியும் தீமை நேர்ந்தால் அதனை ஆராய்ந்து காரணத்தைக் கண்டறிந்து நீக்குதற்குரிய வழிகளை எண்ணித் தக்கது கொண்டு உதவும் தன்மை பெற்றிருந்தனர். அத்தகைய அரிய ஆராய்ச்சி நிறைந்த அமைச்சர்கள் அறுபதினாயிரம் இருப்பினும் ஒரே சிந்தையுடையவர். அவர்கள் அரண்மனைக்கு வந்து வசிட்டனைத் தொழுது அரசனின் அருட்பார்வைபட தத்தம் இருக்கையில் அமர்ந்தனர்.

### தயரதன் தன் உள்ளக் கருத்தை வெளியிடுதல் :

அமைச்சர்கள் எல்லாரும் வந்தமர்ந்தபின் தயரதன் அவர்களது முகத்தை முறையாகப்பார்த்தான். அவர்களை நோக்கி, உலகத்தை அறுபதினாயிரம் ஆண்டுகள்

உங்களுடைய மாட்சிமையால் தாங்கினேன். முதுமை வந்துற்றதால் கானகம் சென்று தவமியற்ற எண்ணியுள்ளேன். இராமனுக்கு அரசை நல்கி, பிறப்பை நீக்கும் மாதவம் செய்ய எண்ணியுள்ளேன். யாது நும் கருத்து?'' என்று கேட்டான்.

**மந்திரக் கிழவரின் மனநிலை :**

இவ்வாறு தயரதன் சொன்னதும் அமைச்சர் அனைவரும், இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தனர். இராமனுக்கு முடிசூட்ட எண்ணியதால் மகிழ்ச்சியும் தயரதன் பிரிவு என்கிற நிலைமையால் மனம் கலங்குதலும் ஆகிய இரண்டு உணர்ச்சிகளும் கொண்டு இரண்டு கன்றுக் குட்டிகளுக்கு மனம் இரங்கும் ஒரு பசுவைப் போல இருந்தனர்.

அமைச்சர்கள் தயரதன் சொன்னதைக் கேட்டு தங்கள் கருத்தை ஒருசேர உடன்பட்டமைக்கு மூன்று காரணங்கள் உள்ளன.

1. துறவு தயரதனுக்கு நன்மை தரும் என நினைத்தனர்.
2. இராமனைப் போன்ற சிறந்த அரசர் இல்லை என எண்ணினர்.
3. இராமன் காடு செல்லக் காரணம் விதியின் வலிமை என ஆராய்ந்து அறிந்தனர்.

இதனால் தயரதன் சொன்னதும் தங்கள் கருத்தை முகத்திலேயே காட்டினர். அதைக் கண்ட வசிட்டன் எழுந்து பேசலுற்றான். தயரதனுடன் பேசும் திறம் வசிட்டனுக்கும் சுமந்திரனுக்கும் மட்டுமே உள்ளதைக் கம்பர் குறிப்பிடுகிறார். பெருமக்களின் உள்ளதைக் கண்ட நான்முகனுக்கு மகனாகிய வசிட்டர்

''நிருப! நின்குல மன்னவர் நேமி பண்டு உருட்டிப்
பெருமை எய்தினர் யாவரே இராமனைப் செற்றார்?
கருமமும் இது கற்று உணர்ந்தோய்க்கு இனிக்கடவ
தருமமும் இது தக்கதே உரைத்தனை தகவோய்'' (1347) எனவும்

மன்னனே ! மக்களும் தேவரும், நரகருமாகிய இனிமை நிறைந்த நிலைபெற்ற உயிர்களுக்குக் கேடு வராமல் பாதுகாத்து அருள்புரிபவர் இராமனைப் போலச் சிறந்தவர் மற்றொருவர் இலர். இராமனது சிறப்பு அத்தன்மையாக இருத்தலின் உனக்குச் செய்தற்கரிய செயலை ஆராய்ந்தால் தெய்வத் தன்மையுடைய துறவறம் அன்றி மற்றொரு செயல் இல்லை'' என்றும் மாமுனி வசிட்டர் சொன்னார். அதனைக் கேட்டு தயரதன் பெருமகிழ்ச்சி அடைந்தான்.

அத்தகைய பெருமகிழ்ச்சியால் ஆனந்தக் கண்ணீர் அரும்ப முனிவனின் மலர்ப் பாதங்களில் வணங்கி, ''இனிய சொல்லினை எம்பெருமான் அருள் அன்றோ தனியன் நானிலம் தாங்கியது. அவற்கு இது தகாதோ? எம் குலத்து அரசர் அந்தமில் அரும் பெரும் புகழ் அவனியில் நிறுவி முந்து வேள்வியும் முடித்து, தம் இருவினை முடித்தார். வந்தது அவ் அருள் எனக்கும்.'' என்று உரைசெய்து மகிழ்ந்தான்.

அப்பொழுது அமைச்சர் அறுபதினாயிரவரின் உள்ளக் குறிப்பை உணர்த்த தேர்வலான் சுமந்திரன் பேசலுற்றான்

கழுத்தில் இடப்படும் கயிற்றையுடைய பெரிய யானைப் படையையுடைய அரசர் களுக்கும் அயோத்தி நகரில் வாழ்பவர்களுக்கும் வசிட்டன் முதலிய முனிவர்களுக்கும்

மனம் மகிழ்ச்சியில் முரசடிக்க, நினக்கு முதல் மகனும் நீல மணி போலும் நிறத்தை யுடையவனுமான இராமனை, செய்யவேண்டிய முறையோடு அரசனாக முடிசூட்டி பிறகு உனக்குத் தக்கதான துறவு மேற்கொள்ளுதலைச் செய்வாய். ..."நின் முதல் மணிப் புதல்வனை முறையால் அரசன் ஆக்கி பின் அப்புறத்து அடுத்தது புரிவாய்" என்று சுமந்திரன் சொன்னதும் இராமனை அழைத்து வருமாறு தயரதன், சுமந்தரனை "நீயே சென்று கொண்டு அணை திருமகள் கொழுநனை" என ஏவினான்.

**தயரதன் முடிவும் அரசவை ஏற்பும் :**

அரசவை ஆலோசனையைப் படைத்துக் காட்டியுள்ள இராமாயணங்கள் எல்லாம் தசரதன் முடிவை அவையோர் போற்றிப் புகழ்ந்து வரவேற்பதாகக் காட்டுகின்றன. இதில் வேறுபாடு காணப்பெறவில்லை.

தெலுகு பாஸ்கர இராமாயணம் மட்டும் ஒரு சிறு மாறுதலைக் குறிப்பிடுகிறது. அதாவது தசரதன் அரசாட்சியில் இருந்து முற்றிலும் விலகாமல் இராமனை இளவரச னாக்கித் தானும் உடனிருந்து ஆள வேண்டும் என மக்கள் விரும்புவதாகக் காட்டுகிறது. கம்பன் முதலான கவிஞர்கள் தசரதன் அரசு துறத்தலுக்காக அவையோர் வருந்தினாலும் இராமன் அரசனாகிறான் என்னும் பெரு மகிழ்ச்சியால் அவ்வருத்தத்தை மறக்கின்றனர் என்று படைத்துக் காட்டுகின்றனர்.

இவ் வேறுபாட்டுக்குக் காரணம் வான்மீகத்தில் இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவதாகத்தான் தயரதன் முடிவெடுக்கிறான். துளசி இராமாயணமும் இதே கருத்தைக் கூறுகிறது.

ஆனால் கம்ப ராமாயணம் அத்யாத்ம இராமாயணம் முதலான காப்பியங்கள் தயரதன் இராமனை அரசனாக்க முடிவு செய்வதாக காட்டுகின்றன. முதுமையைக் காட்டி ஒய்வு வேண்டி தசரதன் இராமனுக்கு முடிசூட்டக் கருதுவதால் அரசன், இளவரசன் என்னும் பட்டங்களில் அதிகார வேறுபாடு இல்லை எனக்கருதி கம்பன் முதலான கவிஞர்கள் இராமனை அரசனாக்க முடிவு செய்வதாக குறிக்கின்றன போலும்!" என்று முனைவர் அ. அ. மணவாளன் அவர்கள் இராமாயண அயோத்தியா காண்டங்கள் ஓர் ஒப்பியலாய்வில் குறிப்பிடுகின்றார். இதுவும் அவரது கருத்து.

**வேற்றரசர்களுக்கு அழைப்பு விடுத்த தயரதன் – வான்மீகம் :**

அருகிலுள்ள அரசர்களையும், தலைமையானவர்களையும் அழைத்து வருமாறு அரசன் ஆணையிட்டான். கால தமதம் ஆகுமென்று கருதிக் கேகய நாட்டரசரையும், சனக மன்னரையும் அழைத்து வரச் சொல்லவில்லை. விழா நிறைவேறிய பின்னர் அவ் விருவரும் நல்ல செய்தியைக் கேள்விப்பட்டு மகிழ்ச்சியடைவார்கள் என்றான் (11·1-47)

பரதன் நம் நகரிலிருந்து வெகு தூரத்தில் இருக்கிறான் சாஸ்திர விதிகளுக்கு ஏற்ற முகூர்த்த தினமாய் இதுதான் (நாளை) இருக்கிறது. இந்த ஒரு காரணத்துக் காகவே இப்போதே உன் பட்டாபிஷேகத்தைச் செய்ய நான் அனுமதிக்கிறேன். (11 4·25)

நான் ஐயமறத் தெளிந்த வேறொரு செய்தியும் உண்டு. உதை தம்பியாகிய பரதன் சான்றோர்களின் வழிமுறையில் அசையாத பக்தியுடையவன், மூத்தோர் மனம் கோணாமல் நடப்பவன், புலன்களை வெ்றவன், தர்மசிந்தை உடையவன். இராமனே,

இத்தகைய உத்தமர்களின் மனம் பிறர் அடையும் நன்மைகளை அறிந்து இயற்கையாகவே மகிழ்ச்சிஅடையும் இயல்பினது (11 4-26, 27)

**கம்ப ராமாயணம் :**

தயரதன் வசிட்டன் மூலம் அரசர்களுக்கு ஓலை அனுப்பக் கட்டளையிடுகிறான்.

**துளசி இராமாயணம் :**

அரசர்களுக்கு செய்தி போக்கியதாக செய்தியே இல்லை. இராம பட்டாபிஷேகத்தை கேள்வியுற்ற மக்கள் பேருவகையுடன் அதற்கான காரியங்களைச் செய்யத் தொடங்கினர் என்று மட்டும் கூறுகிறது.

**பிரகாஷ் இராமாயணம் :**

எல்லா நாட்டு அரசர்களுக்கும் ஏழு தீவுகளுக்கும் இராம பட்டாபிஷேகச் செய்தி தயரதன் ஆணையால் அறிவிக்கப்படுகிறது. பரதனையும் சத்ருக்கனனையும் அழைத்து வருமாறு தயரதன் கட்டளையிடுகிறான்.

இவ்வாறு டாக்டர் அ. அ. மணவாளன் அவர்கள் அயோத்தியா காண்டம் ஓர் ஒப்பியலாய்வு என்னும் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

**மன்னர்கள் தயரதன் கருத்தை வரவேற்றல் :**

தயரதன் சொன்ன சொல்லாகிய கள்ளை பருகிய அரசர்கள் மகிழ்ச்சியுடன், 'அத்த நன்று என்று சொல்லி அறம் இது என உரைத்தனர்.

''மூவெழு முறைமை எம் குலங்கள் முற்றுறப்
பூவெழு மழுவினால் பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு
ஆவ் இவ் உலகம், ஈறு அறன் என்றார் அரோ''

பரசுராமன் செருக்கை அழித்தபோதே இராமனுக்கு இவ்வுலகம் தகுதியால் உரிமையாயிற்று. இதனை வெளிப்படுத்தி முடிசூட்டுதல் மிகவும் ஏற்ற அறம் என அரசர்கள் தங்கள் எண்ணத்தை உவகையோடு தெரிவித்தனர்.

**தயரதன் வினாவும், வேத்தவையின் விடையும் :**

தயரதன் அரசர்களை நோக்கி, ''யான் இது புகல நீர் புகன்ற இப்பொம்மல் வாசகம் உகவையின் மொழிந்ததோ? உள்ளம் நோக்கியோ? தகவு என நினைந்தது எத்தன்மையால்? என்று வினவினான். அரசர்கள் அவனிடம், 'அரசனாதற்குரிய அனைத்துத் தகுதிகளும் இராமனிடம் உள்ளன. ஊருணி நிறையவும் உதவும் மாடு உயர் பார்கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும் கார்மழை பொழியவும் கழனிபாய் நதி வார்புனல் மறுக்கின்றார்கள் யார்? எனச் சொன்னார்கள்.

இராமன் பிறருக்கு நன்மை செய்யும் ஒப்புரவாளன் என்பதைத் தெரிவித்தனர்.

''ஊருணி நிறையவும்'' என்றது
ஊருணி நீர்நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு (215)

என்னும் குறளின் செய்தியுடன் ஒப்பிடத் தக்கது.

பயன்மரம் உள்ளூர் பழுத்தற்றால் செல்வம்
நயினுடை யான்கண் படின் (216)
மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின் (217)

என்னும் குறட்பாக்களில் வரும் மரங்கள் இரண்டினையும் சுட்டும் வகையில்

''பார்கெழு பயின்மரம் பழுத்தற்று ஆகவும்''

என்று சுருங்கச் சொல்லிய திறம் எண்ணி மகிழ்தற்குரியது.

இராமன் அன்புடையவனாய் உள்ளான். அவ்வாறு உயிர்களும் அவனிடம் அன்பு உடையனவாய் உள்ளன என்றெல்லாம் மன்னர்கள் இராமபிரானின் சிறப்பை தயரத னுக்குக் கூறினர்.

பேருவகையுடன் தயரதன், மன்னர்களிடம் இவனை என் மகன் என்ன வேண்டா உங்கள் மகனாகக் கொண்டு போற்றுங்கள் என்று கூறினான்.

பிறகு தயரதன் முடிசூட்டு விழாவுக்கு நல்ல நாள் பார்க்க உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு வரை பொரு மண்டபம் மருங்கு போயினான்.

**முடிவுரை :**

அயோத்தியா காண்டத்தில் வரும் அரசன் தயரதன். அவன் கற்பு போல உலகைக் காப்பவன். அவனுடைய ஆற்றல், அன்பு, பண்பு, குலகுருவிடம் பணிவு, வாய் மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த தியாகம் ஆகிய அரும்பெரும் பண்புகளை இக்காண்டத்தில் காண்கிறோம்.

வசிட்டன் செய்கை இக்காண்டத்தில் தொடங்கி கதை வளர்ச்சிக்குத் துணைபுரி வதை அறியலாம். மன்னனின் நலனில் அக்கறை, ஆராய்ந்த அறிவுத் திறம், சொல் வன்மை, துயரம் வந்தும் துவளாமல் சூழ்நிலையை உணர்ந்து பணிபுரியும் பாங்கு, மக்கள் துயர் களையும் பண்பு, பரதன் நாடாளாவிட்டால் நாட்டில் ஏற்படும் தீங்குகளை உணர்ந்து நாட்டை ஆள வற்புறுத்துகின்ற சமயோசித புத்தி, தவவலிமை போன்ற அரிய குணக் குன்றாக வசிட்டன் விளங்குகிறான்.

சுமந்திரன் தேரைச் செலுத்துவதில் வல்லவன். ஆராய்ந்து தக்க முறையில் பேசும் திறம் மிக்கவன். என்றும் தயரதன் நலனைக் காப்பதில் அக்கறையுள்ளவன். இட்ட பணியை விரைந்து செய்து முடிக்கும் வினைத் திட்பமும் ஆற்றலும் மிகுந்தவன். நல்ல ஆலோசனைகளை வழங்குவதில் வல்லவன். இத்தகைய அரிய பண்புகளின் இருப்பிடமாகச் சுமந்திரனை இக்காண்டத்தில் காண்கிறோம்.

அரசின் நன்மை கருதிய அமைச்சர் பெருமக்கள் கலைத்திறம், கல்வித்திறம், கேள்வி ஞானம், நல்லன செய்யும் இயல்பு போன்ற எண்ணற்ற அமைச்சருக்கே உரிய பண்புகளைப் பெற்றுள்ளனர் என்பதும் இக்காண்டத்தில் காட்டப்பெற்றுள்ளது.

இராம என்னும் மந்திரத்தால் தூய்மை பெற்று திருவடி சூட்டி மகிழும் பரதாழ்வார் போல நாமும் இராம நாமத்தை வாயினால் பாடி மனதினால் சிந்திக்க போய பிழையும், வருபிழையும் தீயினில் தூசாகும். ●

வாழ்க கம்பன்! வளர்க அவன் புகழ்!

# நகர மாந்தர்

*

முனைவர். வே. செல்லாத்தாள்

கம்பராமாயணத்தின் இரண்டாம் காண்டமாக விளங்குவது அயோத்தியா காண்டம். கம்பராமாயணக் கதை வளர்ச்சிக்குத் திருப்புமுனை இக்காண்டத்தில்தான் நிகழ்கிறது எனலாம். இக்காண்டத்தை நிலைக்களனாகக் கொண்டே "நகர மாந்தர்" என்ற இக்கட்டுரை அமைகிறது.

பொதுவாக இலக்கியங்களில் மாந்தர் என்ற சொல் பாத்திரங்களைக் குறிக்கும். இக்கட்டுரையில் 'மாந்தர்' என்ற 'பதம்' நகர மக்களையே குறிக்கிறது. இவர்கள் அக இலக்கியங்களில் கண்டோராகவும், அலர் பேசுகின்ற அயலாராகவும், ஊடல் தீர்க்கும் வாயில்களாகவும் இடம் பெற்றுள்ளனர்.

அரசனது செங்கோலும், கொடுங்கோலும் இவர்கள் மீதே ஊன்றப்படும். எனவேதான் வள்ளுவரும்

"வானோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி" என்றார்.

இத்தகைய குடிமக்களாகிய மாந்தரின் பெருமைகளைச்,

"சேனை வீரரும் திருநல் மாநகர்
மான மாந்தரும் மற்றுள் ளோர்களும்
ஏனை வேந்தரும் பிறரும் யாவரும்
கோனை எய்தினார் குறையும் சிந்தையில்"

எனவரும் பாடலில் கம்பர் காட்டியுள்ளார்

**நகர மாந்தர் :**

நகர மாந்தர்களாக அயோத்தி நகரத்தில் வரும் திருமணமான ஆண்கள், பெண்கள், பரத்தையர்கள், முதியோர், கன்னிப் பெண்கள், இளைஞர்கள், சிறுமிகள், குழந்தைகள், தயரதனுக்குச் சாபமிட்ட விழியிழந்த முதியோர் முதலானவர்கள் இடம் பெறுகின்றனர்.

மன்னன் மக்களுக்கு ஆற்றும் கடமையையும் அவனுக்கும் மக்களுக்கும் உள்ள உறவையையும்,

'கன்னியர்க்கு அமைவரும் கற்பின் மாநிலம்
தன்னை இத்தகைதரத் தருமம் கைதர
மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்''

எனவரும் தயரதனின் கூற்றில் உணரலாம்.

பெண்கள் தங்களுடைய செயிர்தீர் கற்பினைப் பேணுதல்போல அறக்கடவுளின் உதவியினால் இவ்வுலக உயிர்களுக்கு நன்மைகளையே செய்தேன் என்கிறான் தயரதன். இதனால் தயரதன் நகர மாந்தர்கள் மீது வைத்திருந்த அன்பு புலனாகிறது.

நகர மாந்தர்களில் முதலில் வருபவர்கள் பெண்களே.

''மனிதர் வானவர் மற்றுளோர் அற்றம் காத்து அளிப்பார்
இனிய மன்னுயிர்க்கு இராமனின் சிறந்தவர் இல்லை''

என்ற முடிந்த சிந்தனையில் இராமபிரானுக்கு முடிசூட தயரதன் அவை முடிவு செய்கிறது. இராமனுக்கும் இச்செய்தி செல்கிறது. இராமன் அவைபுகச் செல்கிறான்.

அவனது தேர்சென்ற தெரு மங்கலவோசை நிறைந்து ஆரவார முடையதாகத் திகழ்கிறது. இதைக் கண்ட பெண்கள் தங்கள் சிந்தையில் இராமனையே நிறைத்து மன அடக்கத்தை விட்டு, உடன்பிறந்த நாணத்தையும் விட்டு பெண்மான்கள் தெருவில் திரிவது போல கூடியுள்ளார்கள். ஆடவர்கள் ''தாய்ப் பசுவை நினைந்த கன்று போல'' நின்று மகிழ்ச்சியடைகிறார்கள்.

முடிசூடச் சோதிடம் பார்க்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. இதைக் கண்ட மங்கையர் நால்வர் கோசலையிடம் இச்செய்தியினைச் சொல்ல ஓடுகின்றனர். இவர்கள் பணிப்பெண்களோடு சேர்ந்தவர்கள். அவர்கள் சென்ற தன்மையினையும் அடைந்த நிலையினையும்

''ஆடுகின்றனர் பண் அடைவு இன்றியே
பாடுகின்றனர் பார்த்தவர்க்கே கரம்
சூடுகின்றனர்: சொல்லுவது ஓர்கிலர்
மாடு சென்றனர் மங்கையர் நால்வர்''

என்கிறார் கம்பர்.

இவர்களது ஆடலும் வரையறையற்ற பாடலும் ஓரிரு நாட்கள் கூட நிலைத்து நிற்கவில்லை.

### முரசொலியின் முழுப்பயன் :

''இராமன் நாளையே பூமகள் கொழுநனாய் புனையும் மௌலி'' எனக் கூறி வள்ளுவன் முரசை முழக்குகிறான். இம்முரசொலி அயோத்தி மக்களுக்கு அவியுணவாயும், அமுதமாகவும் உள்ளது. அவியுணவும் அமுதமும் வயிற்றுணவு. வள்ளுவன் முரசொலி செவியுணவு. ஆனால் அயோத்தி மாந்தர்க்குச் செவியுணவே வயிற்றுக்குரிய உணவாகிறது. இதன்மூலம் மட்டற்ற மகிழ்ச்சியைத் தரும் பொறியறிவும் சுவையுணவாகும் என்பது புலனாகின்றது.

**அருத்தி மக்கள் அணிநகர் அணி :**

இராமபிரான் முடிசூடும் விழாச் செய்தியைக் கேட்ட மக்கள் ஆர்த்து, களித்து, ஆடிப்பாடி, வேர்த்து, தடித்து (மகிழ்ச்சியால் உடல் பெருத்து) மயிர் சிலிர்த்துத் தயரதனைப் புகழ்ந்துபேசி முடிசூடும் செய்தியைக் கூறியவர்களுக்கெல்லாம் பெருஞ் செல்வத்தை வாரி வாரிக் கொடுக்கின்றார்கள். இச்செயல்களெல்லாம் இராமனது அரசாட்சி மீது மக்கள் வைத்திருந்த நம்பிக்கையைக் காட்டுகிறது.

மறுநாள் முடிசூடும் விழா. அயோத்தி மக்களுக்கு அன்றைய விடியல் விரைவில் வரவேண்டும். விடியலையே நோக்கியுள்ளனர். அவர்களுக்கு அந்தநாளிரவு "என்னல்ல தில்லை துணை" எனத் துன்பத்தையே தருவதாக உள்ளது.

அன்றிரவு மணமாகாத மங்கையர்க்கு மருட்டும் பொய்க்கனா வருகிறது. அக் கனவினையும் இளங்காற்று பாதியில் தடுத்து விடுகிறது. எனவே துடுக்குற்று துயில் கலைந்து எழுந்து விடுகின்றனர். இவர்களுக்குத் தொடர்ந்து உறக்கம் வராததால் பொய்த் தூக்கம் கொள்கின்றனர். ஆனால் இவர்களது எண்ணத்தில் 'இராமன் முடிசூடும்' நிகழ்ச்சியே நிறைந்துள்ளது. எனவே, கூந்தலில் சூடியுள்ள மலர்களில் மொய்த்துக் கொண்டிருக்கும் வண்டுகள் விம்மப் படுக்கையை விட்டு எழுந்து விடுகின்றனர்.

மணமான பெண்களையும் இளங்காற்று உறங்க விடாமல் துன்புறுத்துகிறது. எனவே, நகரிலுள்ள மணமாகாத, மணமான பெண்கள் அனைவருமே துயிலை இழந்து காத்திருக்கின்றனர், முடிசூட்டுவிழாக் காண்பதற்கு.

**ஊடல் மகளிரும் விடியலும் :**

மிக நுட்பமாகக் காதலுக்கு இலக்கணம் வகுத்தவர் திருவள்ளுவர். இக்காதலில் சிறப்புப் பெறுவது "ஊடலும் கூடலும்" இதனை "ஊடுதல் காமத்திற்கின்பம் அதற் கின்பம், கூடிமுயங்கப் பெறின்" என்றார். இத்தகைய ஊடலின் பயன் கூடுதலே ஆகும். இதற்காகவே ஊடியவர்கள் இரவை நீண்டு செல்லுமாறு கேட்பதை இலக்கியங்கள் காட்டுகின்றன.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
தானூட யானுணர்த்தத் தானுணரான்—தேனூறு
கொய்தார் வழுதி குளிர்சாந் தணியகலம்
எய்தா திராக்கழிந்த வாறே"!

என்பது முத்தொள்ளாயிரப் பாடல். இப்பாடலில், ஊடலினால் விடியல் வந்து விடுகிறது. எனவே, இரவுப்பொழுது வீணாகக் கழிந்தது எனத் தலைவி ஊடலை நொந்து கொள் வதாகக் காட்டியுள்ளார். இதே போன்று அயோத்தி மகளிர் தங்கள் கணவன்மார்களோடு ஊடியுள்ளனர். ஊடலைத் தணிக்கும் முயற்சியில் தோல்வியுற்ற கணவன்மார்கள் வருந்துகின்றனர். இவ்வருத்தத்தை நீக்கும் வகையில் விடியல் வந்து விடுகிறது. இனிக் காண இருப்பது "முடிசூட்டு விழா" இது

"ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று"

என்னும் காமம் நீங்க ஏதுவாய் அமைந்து விடுகிறது.

"மலரினும் மெல்லியது காமம்" எனப் போற்றப்படும் காமத்தையே நீக்குவதாக முடிசூட்டு விழா அமைகிறது.

பெண்களுக்கு அழகு சேர்ப்பது அணிகலன்கள். அணிகலன்களோடு மயக்கும் மனம் நிறைந்த மலர்களையும் மங்கையர்கள் மகிழ்ச்சியான காலங்களில் சூடுவர். அயோத்தி நகரப்பெண்கள் முடிசூடும் அன்று செம்பஞ்சுக் குழம்பைக் காலில் பூசுகின்றனர். வளையல்களை அணிகின்றனர். கண்களுக்கு மையெழுதுகின்றனர். அன்றலர்ந்த மலர்களைச் சூடுகின்றனர். அரசகுடும்ப விழாவினைத் தங்கள் இல்ல விழாவாகக் கருதி ஒவ்வொருவரும் தங்களை ஒப்பனை செய்து கொள்கின்றனர்.

ஆனந்தக் களிப்படைந்த மகளிர் சிலர் பல்வேறு வகையான நறுமணப் பொடிகளையும், பூக்கள், சந்தனம், பொன் முதலானவற்றையும் இராமன்மீது தூவ எடுத்து வருகின்றனர். அவர்கள் இராமபிரானைக் காண்கின்றனர். தங்களது குறிக்கோளை மறந்து, அவனைக் காமுறுகின்றனர். அதனால், மன்மதனது மலர் அம்புகள் அவர்கள் மீது பாய்ந்து புண்ணை உண்டாச்குகின்றன. அப்புண்களையும் தங்களது கொங்கைகளையும் கண்களிலிருந்து வடிந்த வெதும்பிய நீரால் கழுவுகின்றனர். இது கம்பனது அளவு கடந்த காதல் சோகக் கற்பனையைக் காட்டுகிறது எனலாம்.

சிலர்—இவன் நாட்டையாள்வதற்குத் தான் உரிமையுடையவன். நமக்கு உரிமையாக மாட்டான் என்கின்றனர். "நோக்குவை யெல்லாம் அவையே போலும்" என்னும் இலக்கண நெறிக்கேற்ப இவர்களது கண்பார்வை சென்ற இடமெல்லாம் இராமபிரானே காண்பதற்குரிய பொருளாக இருப்பதாகக் கம்பர் காட்டியுள்ளார்.

**ஆடவர் அறிந்த இரவுப் பொழுது :**

அயோத்தி நகர ஆடவருக்கு முடிசூடும் நாளின் முந்தைய இரவு பாவியாகவே காட்சி தருகிறது. காரணம் 'இரா' ஊழியாக மாறுகிறது. அவர்களது ஆசை உந்தும் வேகத்திற்கு விடியல் வரவில்லை. இத்தகைய விடியல் வராத இரவைக் கம்பர் "பாவி" என்றே குறிப்பிடுகின்றார்.

பொதுவாக இரவு இன்பத்தைத் தரக்கூடியது. காரணம் ஒய்வு. குடும்பத்தில் அனைவரும் ஒன்றாக இருத்தல்; காதலினங்கள் பிணையுடன் கூடல்; சூரியனின் வெப்பக் கொடுமையில்லை. ஆனால் அயோத்தி மக்களுக்குப் "பாவி"யாகி விட்டது அன்றைய இரவு.

முடிசூடும் திருநாளே தாங்கள் வாழும்நாள் என்கின்றனர் ஆடவர்.

..................... "உயர்
போதின்மேல் உறையும் பேதையும்
ஏழு லோகமும் எண்தவம் செய்த
கண்ணும் எங்கள் மனங்களும்
வாழும் நாள் இது"

இக்கூற்றில் போதில் உறையும் திருமகளும், ஏழுலகில் வாழும் மக்களும், எங்கள் மனங்களும், கண்களும், நெஞ்சங்களும் வாழும் நாள் இது என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. இதனால் கடந்த காலத்தில் ஆடவர் வாழாமையைக் காட்டுகிறது. அதாவது, இராமன் முடிசூடும் நாளை நினைந்து நினைந்தே மற்றைய நாட்கள் வாழா நாட்களாயின.

"கொன்னே கழிந்தன்று இளமை" என்பது போல ஏக்கத்தோடு வாழ்ந்த நாட்கள் வாழா நாட்கள் என்றமையால் இராமனின் ஆட்சியை மக்கள் எதிர் நோக்கி, அவனது குடைக் கீழ் வாழும் நாளையே வாழ்நாளாக எண்ணி உள்ளமை புலனாகும்.

ஆடவர்கள் தங்களை இராமபிரானுடைய தம்பிமார்களாகக் கருதுகின்றனர். இராமனின் உடன்பிறப்புக்கள் மூவர் என்கிறார் கம்பர். உடன்பிறவாத சகோதரர் இருவர் என்கிறார் இராமன். ஆனால் அயோத்தி இளைஞர் அத்தனை பேரும் தங்களை இராமனின் சகோதரர் என்றே கூறுகின்றனர்.

"... ... ... ... ... ... ... நம்பி
தம்பியர் அனையர் ஆனார்
... ... ... ... குமரர் எல்லாம்"

என்பது பாடல். உடன்பிறப்பு, உதவி என்ற நிலையில் அமைந்த சகோதரர் சிலரே. ஆனால் முடிசூடும் விழாவினால் கிடைத்த சகோதரர் இராமபிரானுக்கு எண்ணற்றோர் எனலாம்.

அன்றைய நாளில் அயோத்தி மாந்தரைப் பின்வரும் பாடலில் பட்டியலிட்டுக் காட்டுகிறார் கம்பர்.

"மாதர்கள் கற்பின் மிக்கார்
கோசலை மனத்தை ஒத்தார்
வேதியர் வசிட்டன் ஒத்தார்
வேறு உளமகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார்; அன்னாள் திருவினை
ஒத்தாள்; அவ் ஊர்ச்
சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன்
தன்னை ஒத்தார்".

என்பது அவரது பாடல்.

நகர மாந்தரில் சிலர் முடிசூடிய பின் இராமபிரான் தனது திருக்கரங்களால் ஏழைகளுக்குக் கொடுப்பதற்காகச் சந்தனம், திலகம், இரத்தின மாலைகள், மதயானைகள், குதிரைகள், பொன்னாலாகிய அணிகலன்கள் இவற்றையெல்லாம் வரிசை வரிசையாக வைத்துக் காத்திருந்தனர்.

சிலர், இராமனைப் பெற்றவள் கோசலை, வளர்த்தவள் கைகேயி, இன்று இராமன் முடி சூடியதால் இருவருள்ளும் வளர்ப்புத் தாயாகிய கைகேயிக்கே இன்பம் அதிகம் எனக் கூறுகின்றனர். பெற்ற தாயை விட வளர்ப்புத் தாய்க்கே சிறப்புத்தருகின்றனர். குழந்தைகளின் பிறப்பைவிட வளர்ப்புதானே முக்கியம்.

**முதியோர் சாபம் :**

அயோத்தியா காண்டத்தில் தசரதனின் சாபம் பின்னோக்கு உத்தியாக அமைந் துள்ளது. இராமன் முடிசூடும் நல்லநாளில் தயரதன் சாபம் பெற்ற வரலாறு அனைவ

வருக்கும் தெரிய வருகிறது. இந்நிகழ்ச்சியே 'இராமன் முடிசூடக்கூடாது' என்பதற்கு மணிமகுடமாகக் கம்பர் காட்டுகிறார்.

இதற்குப்பின், 'இராமன் முடிசூடவில்லை காடு செல்கிறான். பரதன் முடிசூடப் போகிறான்' என்ற செய்தி வசிட்டன் மூலம் தசரதனின் அரச குடும்பத்தினர் அல்லாத மற்றையவர்களுக்கெல்லாம் அறிவிக்கப்படுகிறது. அனைவரின் அவலமும் தொடங்குகிறது. களிபேரின்பம் கழிபேரிரக்கம் ஆகிறது. அங்கிருந்தவர்களின் மனநிலையை

"புண் உற்ற தீயின் புகை உற்ற உயிர் பதைப்ப
மண் உற்று அயர்ந்து மறுகிற்று, உடம்பு எல்லாம்.
கண் உற்ற வாரி கடல் உற்றது; அந்நிலையே,
விண் உற்றது, எம் மருங்கும் விட்டு அழுத பேர் ஓசை.

என்கிறார் கம்பர். இதன்மூலம் சாபத்தின் கொடுமை காட்டப்பட்டுள்ளது. இதனைத்தான் வள்ளுவர் 'உள்ளத்தால் உள்ளலும்' தீதே என்றார். எத்தனையோ உள்ளங்களின் ஆசை, எதிர்பார்ப்பு, விழிஇழந்த பெற்றோரின் சாபத்தால் நிராசைகள் ஆகின்றன. அவர்கள் நிலையில் அதுசரியானது என்றாலும் அச்சாபத்தின் பாதிப்பு பல உயிர்கள் துன்பப்பட வேண்டியுள்ளது.

மகிழ்வோடு பூண்ட அணிகலன்களும், வாசனைப்பொடிகளும், கூந்தலில் சூடிய பூக்களும் விழ பூங்கொடி போன்று மகளிர் மண்மகள் மடியில் வீழ்கின்றனர். 'ஆற்றாது அழுதகண்ணீர் அன்றே' என்பது போல அயோத்தி மாந்தர்கள் அழுத கண்ணீர் தெருக்களில் ஆறுபோல ஓடியதாகக் கம்பர் குறிப்பிடுகிறார்.

நிலமகளும், திருமகளும் பாவம் செய்துள்ளனர். அதைக் காட்டிலும் பூவுலகத் தோர் செய்தபாவமே பெரிது எனச் சிலர் புலம்புகின்றனர். சிலர் தங்களது ஊழ்வினையே பெரிது என வருந்துகின்றனர். சிலர் கொற்றம் தரும் முடியே இடையூராகி வந்ததே! இத்தனையும் கண்டும் கேட்டும் இன்றும் இறவாது உள்ள நாமே கொடியவர்கள் என்கின்றனர் இக் கூற்று.

"காதல ரிறப்பின் கனையெறி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின், நளிஎரி புகுவர்;
நளியெறி புகாஅ ராயின் அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடன் படுவர்
பத்தினிப் பெண்டிர்"

என மணிமேகலை பத்தினிப்பெண்டிரின் இயல்பை விளக்குவதோடு ஒத்துள்ளது. இங்கு மக்கள் மன்னன் மீது வைத்திருந்த அளவுகடந்த அன்பு கற்புடை மாந்தர் கணவனிடத்துக் கொண்ட அன்பினைவிட உயர்ந்த அன்பாகக் கம்பர் காட்டியுள்ளமை புலனாகும்.

நகரமாந்தர்களில் சிலர் கோசலையை நினைத்து அழுகின்றனர். இலக்குவனை நினைந்து புலம்புகின்றனர். இதன் மூலம் முடிசூடுவதற்கு முன்பே இளைஞர்கள்

பொதுமக்களிடத்தில் நெருங்கிப் பழகிய இயல்பும் அதனால் மக்களிடத்தில் அவர்கள் பெற்ற நன்மதிப்பும் புலனாகிறது.

**கணிகையர் :**

கள் அருந்தும் கணிகையர் கைகேயியைத் தங்கள் குலமகளாகவே கருதுகின்றனர்.

"கள்ஊறு செவ்வாய்க் கணிகையரும் கைகேசி
உள்ஊறு காதல் இவள்போல் என்று உள் அழிந்தார்."

என்பது பரத்தையார் மொழிந்த சொற்கள். தனது பேராசையால் பரத்தையர் நிலைக்குத் தள்ளப் படுகிறாள் கைகேயி. இதனால் அரசகுலப் பெண்கள் மரபுக்கு மாறாக நடத்தல் கூடாது என்பது உணர்த்தப்பட்டுள்ளது. மைந்தரில் மூத்தோருக்கே அரசு என்பது மரபு.

தயரதனைக் குற்றவாளியாகவே கருதுகின்றனர் மாந்தர்கள். தயரதன் தவம் செய்யச் செல்ல வரம் கொடுத்தானா? உலகத்துள் உயிரோடு வாழ்வாரை உயிரோடு அழிக்கக் கருதினார் போலும் இது நன்றாக இருக்கின்றது என்கின்றனர்.

முடியாட்சியில் குடிமக்களுக்கு அரசவையில் உரிமையில்லை. அவர்கள் குடிகளே. தயரதன் வரம் கொடுத்தது, கைகேயி வரம் பெற்றது இவற்றையெல்லாம் இகழ்ந்த மாந்தர் கைகேயி இராமனுக்குக் காடு கொடுத்துள்ளாள். தன் மகனுக்கு நாடு கொடுத்துள்ளாள், நாம் எல்லோரும் இராமன் பெற்ற காட்டை நாடாக்குவோம் என்று சூளுரைக்கின்றனர். இது நாட்டு மக்களது புரட்சியைக் காட்டுகிறது.

தசரதன் அரசவையில் இராமனுக்கு நாடு கொடுக்க உறுதியளித்துவிட்டுக் கைகேயியின் அந்தப்புறத்தில் இராமனின் தம்பிக்கு அரசு கொடுத்தால் அறம் பிழையாதா? என வினவுகின்றனர். "அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்" என்பது மரபு. அறம் கூற்றாகிறது. மன்னவன் மடிகிறான். மக்களின் கேள்விக்குப் பதில் கிடைத்து விடுகிறது.

**பரதன்மீது வெறுப்பு :**

பரதனது உண்மைநிலை உணராத மக்கள் சீதை காடு சென்றால் கூடத் 'திரு'நாட்டில் வீற்றிருக்கும். ஆனால், பரதன் முடிசூடின் 'திரு' பார்த்துக்கொண்டிருப்பாளா? என்கின்றனர். இதனால் பரதனது ஆட்சியில் செல்வம் விளங்காது என மக்கள் கருதுகின்றனர். கைகேயிமீது கொண்ட கோபம் பரதன் மீதும் தொடர்கிறது. அவனும் மக்களது சாபத்திற்கு ஆளாகிறான். எல்லாவற்றுக்கும் மேலாக இராமனின் அருள் பார்வையை இனி பிரியப்போகிறோம். இது நம் விதியே! என்கின்றனர் நகர மாந்தர். இதன் மூலம் இராமன் முடிசூடும் முன்பே மக்கள் மீது தண்ணளிகாட்டியமை புலனாகிறது.

இராமன் காடு செல்லத் தெருவில் செல்கிறான். இதைக் கண்ட அயோத்தி மக்களின் துன்பம் கரை கடந்து செல்கிறது. துன்பத்தினால் மனம் நொந்து மற்றைய அரசர்களைப் பார்த்து 'அறத்தை நிலை நிறுத்துங்கள்; இராமனை ஆட்சியில் அமர்த்துங்கள்; இல்லையேல் நீங்களும் கைகேயியை ஒத்தவர்கள் ஆவீர்' எனச் சபிக்கின்றனர்.

இறுதி முடிவாக நகர மாந்தர்கள் "வீரன் முன்வனம் மேவுதும் யாம்" என முடிவு செய்து அனைவரும் காட்டை நோக்கிச் செல்கின்றனர். அங்கு ஒரு சோலையில் தங்குகின்றனர். உணவு உண்ணாது, அழுது அழுது ஆற்றங்கரையிலுள்ள புல் தரைகளில் சோர்ந்து அமர்ந்துள்ளனர்.

மங்கையர் வெள்ளை ஆடையினையே படுக்கையாகக் கொண்டு உறங்கினர். சிறுமியர்கள் மானைப் போல சுருண்டு கிடந்தனர். இளமகளிர் பெண் யானைகள் போல உறங்கினர். இளைஞர்கள் களிறுகள் போல் உறங்கினர். பெண்கள் மயில்களினது கூட்டம் போலவும் அன்னங்களின் கூட்டம் போலவும் உறங்குகின்றனர். விலங்குகளில் மருட்சியும் மென்மையும் உடையது மான். மென்மைக்கு உதாரணம் காட்டப்படுவது அன்னம். இவ்விரண்டுமே அயோத்தி மகளிருக்கு உவமை காட்டப்பட்டுள்ளது. எனவே, அவர்கள் "மோப்பக் குழையும் அனிச்சமாக" வாடி, மனம் நொந்து, சுருண்டு எதுவும் அறியாத மென்மைக் குணம் கொண்டவர்களாக உறங்கும் நிலை புலப்படுத்தப் பட்டுள்ளது.

சில பெண்கள் கொழுநனது முகத்தையும், கருணையையும் அனுபவியாது உயிர் ஒடுங்கியது போன்று கிடக்கின்றனர். அவர்களது குழந்தைகள் பசியால் துடித்து தாயினது மார்பை நெருடிக் கொண்டிருந்தன என்கிறார் கம்பர். எவ்வளவு கொடுமை. பால் நினைந்து ஊட்டுபவள் தாய். ஆனால் சோகத்தால் குழந்தை நெருடியும் பாலூட்டும் நினைவு தாய்க்கு எழவில்லை. சோகம் மகவீன்ற தாயின் கடமையைக் கூட தடுக்கும் போலும் உண்மைதானே.

இராமனும் சோலையில் உறங்குவதாக எண்ணி நகர மக்கள் உறங்குகின்றனர். விடியல் வருகிறது. மக்கள் விழித்தெழுகின்றனர். சோலையில் இராமன் இல்லை. காட்டின் உட்பகுதிக்குச் சென்று விட்டான். இதைக் கண்ட மக்கள் மிகவும் வருந்து கின்றனர். இதனைக் கம்பர்,

"வருந்தா வண்ணம் வருந்தினார்-மறந்தார் தம்மை வள்ளலும் ஆங்கு
இருந்தான் என்றே இருந்தார்கள் எல்லாம் எழுந்தார் அருள் இருக்கும்
பெருந்தாமரைக் கண் கருமுகிலைப் பெயர்ந்தார் காணார் பேதுற்றார்
பொருந்தா நயனம் பொருந்தி நமைப் பொன்றச் சூழ்ந்த எனப்
புரண்டார்"

எனப் பாடியுள்ளார்.

இராமனது தேர் நகர்நோக்கி சென்ற சுவட்டினை மக்கள் காண்கின்றனர். சற்று ஆறுதல் அடைகின்றனர். ஆனால் இராமன் நாடு செல்லவில்லை என்ற உண்மையை வசிட்டர் மூலம் மக்கள் உணருகின்றனர். அவர்களுக்கு வசிட்ட முனிவர் அன்பான ஆறுதல் வார்த்தைகள் கூறி நகருக்குச் செல்ல வேண்டுகிறார்.

இராமன் முடிசூட்டு விழா தடைபட்ட செய்தி வசிட்டர் மூலம் தான் வெளியாகிறது. இவற்றையெல்லாம் நோக்கும் பொழுது மன்னருக்கும் மாந்தருக்கும் முனிவர்களே பாலமாக இருந்தமை தெளிவாகிறது.

இராமனின் முடிசூட்டுவிழா பெண்களின் நாணத்தை நீக்குகிறது. காமக் கடலைக் கடக்கும் தெப்பமாக அமைகிறது. அரச குடும்பவிழா பொதுவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. எல்லோருக்கும் மகிழ்ச்சிதரும் விழாவாகிறது. அம்முடிசூடுதல் இராமபிரானுக்கு இல்லை என்றவுடன் மக்கள் தங்கள் வாழ்க்கையை வெறுக்கின்றனர். தங்கள் விதியை நோகின்றனர். முடிசூடாமைக்குக் காரணமானவர்களைச் சபிக்கின்றனர். இச்செய்திகளெல்லாம் கம்பரின் அயோத்தியா காண்டத்தில் இடம்பெறும் மாந்தரின் நிலைகள். இதன்மூலம் "மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி" என அயோத்தி மாந்தர் அரசனையே நம்பி வாழ்ந்தமையைத் தெளிவுபடுத்தியுள்ளார் கம்பர் என்பது புலனாகிறது.

# பரத்துவாச முனிவன்

*

கவிஞர் திரு. இரா. கோபாலன்

கம்பனது இராமகாதையில் வரும் பரத்துவாசன் வனத்திலே இராமனுக்கும், பின்னர் பரதனுக்கும் சிறிது உதவிய ஒரு சிறிய பாத்திரம். தவநெறியில் ஒழுக்க சீலராக வாழ்ந்த அந்த முனிவனைப் பற்றிக் குறிப்பிடும் போது கம்பன் கீழ்க்கண்ட அடைமொழி களை உபயோகிக்கிறான் :

1) பரமுனி 2) நெறிபேணும் நடையினன்
3) மறை நாலும் நடம் நவில் தரு நாவான் (வேதம் நான்கும் ஓதியுணர்ந்த உத்தமன்)
4) செந்தழல் புரி செல்வன் (யாகத் தீ வளர்ப்பவன்)
5) உயிர் எல்லாம் தன் உயிர் என நல்கும் அந்தணன்
6) உலகம் ஏழும் அமை எனின் உதவிடும் தொழில் வல்லான்
7) நல்தவமுனி 8) மறையோன் 9) பூண்டமாதவன் 10) மாதவத்தோன்
11) இந்துமோலி அன்னான் (பிறை சூடிய சிவபெருமான் போன்றவன்)
12) தீயின் ஆகுதிச் செல்வன் 13) துறந்த செல்வன் (யான், எனது என்னும் அகப்பற்று, புறப்பற்றுகளைக் கைவிட்ட தவச்செல்வத்தையுடையவன்)
14) பன்னரிய நோன்பின் பரத்துவன்
15) பண்டை நூல் தெரிபரத்துவன் (பழமையான வேதங்களை ஆராய்ந்தறிந்தவன்)
16) பரத்தின் நீங்கும் பரத்துவன் (வினைச் சுமையிலிருந்து விலகியவன்)

தந்தையின் சொற்காக்க, நாடுநீங்கி, குகன் துணையால் கங்கையைக் கடந்து அதன் தென்கரையடைந்து காட்டிற் புகுந்த இராமனைக் காணவந்த பரத்துவாசனின் தோற்றத்தைப் பின்வருமாறு கம்பன் வர்ணிக்கிறான் :- "கையிலே குடைபிடித்திருந்தான். உயர்ந்த தண்டத்தைக் கையில் ஏந்தி நின்றான். கமண்டலம் கைபற்றி நின்றான். மிகுந்த சடைமுடி உடையவனாக இருந்தான். மான்தோல் போர்த்தியிருந்தான். மரவுரி தரித்திருந்தான். மயிர் தொங்குகிற வடிவத்தை உடையவனாக இருந்தான்". இப்படிபட்ட தோற்றத்தை வெளியே சொண்ட அம்முனிவனின் உள்ளேயிருந்ததோ ஒழுக்கசீலம். நன்னெறியைப் பாதுகாக்கும் ஒழுக்கத்தையுடையவனாக இருந்தான். இன்னும் விரித்துச் சொல்லப் போனால், ஒழுக்க நெறிகளெலாம் ஒன்று கூடி இவனைப் பேணி வளர்த்தன என்று சொல்லும்படியாக அமைகிறது இம் முனியைப் பற்றிய கம்பன் வாக்கு, நெறிபேணும் நடையினன்; அவனது அளவிடற்கரிய ஆற்றலை விவரிக்கும் பொழுது கம்பன் கூறுவது.

……'உலகேழும்
அமை' எனின் அமரேசன்
உந்தியின் உதவாமே
உதவிடு தொழில் வல்லான்.

நான்கு முகங்களைக் கொண்ட பிரமதேவன் படைத்த உயிர்களையெல்லாம் தன் உயிரைப் போலப் பாதுகாக்கும் நல்லுள்ளம் கொண்ட அந்த அந்தணன் ஆகிய பரத்துவாசன் 'ஏழுலகையும் படைக்க வேண்டும்' என்று சொன்னால் பிரமன், தேவாதி தேவனாகிய திருமாலின் நாபிக் கமலத்தின் மூலமாக எல்லாவற்றையும் படைத்தது போல் அல்லாமல் தானே தனது சங்கற்பத்தாலே, எண்ணிய அளவிலேயே உடன்படைக்கும் ஆற்றல் பெற்ற தொழில் வல்லானாக இருந்தான். (எண்ணிலா அருந்தவத்தோன் ஆகிய விசுவாமித்திர முனிவன்கூட, பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் திசைதோறும் தவம் இயற்றி, அத்தவ வலிமையால் திரிசங்குவிற்காக ஒரு உலகைப் படைக்க முடிந்தது. ஆனால் பரத்துவாசனோ எண்ணிய மாத்திரத்திலேயே ஏழுலகங்களையும் படைக்க வல்லவனாக இருந்தான்.)

அவ்வளவு தவவலிமையுடைய பரத்துவாச முனிவன், தந்தை சொற்காக்க இராமன் தன் தம்பியுடனும் மனைவி சீதையுடனும் தான் வசிக்கும் காட்டிற்கு வந்த பொழுது அவர்களை எதிர்கொண்டு அழைக்க வந்தான். வந்த முனிவனை இராமன் மலர்களைத் தூவித்தொழுதான். அந்த முனிவன் அரச குமாரர்களைத் தவவேடத்தில் பார்த்தவுடன் வருந்திக் கண்ணீர் உகுத்தான்.

> "இம்முறை உருவோ நான்
> காண்குவது?" என உள்ளம்
> விம்மினன்; இழிகண்ணீர்
> விழிவழி உகநின்றான்"

பின் இராமனை நோக்கி, "பகைவர்களை அழிக்கின்ற வில்லையுடைய வீரனே! நீயோ இளவரசன்; பரந்த உலகம் முழுமையும் நீண்ட காலம் ஆளத் தகுந்தவன். அப்படியிருக்கும்போது, அரசகோலத்தை விடுத்து, எம்போன்ற தவமுனிவர்கள் வாழும் குகைகள் உள்ள இவ்வனத்திடை, மரவுரியும் சடையும் தாங்கி உனக்குப் பொருந்தாத தவக் கோலம் பூண்டு தம்பியுடன் வந்ததன் காரணம் என்ன?" என்று பரிவுடன் வினவினான். இராமன் இதற்குப் பதில் கூறவும், முனிவன், "ஐயகோ! இது விதியால் நேர்ந்த துன்பம்! இப்படியும் நடக்குமா? உன்னைப் பெறுவதற்குத் தவம் செய்த பூமாதேவி, உன்னால் ஆளப்படுவதற்கான பெருமையில்லாமல் போய்விட்டாளே!" மேலும் தூயமொழி பேசும் சீதையுடன் இவ்வுலகத்தை நீ ஆள்வாய் என்று கூறிய உன் தந்தை பின்னர் காட்டிற்கு ஏகுவாயாக என்று கூறநேர்ந்தபின் எவ்வாறு உயிருடன் வாழ்வான்?" என்று மனம் நொந்து தன் உணர்வுகளை வெளிப்படுத்தினான். பின்னர், நான் இவ்வாறு துயருறுவதில் ஒருவிதப் பயனும் இல்லை. துன்பமும் இன்பமும் வாழ்க்கையில் மாறி மாறி வரும். நாம் செய்த நல்வினைகளும் உள. தீவினைகளும் உள. அவற்றின் பயனே இன்ப துன்பங்கள்" என்று கூறி அவர்களை அழைத்துக் கொண்டு தனது தவச்சாலைக்குச் சென்றான். அங்கு அவர்களுக்கு அன்புடன் உறைவிடம் நல்கி, உண்ணத் தக்கவையான காய்கனிகளைக் கொடுத்து நல்ல இனிய உபசாரவார்த்தைகளைச் சொல்லி அவர்களுக்கு அருள் செய்தான். அவர்களும் அவர் காட்டிய பரிவினால் உளம் மகிழ்ந்தனர்.

பொழுது புலர்ந்தபின், இராமனுடன் சேர்ந்திருந்தால் தனக்கும் நற்கதி உய்க்கும் என்ற உணர்வு கொண்ட பரத்துவாச முனிவன், அவர்களுக்கு வேண்டிய அனைத்துக் காரியங்களையும் இனிமையாகச் செய்து விட்டு இராமனை நோக்கி "ஐய! இவ்விடத்தில் நீர்வளம் உளது. பூக்களும், பழங்களும் கிழங்குகளும் காய்களும் நிறைய வழங்கும் நிலவளமும் உள்ளது. இவ்விடத்தில் வாழ்ந்தால் தீவினைகள் அகன்றுவிடும்.

நற்செயல்களுக்கு இங்கு யாதொரு குறையும் இல்லை. ஆகவே எம்மோடு நீங்களும் சேர்ந்து வசியுங்கள். மன ஒருமையோடு தவம் செய்கிறவர்களுக்கு இதைப்போல வேறு ஒரு இடம் கிடைப்பது மிகவும் அரிது. அதுவும் தவிர, கங்கையுடன் யமுனை நதியும் சரஸ்வதி நதியும் கலக்கும் இடம் இது. பிரம்ம தேவனுக்கும் கிடைத்தற்கரிய ஒரு புண்ணிய தீர்த்தமாகும் இது. ஆகையால்தான் இவ்விடத்தைவிட்டு அகலாமல் இருக்கிறேன். இது மிகவும் பெருமை பொருந்திய இடம் ஆகலின் நீங்களும் இங்கேயே தங்கி விடுங்கள்'' என்று கூறினான். அதற்கு இராமன், ''ஐய! இவ்விடம் கோசல நாட்டுக்கு நெடுந்தொலைவில் உள்ளது அல்ல. ஆகவே நான் இங்கு இருந்தால் என் நாட்டு மக்கள் யாவரும் விரைவாக என்னிடம் வந்து விடுவார்கள். அவர்களது வருகை என் தவத்திற்கும் முனிவர்களின் கடமைகளுக்கும் இடையூறு விளைவிக்கும் என்று பதில் கூறினான்.

இராமனது கூற்றில் உள்ள உண்மையை முனிவனும் உணர்ந்து ஏற்றுக் கொண்டு இராமனிடம் அவன் இனிச் செல்ல வேண்டிய இடம் பற்றி விபரம் அளித்தான். அங்கிருந்து பத்துக் காத தூரம் சென்ற பிறகு, தேவர்களும் வணங்கக் கூடிய சித்திரகூடம் என்ற புகழ் வாய்ந்த மலையுள்ளது என்றும் அங்கு அவர்கள் தங்குவது நல்லது என்றும் முனிவன் கூறலும் அம்மூவரும் முனிவனை அடிபணிந்து வணங்கி அவனிடமிருந்து விடை பெற்றுச் சென்றனர்.

இதன்பின்னர் நாம் பரத்துவாச முனிவனைக் காண்பது, தயரதன் இறந்த பின்னர் அயோத்தி வந்தடைந்த பரதன், செய்திகள் எல்லாம் தெரிந்து, கைகேயியைச் சினந்து பேசிவிட்டு, அவள் எண்ணத்திற்கு உடன்படாமல், இராமனைத் திரும்ப அழைத்து வருவதற்காகத் தாயர், தவத்தவர், தந்தையின் மந்திரியர், சுற்றம், அந்தணர் ஆகியோர் தொடர்ந்து சூழ்வர, சேனையுடன் சென்று, கங்கையைக் கடந்து, பல காததூரம் சென்ற பின், பரத்துவாசனின் ஆசிரமத்தை அணுகிய போதுதான், பரதன் வருவதைக் கண்ட பரத்துவாசன் அறுதொழில் உடைய அந்தணரோடு எதிர்வந்து வரவேற்றான். அம்மா தவத்தோனைத் தன் தந்தை போல் எண்ணி பரதன் தாழ்ந்து வணங்கினான். முனிவனும் இரங்கி ஆசி கூறி அருள் பாலித்தான். பின்னர் பரதனிடம், ''ஐய! உன்னிடம் தானே வந்து சேர்ந்த கோசலை ராச்சியத்தை முடிசூடிக் கொண்டு ஆளாமல், மரவுரிதரித்து வார்சடைக் கற்றையுடன் வனம் வந்த காரணம் என்ன?'' என்று வினவினான், இதைக் கேட்டதும் சினத்தால் கொதித்த மனத்தினனான பரதன், ''மாதவத்தோய்! எனக்குப் பொருந்திய சொற்களை நீ கூறவில்லை உன் தவநிலைமைக் கொத்த சொற்களையும் கூறவில்லை', என வெகுண்டு, பின்னர் சற்றுச்சினம் தணிந்து, இராமனுக்குத் தம்பி என்ற முறையிலிருந்து வழுவி, அரசை ஏற்றுக் கொள்ள முடியாது என்றும். இராமன் அரசை ஏற்றுக் கொள்ள மறுத்து, திரும்பி அயோத்திக்கு வர இசையாவிட்டால், தானும் பதினான்கு ஆண்டுகள் கானகத்தில் அவனுடனேயே தங்க முடிவு செய்துள்ளதாகவும் கூறினான். பரதன் இவ்வாறு கூறியதைக் கேட்டதும் பரத்துவாசனும் மற்றுமுள தவத்தோர் அனைவரும் உடலின்மேல் சந்தனம் அப்பியதுபோல் உள்ளம் குளிர்ந்தனர் மனமகிழ்ந்த பரத்துவாசன் பரதனைத் தனது தூய்மையான தவச்சாலைக்குள் அழைத்துச் சென்றான்.

பின்னர், பரதனுடன் வந்த பெரிய சேனைக்கும் மற்றவர்களுக்கும் நல்ல விருந்து அளித்து மகிழ்விக்கத் தன் மனதில் எண்ணம் கொண்டான். அகப்பற்று, புறப்பற்று ஆகியவற்றை அறவே துறந்த அத்தூய தவச்சீலன் நினைத்த அளவிலேயே, சுவர்க்க லோகமே விண்ணிலிருந்து மண்ணுக்கு இறங்கி வந்து, அவ்வனத்திடைத் தங்கியது. சுவர்க்கபோகங்கள் அனைத்தும் அங்கேயே கிட்டியதால் பரதனுடன் வந்த பல மக்கள் கூட்டமும், தாங்கள் மறுபிறப்பெடுத்து, வேறு உலகத்தையடைந்தவர்கள் போல உணர்ந்து, தங்களது முந்தைய வாழ்க்கையை முற்றும் மறந்து இன்பத்தில் ஆழ்ந்தார்கள். தேவலோகத்தில் உள்ள இன்பம் நல்கும் அரம்பையர் அன்புடன் மகிழ்ந்து வந்து,

ஆடவர்களையெல்லாம் வரவேற்றுக் கொண்டாடி, நிலவென விளங்கும் அரண்மனைக்குள் கூட்டிச் சென்று, வாசனைப் பொடிகளை அவர்களது உடலில் பூசியும், ஆகாய கங்கையின் அரும்புனலால் நீராட்டியும், கற்பகத்தரு நல்கிய குறையற்ற மலராடைகளை அணிவித்தும், செம்பொன் அணிகளை நன்கு அணிவித்தும், தேவேந்திரன் உண்ணக் கூடிய அமுத உணவினை அன்புடனே ஊட்டியும் உபசரித்தபின் அழகான மெத்தையின் மேல் சயன சுகம் அளித்தனர்

பரதனுடைய சேனையில் உள்ள அரசர் முதல் சிவிகை தூக்கும் வீரர் வரை உள்ள அத்தனை பேருக்கும் அவரவர்க்குரிய முறையில் சிறிதும் குறைவு படாமல் உபசரித்து, கூந்தல் அழகு கொண்ட ஏந்திழையரான தேவமாதர்கள், மிக்க செல்வத்தை யுடைய தேவர்களைக் கொண்டாடுதல் போலப் பாராட்டி உபசரித்தனர்.

பரதனுடன் வந்த மகளிர் அனைவருச்கும் கொவ்வைக் கனிவாய்த் தேவ மாதர்கள் சேடியர்போலும் குற்றேவல் செய்யும் பணிப் பெண்கள் போலும் தொண்டு செய்ய, அவர்களெல்லாம் இதுவரை அனுபவிக்காத மகிழ்ச்சி தேவமாந்தர்களால் அவர்களுக்குக் கிட்டியதால் அவர்கள் மிகவும் இன்பத்தில் திளைத்தனர்.

எங்கும் இன்பம் பெருகும் சூழல் அங்கு உருவாயிற்று. அன்றலர்ந்த மலர்களின் நறுமணம் கற்பகச் சோலைகளிலிருந்து பெருகி வாடைக் காற்றில் பவனி வந்தது. சேனையில் உள்ள யானைகள் யாவும் அங்குள்ள கற்பக மரங்களில் உள்ள தேன் மிகுதியால் கலக்கப் பெற்ற உணவு உருண்டைகளையும் செங்கதிர் கொண்ட நெற்பயிர்க் கதிர் கட்டுகளையும் நன்கு உண்டு இன்புற்றன. குதிரைகளும் மரகத மணியென ஒளிர்ந்த பசுமையான நீண்ட புல்லை உண்டன.

இவ்வாறாக, பரத்துவாச முனிவனின் தவவலிமையால், வானிலிருந்து இறங்கி வந்த சுவர்க்கத்தின் இன்பங்களையெல்லாம் மற்றவர்கள் ஆய்ந்து இன்புற்ற வேளையில் பண்புக்குன்றாம் பரதன் மட்டும் எவ்வித இன்பமும் அனுபவிக்காமல், வனத்தில் உள்ள காய் கிழங்குகளை உண்டும் தன் உடலில் புழுதிபடியுமாறு தரையில் கிடந்தும் அந்நாளைக் கடத்தினான்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. போகம் மறைந்தது. சேனை எழுந்தது. அனைவரும் அந்த இடத்தை விட்டகன்று பாலை நிலத்தையடைந்தனர். பின்னர் அச்சேனை சித்திரகூடம் சேர்ந்தது. அங்கு பரதன் இராமனைச் சந்தித்து, தயரதனது மரணத்தைத் தெரிவித்து, இராமனைத் திரும்பி வந்து அரச மகுடம் சூட்டிக் கொள்ளுமாறு வேண்ட, இராமன் உடன்படாத நிலையில், இறுதியில் அவனது பாதுகைகளைப் பெற்றுக் கொண்டு, அவற்றையே இராமனுக்குப் பதிலாக நாட்டை ஆட்சி செய்ய எண்ணி நாடு திரும்ப முற்பட்டான் பரதன். அந்நிலையில் பழமையான வேதங்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்தறிந்த பரத்துவாச முனிவனும் அவர்களை யெல்லாம் பிரிந்து தன் இருப்பிடம் அடைந்தான்.

இவ்வாறாக செயல்பட்ட பரத்துவாச முனிவன், இராமகாதையில் ஒரு சிறிய பாத்திரமாக அமையப் பெறினும், வனத்திற் புகுந்த இராமனுக்கும், பின்னர் அவனைத் தேடித் திரும்ப அழைத்துச் செல்ல வந்த பரதனுக்கும் அன்போடு உதவிய ஓர் அரும் பாத்திரமாகும்.

## கம்பனே மீண்டும் வா!

கவிசிறக்க வந்தனை வாவாவா!

புவிபுரக்க வந்தனை வாவாவா!

செவிஇனிக்கப் பாடினாய் வாவாவா!

கவிகளுக்குத் தலைவனே வாவாவா!

காலம்போற்றும் கம்பனே வாவாவா!



geethanjali, cbe-37 ✆ 211424, 218618